# சமூகவியல்

(பட்டப்படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகின்றது)

ஆசிரியர்

செல்வி இரா. கல்பகம், எம்.ஏ. (தத்துவம்),
எம்.ஏ. (சமூகவியல்), டிப். (மானிடவியல்),

தலைமைப் பேராசிரியை, சமூகவியல் துறை,
இராணி மேரி கல்லூரி, சென்னை.




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. ப. நி. (க.வெ.) வரிசை எண் — 503

# ச மூ க வி ய ல்

(பட்டப்படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகின்றது)

ஆசிரியர்

செல்வி **இரா. கல்பகம்**, எம்.ஏ. (தத்துவம்),
எம்.ஏ. (சமூகவியல்), டிப். (மானிடவியல்),

தலைமைப் பேராசிரியை, சமூகவியல் துறை,
இராணி மேரி கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன்றுண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெரு முயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **'சமூகவியல்'** என்ற இந் நூல் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **503** ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **538** நூல்கள் வெளி வந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப் படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை ; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# பொருளடக்கம்

பக்கம்

# 1. அறிமுகம்

## 1. சமூக இயலின் இயற்கைத் தோற்றம்—நோக்கம்—அணுகும் முறைகள்—பயன்

## (Nature, Scope and Utility of Sociology)

இன்றைய அறிவியற் கலைகளில் சமூக இயல் முக்கியத்துவம் பெற்றுள்ளது. சமூக இயல் அகஸ்டே காம்டே (Auguste Comte) என்னும் பிரான்சு தத்துவ சமூகப் பேரறிஞரால் 1839 ஆம் ஆண்டில் முதன் முதலாகத் தோற்றுவிக்கப்பட்டது. சமூக இயல் அண்மையில் தோன்றியதால் உலகிலுள்ள மற்ற இயல்களைக் காட்டிலும் இளமையானது. இச் சொல், சமூகம் + இயல் என்னும் சொற்களின் சேர்க்கையாகும். ஆதலால், இலக்கண முறைப்படி 'அறிவியல் சமூக இயல்' என்று கூறப்படுகின்றது.

சமூக இயலின் தோற்றம், இயற்கை முதலியவற்றைப்பற்றிப் பல அறிஞர்கள் விரிவாகக் கூறியுள்ளனர். பொதுவாகச் சமூக இயல் மக்களின் வாழ்க்கையில் தோன்றும் நிகழ்ச்சிகளை அறிய மனிதன் மேற்கொண்ட முயற்சிகளாகும். அவையாவன: குழு வாழ்க்கையை ஆராய்ந்தறிய முற்படுகின்றது. சமூகத்தின் நடத்தைகள் செயல்முறைகள் ஆகியவற்றின் அடிப்படைகளை எடுத்துக்காட்டுகின்றது. சமுதாயத்திலுள்ள தனி மனிதரிடையேயும் குழுக்களுக்குள்ளும் நிகழும் ஊடாட்டங்களின் தன்மை இவை ஏற்படக் காரணங்கள், இவற்றால் உண்டாகும் விளைவுகள் ஆகியவையெல்லாம் சமூகவியலினுல் ஆராயப்படும் பொருள்களாகும். சமூக இயல் மக்களின் கூட்டு வாழ்க்கையின் இயல்புகளையும், அவர்கள் அவ்வாறு கூடி வாழ்தலின் நோக்கங்களையும் கூட்டு வாழ்க்கையில் காணப்படும் பல வகைத் தொடர்புகள். அவை தோன்றும் முறையையும் மேலும், காலப்போக்கில் எவ்வெவ்வகையில் மாறுதல்களைப் பெறுகின்றன என்பதைப் பற்றியும் கூட்டு வாழ்க்கையில் தோன்றும் நம்பிக்கைகள் பழக்க வழக்கங்கள்

ஆகியவற்றைப் பற்றியும் அறிவுறுத்த முற்படுகின்றது. சமூகத்தைப் பற்றிய முழு அறிவே சமூக இயலாகும். சமூக இயலின் முக்கியக் குறிக்கோள் சமுதாயத்தில் ஏற்படும் நிகழ்ச்சிகளைப் பற்றிய உண்மை அறிவைப் புகட்டி மனிதனின் வாழ்க்கையில் எதிர்ப்படும் சமூகச் சிக்கல்களை தீர்க்க முயல்வதாகும். பண்டைக்கால முதல் சமுதாயம் என்ற நிறுவனம் இல்லாவிடினும் சமூகத்தைப் பற்றிய சில கருத்துக்கள் பல்வேறு அறிஞர்களின் நூல்களில் சிற்சில இடங்களில் காணப்படுகின்றன. பிளேட்டோ (Plato), அரிஸ்டாட்டில் (Aristotle) போன்ற கிரேக்கத் தத்துவ மேதைகள் தத்தம் நூல்களில் சமூகத்தைப் பற்றிய சில கருத்துக்களையும் உண்மைகளையும் எடுத்துரைத்துள்ளனர். 16 ஆம் நூற்றுண்டில் மக்கிய வலி (Machia Veli) என்பவர் எழுதிய 'அரசிளங்குமரன்' (The Prince) என்னும் நூலில் அரசு பற்றிய பல விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. தாமஸ் மூர் (Thomas Moore) கம்பநெல்லா (Companella), ஃபிரான்ஸிஸ் பேக்கன் (Francis Bacon), மாண்டஸ்கு (Montes quieu) போன்ருேரின் நூல்களிலும் சமூகம் பற்றிய பல கருத்துக்கள் அறியக் கிடக்கின்றன. ஆனுல், இவை யாவும் ஆராய்ச்சி முறைப்படி முறைப்படுத்தப்பட்ட கருத்துக்கள் ஆகா. எனினும் இவ்வறிஞர்களின் நூல்களே சமூக இயலின் முன்னேடிகளாக விளங்குகின்றன. சமூக இயலின் தன்மை, நோக்கம் இவற்றை முதன்முதலாக அறிவியல் முறைப்படி ஆராய்ந்து சமூக இயல் என்னும் தனிப்பட்ட அறிவியல் பிரிவைத் தோற்றுவித்தவர் 19 ஆம் நூற்றுண்டில் பிரான்சு தேசத்தில் வாழ்ந்த அகஸ்டே காம்டே (Aguste Comte 1798-1857) என்னும் சமூக தத்துவ அறிஞராவர். மற்றும் ஹெர்பர்ட் ஸ்பென்சர் (Herbert Spencer) இமில் டர்க்கிம் (Emil Durkheim) மேக்ஸ் வேபர் (Max Webar) போன்ருேர் 19, 20 ஆம் நூற்றுண்டுகளில் சமூக இயலின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் பாடுபட்டுள்ளனர். மேற்கூறிய நிபுணர்கள் பிரான்சு, இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளில் சமூக இயல் எவ்வெவ்வகையில் வளர்ச்சியுற்று விரிவடைந்துள்ளது என்று விளக்கியுள்ளனர். அவர்கள் மேற்கொண்ட கொள்கைகளைப் பின்பற்றித் தற்காலச் சமூக இயல் விரிவடைந்துள்ளது என்பது புலனுகின்றது. இம் மேதைகள் சமூக இயல் நுண்ணறிவை மேற்கொண்டு ஒழுங்கு பெற்ற பாடம் என்று தத்தம் கருத்திற்கேற்ப விளக்கியுள்ளனர்.

அகஸ்டே காம்டே சமூக இயலின் பரப்பு, தன்மை முதலியவற்றை விளக்கிக் காட்டியுள்ளபோதிலும் அதன் வரம்பை முற்றிலும் எடுத்துக்காட்ட முடியாத நிலையில் அக்காலச் சமுதாயம் இருந்ததென்றும் காலப்போக்கிலே தான் சமூக இயலின் பிரிவுகள்

தோன்றியிருக்கலாம் என்றும் கூறியுள்ளார். எனினும் சமூக இயலை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளார். 1. சமுதாயத்தின் மாறா நிலை, 2. சமுதாயத்தின் மாறுபடும் நிலை என்ற இவ்விரு கருத்துக்களும் வெவ்வேறு கோணத்தில் மாறுபட்டு விளங்குகின்றன. பழங்காலந்தொட்டு இன்றுவரை ஏற்றுக் கொள்ளப்பட்ட நிறுவனங்களாகிய குடும்பம் பொருளாதாரம் அரசு போன்றவை சமூக இயல்களின் அடிப்படைத் தத்துவங்களையும் அவற்றின் தொடர்புகளையும் எடுத்து விளக்கியுள்ளன. உலகிலுள்ள சமுதாயத் தொடர்புகள் சமூக இயலின் அடிப்படைக் கோட்பாடுகளை எடுத்து விளக்குவது மட்டுமல்லாமல் மாறுபாடுகளையும் ஓரளவிற்கு வெளிப்படுத்துகின்றன. சுருங்கக் கூறின் உலகிலுள்ள சமுதாயங்கள் அனைத்தும் ஒன்றோடொன்று இணைந்து ஒருமைப்பாட்டுடன் இயங்குவதையும் அதே வேளையில் மாறுபட்ட நிலைகள் தோன்றி சமுதாயம் முன்னேற்ற மடைந்துள்ளது என்பதையும் எடுத்து விளக்குகின்றன. மேலும், அவர் சமுதாயம் ஒரு நிலையான பாதையில் விரிவடைந்து முழுமை பெற முயல்கின்றது என்றும், சமூக இயல் மற்ற சமுதாயங்களை ஒப்பிட்டுப் பார்த்து வளர்ச்சி, வளர்ச்சியின்மை முதலியவற்றை விவரிக்கின்றது என்றும் கூறியுள்ளார்.

ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் சமூக இயலின் அடிப்படைத் தத்துவம் என்னும் நூலில் சமூக இயலை முற்றிலும் புரிந்து கொள்ளுமாறு எழுதியுள்ளார். சமூக இயல் குடும்பம், குடும்பத்தின் வளர்ச்சி ஆகிய இவற்றிற்கு முதன்மை கொடுத்து இரண்டாவதாக மனிதன் செய்யத் தக்கவை, செய்யத் தகாதவை போன்றவற்றையும் தொழில் முறையில் மனிதன் எவ்வெவ்வகையில் முன்னேற்ற மடைந்துள்ளான் என்பதையும் விளக்கிச் சமூக இயலின் பரப்பைக் குறித்துள்ளார். பொதுவாக அவர் கருத்துப்படி சமூகக் கட்டுப்பாடு (Social control) முதன்மை பெற்றுள்ளது.

இமில் டர்க்கின் என்பவர் சமூக இயலின் தனிப்பட்ட பகுதிகளை ஓரளவு எடுத்துக் காட்டிய போதிலும் தனிப்பட்ட முறையில் சமூக இயல் இயங்காது என்பதையும் தக்க உதாரணங்களுடன் விளக்கியுள்ளார். சான்று: சமுதாயம்-சமயம்; சமுதாயம்-சட்டம்; திருமணம்-குடும்பம் என்பன. மேலும், அவர் அறிவியலைப் பயன்படுத்திச் சமூக இயலைப் புரிந்து கொள்வது எளிது என்று கூறியுள்ளார். அஃதாவது ஒப்புமை சமூக இயல் (Comparative Sociology) சமூக இயலைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது.

மேக்ஸ் வேபர் சமூக இயல் ஒரு தனிப்பட்ட செய்முறையை மேற்கொண்டு செயல்படுகின்றதென்று கூறியுள்ளார். மனிதனின்

ஒவ்வொரு செயலும் ஒரு காரண காரியத்தை மேற்கொண்டு சமூதாய உறவை விளக்குகின்றது. மக்களின் உறவு, அவர்தம் நடத்தை ஆகிய இரண்டும் சமூக இயலின் ஒரு தனிப்பட்ட பாடம்; மேலும், பொருளாதார வாழ்க்கை, தொழிலாளர் பிரிவு, அரசியல் குழுக்கள், வகுப்புப் பிரிவு, சாதிப் பிரிவு போன்றவற்றை உள்ளடக்கி மூன்று அடிப்படைத் தத்துவங்களை எடுத்து விளக்குகின்றன என்று குறிப்பிடுகின்றார். . சமூக இயல் பல பகுதிகளை உள்ளடக்கி அவற்றின் கருத்து, நோக்கம் போன்றவற்றை விளக்குகின்றது. . சமூக இயலின் ஒவ்வொரு பகுதியும் சமுதாயத்தின் ஒரு கோணத்தை விளக்குகின்றது. ³. ஆராய்ச்சி முறைகள், அவற்றின் முடிவுகள் சமூக இயலின் இன்றியமையாத் தன்மையை விளக்குகின்றன. பொதுவாக சமூக இயல் வல்லுநர்கள் அவ்வியலின் வளர்ச்சியைப் பாடப் புத்தகங்களின் மூலம் எடுத்துக்காட்டி விளக்கியுள்ளனர். சான்றாக அர்னால்டு கிரீன் (Arnold Green) அவர்களது புத்தகம் சமூகக் கட்டுப்பாடு கூட்டம், பொதுமக்கள் கருத்து சமுதாயத் திட்டம் போன்றவற்றிற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் மற்றைய பகுதிகளை விளக்குகின்றது. பேராசிரியர் ஜார்ஜ் லண்ட பர்க் (George Lund Berg) என்பவர் சமூக அறிவியல் முறைகளுக்கு முதலிடம் அளித்து சமூகக் கட்டுப்பாட்டை ஒதுக்கியுள்ளார். ரொனால்டு பிரீடு மென் (Ronald Freed Man) என்னும் சமூக வல்லுநர் சமுதாயப் பொது வாழ்க்கைக்கு (Community life) முக்கியத்துவம் கொடுத்து மற்ற பகுதிகளைப் புறக்கணித்துள்ளார். மேற்கூறிய கருத்துகள் அனைத்தும் சமூக இயலின் விரிந்த பரப்பை விளக்குகின்றன.

இரண்டாம் உலகப் போருக்குப் பின் சமூக இயல் சில மாற்றங்களைப் பெற்றுள்ளது. சான்று மருத்துவச் சமூக இயல் (Medical Sociology). இப்பிரிவு நோய், நோய்க்கேற்ற மருந்து போன்றவற்றின் விளைவு, முடிவுகளை விளக்குகின்றது. கிராமச் சமூக இயல் (Rural Sociology) கிராமத்தின் உடனடி (திடீர்) மாற்றம், வளர்ச்சி போக்கு முதலியவற்றை விளக்குகின்றது. பெரும்பாலும் சமூக இயல் வல்லுநர்கள் சமூக இயலின் பொதுப் பகுதிகளையும் கருத்துக்களையும் ஏற்றுக்கொள்ளுகின்றனர். அவை 1. சமூக இயலைப் பகுத்து உணர்தல் (Sociological Analysis), 2. சமுதாய வாழ்க்கையின் தொடக்க நிலை (Primary units of Social life), 3. அடிப்படைச் சமுதாய நிறுவனங்கள் (Basic Social Institutions), 4. முதன்மை பெற்ற சமுதாய வழி முறைகள் (Fundamental Social Processes) என்பன.

மேலும், சமூக இயல் மனிதனின் கூட்டு வாழ்க்கை (Collective life)யின் தொடக்கம், வளர்ச்சி, அமைப்பு, செயல் முறை ஆகிய

வற்றைப் புரிந்துகொள்ள முயல்கின்றது. மனிதன் கூட்டு வாழ்க்கையை ஏன் விரும்புகின்றான்? மக்களுக்கும் மாக்களுக்கும் உள்ள வேற்றுமைகள் யாவை? பண்டைக்காலச் சமுதாயத்திற்கும் தற்காலச் சமுதாயத்திற்கும் உள்ள வேறுபாடுகள் யாவை? மனித சமூகத்தின் அமைதி, வளர்ச்சி தேக்கத்திற்குரிய காரணங்கள், அக்காரணங்களை நீக்குதற்குரிய முறைகள் முதலியவற்றைப் பற்றி ஆராய்வதற்கு சமூக இயல் இடமளிக்கின்றது.

## 2. சமூக இயலின் கோட்பாடுகள்

சமூகவியலின் கோட்பாடுகள் சமூக இயல் வல்லுநர் சுரோக்கின் (Sorokin) என்பவரால் பல வகையாகப் பிரிக்கப் பட்டுள்ளன. 1. உயிரியல் கோட்பாடு (Biological School): இக் கொள்கையை வலியுறுத்தும் கொள்கையாளர்கள் சமூக முன்னேற்றத்தைப் பரிணாமக் கொள்கையின் மூலம் விளக்கலாம் என்று கூறியுள்ளனர். சமுதாயம் ஓர் உயிரினத்திற்கு ஒப்பானது. உயிரிகள் எம்முறையில் வளர்ச்சியுற்றதோ அதேபோல் சமூகக் குழுக்களும் வளர்ச்சியடைந்துள்ளன என்று நம்பப்படுகின்றது. 2. நிலவியல் கோட்பாடு (Geographical School): இக் கோட்பாடு மனித சமூகத்தின் போக்கை உறுதி செய்வதில் இயற்கை, நிலவியலைச் சார்ந்த தட்ப வெப்ப நிலை, மரம், செடி, கொடி, விலங்குகள் இவைகளின் முக்கிய பங்கை வற்புறுத்து கின்றது. பொதுவாகச் சமூகத்திலுள்ள குடும்பம், சமய நிறுவனங்கள். சமூகத்தின் பொருளாதார அமைப்பு போன்ற வற்றின் தன்மை பெரும்பாலும் இயற்கைச் சூழ்நிலையைப் பொறுத்துக் கட்டுப்படுத்தப்படுகின்றது. 3. உயிரின - சமூகக் கோட்பாடு (Bio-Social School): இது சமூதாயத்தின் மாற்றம். மக்கள் தொகையின் ஏற்றத்தாழ்வு இவ்விரண்டையும் சார்ந் துள்ளது என்று கூறப்படுகின்றது. 4. சமூக வியல் கோட்பாடு (Sociologistic School): இக் கோட்பாடு ஏனைய சமுதாய மாற்றங் கள் மக்களின் உறவு, நட்பு, மனப்பான்மை. பழக்க வழக்கங்கள் இவற்றைப் பொருத்துள்ளன என்று கூறுகின்றது. 5. உளவியல் கோட்பாடு (Psychological School): இது சமூகத்தின்இயல்புகளைத் தனி மனிதனிடம் காணப்படும் உளப்பண்புகள், இயல் பூக்கங்கள், மனவெழுச்சிகள் ஆகியவற்றின் மூலம் விளக்க முற்படுகின்றது. 6. பொருளாதாரக் கோட்பாடு (Economical School): இக் கோட்பாடு, சமூக வளர்ச்சி. சமூக மாற்றங்கள் ஆகியவற்றைப் பொருளாதார நிபந்தனைகளைக் கொண்டு நிலைநாட்டுகின்றது. 7. பண்பாட்டுக் கோட்பாடு (Cultural School): இது சமுதாய மாற்றங்களை மதம், நீதி, ஓவியம், பண்பாடு, கலாச்சாரம் முதலிய வற்றைக் கொண்டு விளக்க முற்படுகின்றது. 8. ஒருங்கிணைந்த

கோட்பாடு (Synthetic School) : இக் கோட்பாடு சமுதாயம் வளம் பெற பொருளாதாரம், இயற்கை வளம், மக்களுழைப்பு இவைகள் இன்றியமையாதவை என்று கூறப்படுகின்றது.
9. இயந்திரத் தொடர்பான கோட்பாடு (Mechanistic). இக் கோட்பாடு சமூக மாற்றங்களை பௌதீகம் இரசாயனம், நுண்ணியல் ஆகிய இவற்றின் மூலம் வெளிப்படுத்துகின்றது. விண்ணியலில் கோள்கள் (Planets) ஒன்றையொன்று ஈர்த்தோ ஈர்ப்பின்றியோ இயங்குவது போல மக்கட் கூட்டமும் தம்மிடையே தோன்றும் விருப்பு வெறுப்புகளின் காரணமாக ஒன்றையொன்று சார்ந்தோ விலகியோ இயங்குகின்றன.

மேற்கூறிய கோட்பாடுகள் சமூகவியலை எவ்வெவ் வகையில் விளக்கலாம் என்று கூறுகின்றன. பொதுவாக, இப் பரந்த உலகில் எத்தனை மக்கள் வாழ்கின்றார்களோ, அத்தனைக் கோட்பாடுகள் சமூக இயலுக்கு இருக்கக்கூடும். ஏனெனில், ஒவ்வொரு மனிதனும் அவன்தன் சமுதாயத்தை மாற்றவோ உயர்த்தவோ தாழ்த்தவோ முற்படுகின்றான். மேற்கூறிய கோட்பாடுகள் தவிர மற்றும் பல சமூக, விஞ்ஞான, தத்துவ மேதைகள் சமூகவியலுக்கு பலதரப்பட்ட விளக்கங்களைத் தந்துள்ளனர். சமூகவியல் மக்களுக்குள்ள உறவு, ஒற்றுமை, நடத்தை இவைகளின் தொடர்பைக் குறிக்கின்றன வென்று மேக்ஸ் வெபர் (Max Webar) கூறியுள்ளார். சமூக மாற்றத்தைத் தனிமனிதனைக் கொண்டே வெளிப்படுத்த முடியும் என்ற நோக்கத்தை பெரிடோ (Pareto) என்னும் அறிஞர் விளக்கியுள்ளார். சமூக இயல், சமூக மாற்றத்தை கண்களால் உற்று நோக்கி அம் மாற்றத்தை அளவிட முடியும் என்று ஃப்ரெடரிக் லீப்லே (Frederic Leplay) என்னும் ஃபிரான்சு அறிஞர் கூறுகின்றார். இவர் தற்கால சமூகத்தை அளவிடுதல் கூடும் என்ற ஒரு புதிய முறையைக் கண்டு பிடித்துள்ளார். ஹாபு ஹவுஸ் (L. T. Hob-house) என்னும் சமூக இயல் அறிஞர், சமூக இயல் மனிதனின் சமூக வாழ்க்கையை விளக்கி அதன் நன்மை தீமைகளை எடுத்துக் காட்டுகின்றது என்று கூறுகின்றார். சமூக இயல் பல உள்ளங்களை ஒன்று சேர்த்து இவை எவ்வெவ்வகையில் இயங்குகின்றன என்ற அடிப்படைத் தத்துவத்தை எடுத்துக்காட்டுகின்றது என்று ஹிட்டிங்ஸ் (F. H. Iddings) என்னும் அறிஞர் கூறுகின்றார். ஒற்றுமை, ஒன்றுபடுதல், அமைப்பு, விதிகள் இவை எவ்வண்ணம் சமூக இயலில் இயங்குகின்றன என்று மெக்காய்வர் (R. M Maciver) எடுத்துக் காட்டியுள்ளார். பொகார்டஸ் (Bogardous) என்னும் அறிஞர், சமூக இயல் சமூக வளர்ச்சியையும் மாறுதல்களையும் பருவத் தன்மையையும் தனி மனிதனின் வேட்கை,

உள்ளடக்குதல் இவற்றையும் முறையே எடுத்துக்காட்டுகின்றது என்று கூறியுள்ளார். சுருங்கக் கூறின் சமூக இயல் பொது வழிகள், உள்ளுணர்வு, நம்பிக்கை, பழக்க வழக்கங்கள், சமூகத்தின் அமைப்பு, மக்களுடைய போக்கு, ஒற்றுமை, வேற்றுமை முதலியவற்றை ஒருங்கே விவரிக்க முயல்கின்றது என்று கூறலாம். சமூக இயலுக்குரிய பாடம் சமுதாயமே யாகும்.

எனினும் சமூக அறிவியலின் மேன்மை பொதுவாகத் தத்துவ வியலின் அடிப்படையில்தான் தோன்றியுள்ளது. இதை விளக்க ஒரு மனிதன் இந்து தர்மத்தில் செய்யக்கூடிய செய்கைகளையும் செய்யக்கூடாதவற்றையும் எடுத்து விளக்கியுள்ளதைக் கொண்டு நாம் சமூக அறவியல், தத்துவவியல் இவை ஒற்றுமை பெற்றிருப்பதை உணர்ந்து கொள்ளுகின்றோம்.

## 3 சமூக அறிவியலும் ஆராய்ச்சி முறைகளும் (Social Research Methods)

சமூக அறிவியல் விளக்கிக் காட்டும் ஒரு விஞ்ஞானம். சமூக அறிவியல் உற்று நோக்கல் (Observation) என்னும் முறையை மேற்கொண்டு பெரும்பாலும் சமுதாய மாறுதல்களை முறைப்படி ஆராய்ந்து வகைப்படுத்துகின்றது. சமூக அறிவியலின் பொதுக் கருத்துக்கள் உற்று நோக்கலின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றன. ஒரு சமூகக் கோட்பாடு பல பொதுக் கருத்துக்களை மேற்கொண்டுள்ளதால் காலப் போக்கில் அப் பொதுக் கருத்துக்கள் பல ஆராய்ச்சி முறைகளுக்கு உட்படுகின்றன. இதற்கு மாறாக ஒரு சமுதாயக் கோட்பாடு எந்த ஒரு மாறுதலையும் பெறாமல் இருக்குமாயின் அது எக்காலத்திலும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரு கோட்பாடாக விளங்கக் கூடும். எனினும், பொதுவாகச் சமுதாயக் கோட்பாடுகள் முற்றிலும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் எக்காலத்திலும் நிலைத்திருக்கக் கூடியதாகவும் இயங்க முடியாது. ஏனெனில், சமுதாய மாறுதல்கள் காலத்திற்கேற்ப மாறிக் கொண்டும் அவை பல மேதைகளால் பல வகையில் புரிந்தும் விளக்கியும் காட்டக் கூடும். சான்றாகப் பெரிட்டோ (Perito) என்னும் சமூக அறிவியல் மேதை உற்று நோக்கல் என்னும் வழி முறையைக் கொண்டு அளவை வியலின் மூலம் ஒரு கருத்தைப் பரப்பலாம் என்று கூறுகின்றார். அவர்தம் கருத்துப்படி சமூக அறிவியல் மனிதன் காணவியலாத (Emperically verified) மாற்றங்களைப் புரிந்துகொள்ள இயலாதெனக் கூறுகின்றார். பிரடரிக் லீப்லே (Frederic Leplay) என்பவர் சமூக அறிவியல் ஆய்ந்து

அறிதல் என்ற அடிக் கல்லினுல் சமுதாயத்தை விளக்குகின்றது என்று கூறுகின்ருர். அவர்தம் கோட்பாடு புள்ளியியலைக் (Statistics) கொண்டு சமூக மாற்றங்களை விளக்கலாம் என்பதாகும். மேலும் எண்ணிக்கை அல்லது அளவு இல்லாவிடில் சமூக மாற்றங்கள் பயனற்றவை என்றும் ஆதலால், புள்ளியியல் சமுதாய மாறுதல்களுக்கு ஒரு முக்கியமான கருவி யென்றும் விளக்கியுள்ளார். சமூகச் சீர்திருத்தங்கள் தனி உதாரணங்களிலிருந்து ஒரு பொது விதியை உண்டாக்கி அது செயல்படும் முறையை அனுபவத்தால் அறியக் கூடும் என்று மாரிஸ் கின்ஸ்பர்க் (Moris Ginsberg) என்னும் சமூக அறிஞர் விளக்கியுள்ளார். ஆக்போர்ன், நின்காப் (Augburn and Ninkoff) என்னும் அறிஞர்கள் புள்ளியியல் சமூக அறிவியலில் முக்கியத்துவம் பெற்றுள்ளது என்றும் தேர்ந்தெடுக்கப்படும் நிகழ்ச்சிகள் பலதரப்பட்டதாக இருப்பதால் சரியான கூற்றுக்கு வருதல் மிகவும் கடினம் என்றும்; இவ்வின்னல்களைத் தவிர்க்கச் சமூக அறிவியலின் செய்முறை விதிகளை மதிப்பிட்டு அதன் பிறகு ஏற்றுக் கொள்ள வேண்டும்; ஏனெனில், மக்கள் தன்மை, ஆளுமை ஆகியவை வெவ்வேருக இருக்கக் கூடும் என்றும் கூறியுள்ளார்.

சமூக அறிவியல் தொன்றுதொட்டு மேற்கொண்டு வந்த முறை சமூகப் பார்வையிடல் (Social Survey). இம்முறை ஹெரோடெட்டஸ் (Herodotus) என்னும் கிரேக்கத் தத்துவரின் காலம் முதல் இன்றுவரை பின்பற்றப்படுகின்றது. இவ் விதி முறை சமுதாய மாற்றங்களை உற்று நோக்கிக் கணக்கிடுதல் என்னும் விதியைப் பின்பற்றி பல கோட்பாடுகளைச் சமுதாயத்திற்கு அளித்துள்ளது. சமூக உற்று நோக்கல் சமுதாயத்தின் தன்மையைக் குறிப்பதில்லை. ஆனுல், சமுதாய மாறுதல்களை அளவிட்டு எடுத்துக் காட்டுகின்றது. உற்று நோக்கல் என்னும் முறையைச் சார்லஸ் பூத் (Charles Booth) என்னும் பேரறிஞர் இங்கிலாந்தில் குடும்ப வரவு செலவுக் கணக்கை வரையறுக்கப் பல குடும்பங்களைச் சோதனையிட்டு எவ்வெத் துறைகளில் குடும்பத்தினர் அதிக செலவு செய்கின்றனர்; எவ்வெத் துறைகளில் குறைவாகப் பொருள் செலவு செய்கின்றனர் என்பதன் மூலம் குடும்பங்களின் உயர்வு தாழ்வு என்ற வேறுபாட்டை விளக்கியுள்ளார். ஓய்வு நேரம், உடை, போக்குவரத்து இவற்றிற்குப் பெருமளவு பொருள் செலவிடும் குடும்பங்கள் உயர்ந்தவை என்றும் பொருள் செலவிடாக் குடும்பங்கள் ஏழைக் குடும்பங்கள் என்றும் பொதுக் கருத்தைப் பரப்பியுள்ளார். இக்கருத்தைப் பிரான்சுப் பேரறிஞராகிய பிரடரிக் லிப்லே என்பவரும் மேற்கொண்டுள்ளார்.

சமூகத்தை உற்றுப் பார்த்தல் என்னும் விதி ஒரு நிலையான முடிவை வலியுறுத்த முடியாது. தற்காலத்தில் சமூக உற்று நோக்கல் என்னும் முறை கணக்கிடுதல் அல்லது கணக்குப் பார்த்தல் என்ற பெயரினுல் விளங்குகின்றது. ஒரு தொழில் முற்போக்கைத் தெரிந்துகொள்ள அத் தொழில் எவ்வெவ் வகையில் வளர்ச்சியடைந்துள்ளது? எவ்வெவ்வகையில் தேக்கமடைந்துள்ளது என்பதை சமூக எண்ணிக்கை என்னும் முறையைக் கொண்டு விளக்கவியலும். சமூக உற்று நோக்கல் (Social Survey), சமூகப் புள்ளியியல் (Social Statistical) இவை இரண்டும் சமுதாய மாறுதல்களின் அளவிடுதலைக் குறிக்கின்றதே யன்றித் தரத்தையோ காரணத்தையோ குறிப்பதில்லை.

சமூக அறிவியல் மற்றும் பல விதிமுறைகளைச் சமுதாய மாறுதல்களை விளக்க பயன்படுத்தப்படுகின்றது. அவை 1. கேள்வி முறை (Questionnaire Method). 2. ஒரு சான்றைக் கொண்டு ஒரு முடிவை பெறும் முறை (Case History Method) . நாட்குறிப்பு எழுதப்பட்ட கடிதங்கள் ஆகியவற்றைக்கொண்டு அலசிஆராய்ந்து முடிவைக் கண்டுபிடிக்கும் முறை (Case Analysis Method).

வினு விடை முறை பல வினுக்களைத் தயாரித்து அவற்றைப் பரிசோதனை செய்யும் மக்களுக்கு அவற்றைக் கொடுத்து அவர்களின் விடையைக் கொண்டு ஒரு பொது விதியை ஏற்படுத்துவதாகும். இம்முறைக்கு ஏற்ற வினுக்களைக் கொடுத்து முடிவைப் பெற வேண்டும். இல்லாவிடில் ஒரு பொது விதியை அடைய முடியாது. வினு விடை முறை ஒரு தனி மனிதனுக்கும் குழுக்களுக்கும் பயன்படுத்த வியலும். மற்றைய இரண்டு விதிமுறைகளும் தனிப்பட்ட மக்களுக்குத்தான் பயன்படுத்த வியலும்.

உலகில் எத்தனை மக்கள் உள்ளனரோ அவ்வளவு சமூக அறிவியல் முறைகள் இருக்கக் கூடும். ஏனெனில், ஒவ்வொரு தனி மனிதனும் அவனது தனி முறையை ஏற்கக் கூடும். எனினும் மக்களுக்குப் பொது விதிகளே தேவைப்படுகின்றன. ஏனெனில் அவை மட்டுமே சமுதாய மாறுதல்களை எடுத்துக்காட்ட வியலும். சான்ருக ஒரு நாட்டின் மக்கள் தொகை பெருகுவதும் குறைவதும் ஒரு தனி மனிதனைப் பொருத்து அல்ல. பொது மக்களைத்தான் குறிக்கின்றது. மேலும், கல்வி முன்னேற்றம் ஒரு தனி மனிதனையோ அல்லது ஒரு குழுவையோ குறிப்பதில்லை. பொது மக்களையே குறிக்கின்றது. ஆதலால் சமூக அறிவியல் மேற்கொண்டுள்ள விதிமுறைகள் பெரும்பாலும் பொது விதிகளாகத் தான் இருத்தல் வேண்டும்.

## 4. மனித சமுதாயத்தின் பண்புகள்

மனித சமுதாயம் நாளடைவில் தோன்றியதாக கருதப் படுகின்றது. இச் சமுதாயம் பல தரப்பட்ட மக்களைக் கொண்டு தோற்றுவிக்கப்பட்டது. தனிமனிதனுக்கு முன் சமுதாயம் உருவாக்கப்பட்டதென்று கூற வியலாது. ஏனெனில், தனி மனிதன் குழுவின்றி வாழ்ந்திருக்க வியலாது. இக்கருத்தை அரிஸ்டாட்டில் என்னும் கிரேக்கத் தத்துவ அறிஞர் "மனிதன் ஒரு சமூக விலங்கு" (Man is a Social animal) என்று கூறுவதன் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். "கூடி வாழ்ந்தால் கோடி நன்மை". "ஒன்று பட்டால் உண்டு வாழ்வு" என்னும் கூற்று களுக் கேற்ப மனிதன், பண்டைக்கால முதல் தன்னைக் காத்துக் கொள்ளும் பொருட்டு ஒரு குழுவில் தான் வாழ்ந்து வந்துள்ளான். குழு, அக் குழுவிலுள்ள மக்களுக்குப் பகைவர்களாலும் வெளி யுலகிலுள்ள தீய ஆற்றல்களாலும் ஏற்படும் இன்னல்களை எதிர்த்துப் பாதுகாப்பளித்தது. சிற்சில வேளைகளில் மனிதனின் மேன்மை என்னும் உள்ளுணர்வு மனித வர்க்கத்தைப் பாது காக்க அல்லது உயர்த்த முற்படுகின்றது. சான்றாக, ஒரு குழுவின் உறுப்பினர்கள் ஒரு சிக்கலைத் தீர்க்க தங்கள் மேன்மைத் தன்மையை அடிப்படையாகக் கொண்டு செயல்படுவர்.

சமூகம் என்பது, மனித வர்க்கத்திற்கே பொருந்தும் என்று கிஸ்பர்ட் (M. Gisbert) என்னும் அறிஞர் கூறுகின்றார். உலகில் பலதரப்பட்ட சமுதாயங்கள் உள்ளன. சமுதாயம் பொதுவாக மக்களின் உறவு, நட்பு இவற்றின் தொடர்பை எடுத்துக் காட்டு கின்றது. சமூக விதிகள் பலதரப்பட்ட சமுதாயக் குழுக்களை மனித வர்க்கத்தின் அடிப்படைத் தத்துவங்களால் ஒன்று சேர்த்துள்ளது. அஃதாவது மனிதன் என்னும் ஒரு தன்மை யன்றி அவன் பழக்க வழக்கம், பண்பாடு, தொழில், உணவு, உடை முதலியவை பல தரப்பட்டதாக இருக்கக் கூடும். உடலிலும் உள்ளத்திலும் ஒப்புமையுள்ள மக்களே ஒரு சமூகக் குழுவின் உறுப்பினர்களாக இருக்க வியலும். எனினும், முழு ஒப்புமை இருக்க வியலாது. மாறுதல், தேக்கம், முன்னேற்றம் இவையே மக்கள் முன்னேற்றத்தை எடுத்துக் காட்டுகின்றன. ஒரு சமூகத் தின் அமைப்பு (Pattern) நீண்ட காலம் இருக்கக் கூடும். அது பொது விதிகளை மேற்கொண்டு உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்ளுகின்றது. சமூகக் குழு பயனற்ற நிறுவனமாக இருக்க வியலாது. சான்றாக, பித்தர்கள் (Mad People) ஒன்றுகூடி ஒரு சமூகக் குழுவை அமைக்க முடியாது. மாறாக ஆகாய விமானிகள் ஒன்று சேர்ந்து ஒரு குழுவை ஏற்படுத்த முடியும். மேலும், பல

சமூகக் குழுக்கள் ஒன்று கூடி ஒரு சமுதாயத்தை ஏற்படுத்தி அதன் ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் வழிவகுத்துக் கொடுக்க இயலும். பழங்குடி மக்களின் குழு உயிருடன் வாழ்வான் வேண்டியும் விலங்குகளினின்றும் தம்மைப் பாதுகாத்துக் கொள் வான் வேண்டியும் தோற்றுவிக்கப்பட்டன என்று கூறலாம். தற்காலச் சமூக நிறுவனங்கள் மக்களுக்குப் பற்பல வகையிலும் நன்மை பயக்குமாறு உருவாக்கப்பட்டுள்ளன.

## 5. சமுதாயத்தின் தன்மைகள் (Characteristics of Society)

மனிதன் பண்டைக் கால முதல் இன்றுவரைக் கூட்டு வாழ்க்கையை ஏற்று வாழ்ந்து வந்தான் என்பது வரலாற்றின் வாயிலாகப் புலனாகின்றது. சமுதாயம் என்னும் சொல் இன்றைய சமுதாயத்தை விளக்குகின்றது; குழு என்னும் சொல் பண்டைக் காலச் சமுதாயத்தை (Primitive Society) ஓரளவு எடுத்து விளக்கி யுள்ளது. மனித வரலாற்றின் மூலம் மனிதன் மூன்று முக்கிய கட்டங்களைக் கடந்து தற்காலச் சமுதாயத்தை ஏற்று செயல் புரிந்து வாழ்கின்றான்.

பண்டைக் காலக் குழுவில் வாழ்ந்த மனிதன் தன் உணவையும், தேவைகளையும் நிறைவு செய்து கொள்ளவும் தன்னைக் காத்துக் கொள்ளவும் குழு வாழ்க்கையை ஏற்றுக் கொண்டான். அக்காலத் தில் மனிதனின் தேவைகள் மிகக் குறைவாக இருந்தமையால் உருவாக்கப்பட்ட சமுதாயம் தேவைப்படவில்லை. மனிதனின் அக் கால நிலையை உயிர் வாழ்க்கைப் போராட்ட நிலை (Struggle for Existence) என்று கூறப்பட்டுள்ளது. நாகரிகம், பண்பாடு போன்றவை அவன் வாழ்வில் புக வில்லை. இந்நிலையில் மனிதன் மன நிறைவுடன் வாழ்ந்தான் என்று நம்பலாம்.

மனிதனின் அறிவுக் கூர்மை, ஆர்வம் மேன்மேலும் பெருக அவன் இரண்டாவது கட்டமாகிய விலங்குகளை வேட்டையாடும் தொழிலை மேற்கொண்டு வாழத் தொடங்கினான். இத்தகைய சமுதாயம் நாளடைவில் மாறித் தற்காலச் சமுதாயத்தை உருவாக்கி யது தற்காலச் சமுதாயம் மனிதனைப் பற்பல கோணங்களிலிருந்து நோக்கி ஒரு உலக சமுதாயமாக உருவாக்கியுள்ளது.

சமுதாயம் பல தரப்பட்ட தன்மைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது; அவை கீழ்வருவன. 1. சமுதாய நிறுவனங்கள் பொதுநல விதிகளை மேற்கொண்டு மக்களை ஒன்று சேர்த்துள்ளது.

எனினும், தற்காலச் சமுதாயக் குழுக்களின் நடை முறைகளும் விதிகளும் பல தரப்பட்டுள்ளன. மொழி, பழக்க வழக்கங்கள், உடை ஆகிய இவை நாட்டுக்கு நாடு மாறுபடக் கூடும். ' தமிழன் என்றொரு இனமுண்டு ; தனியே அவர்க்கொரு குணமுண்டு " என்று பாரதியாரும் கூறியுள்ளார். 2. சமூகக் குழு உறுப்பினர்களின் செயல்முறை ஒருவரைஒருவர் சார்ந்தும் பாதித்தும் இயங்குகின்றது. ஒரு தரப்பட்ட நடைமுறை அக் குழுவிலுள்ள எல்லா மக்களையும் ஊக்குவிக்கின்றது. குழுவின் நீடிப்பு, காரண காரிய உறவைக் கொண்டுள்ளது. குழுவின் விதிமுறைகள் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்படுகின்றன. . சமூகத்திலுள்ள மக்களின் உள்தொடர்பு குழுவின் ஒருமைப்பாட்டை நிலை நாட்டுகின்றது.

மேலும், சமூக இயல், இயற்கை மாற்றம், செயற்கை மாற்றம் ஆகியவற்றை நேர்முகமாகவும் மறைமுகமாகவும் புரிந்துகொள்ளச் செயல் படுகின்றது. கிஸ்பர்ட் (Gisbort) என்னும் சமுதாய இயல் வல்லுநர் சமுதாய இயல் நான்கு முக்கியச் சிக்கல்களைக் கொண்டுள்ளதென்று கூறுகின்றார். 1. சமுதாய வடிவ அமைப்பியல் (Social morphology) மக்கள் வகை, சமுதாயக் குழுக்களின் வகை, நிறுவனங்கள் வகை, தரம், எண்ணிக்கை என்பவைகளால் நன்கு விளக்கப்படுகின்றது. 2. சமுதாயத்தின் வரம்பு சமுதாயத்தின் சட்டம், ஒழுக்கம் (Morals), பரம்பரை வழக்கம் (Convention), மற்ற சமுதாயத்தை வழிபடுத்தும் செயலி ஆகிய இவற்றைத் தெளிவுறச் செய்கின்றது. 3. சமுதாய முறைகள் (Social process) சமுதாயத்திலுள்ள தனிமனிதன், குழுக்களிலுள்ள மக்கள், இவர்களின் தொடர்பு, ஊடாட்டம் ஆகியவற்றைப் புரிந்து கொள்ள முற்படுகின்றது. 4. சமுதாய நோய்க்குண நூல் மனிதனின் பலதரப்பட்ட பொருத்தமற்ற உறவை வெளிக் காட்டுகின்றது.

தனி மனிதனின் சமுதாயத் தொடர்பை மூன்று வகையாகப் பிரிக்கக் கூடும். அவை 1. ஒரு தனிமனிதன் மற்றொரு தனிமனிதனுடன் கொண்டுள்ள உறவு. 2. தனிமனிதன் எந்த இனத்தை அல்லது பொதுவுடைமைக் குழுமத்தைச் (Community) சார்ந்தவன். 3. தனிமனிதனும் சுற்றுப் புறமும் கொண்டுள்ள நட்புமுறை. கிரிஸ்பர்ட் என்னும் சமூக வல்லுநர் சமூக இயலுக்கு நான்கு முக்கியக் கருத்துக்கள் உள்ளனவென்று கூறியுள்ளார், 1. சமூகம் பலதரப்பட்ட குழுக்கள், அவற்றின் தரம், விதிகள் இவற்றை மேற்கொண்டு செயலாற்றுகின்றது. 2. சமூகவியல்.

அடிப்படை ஒப்புமையை மேற்கொண்டு பற்பல நிறுவனங்களின் ஒற்றுமை வேற்றுமைகளைப் புரிந்துகொள்ள முற்படுகின்றது. 3. சமூக வியல் பொது விதிகளை ஏற்படுத்தியும் அவற்றின் மூலம் சமுதாயம் முன்னேறுவதற்கான வழியையும் எடுத்துக் காட்டு கின்றது. 4. சமூக இயலின் அடிப்படைத் தொண்டு சமூகச்சட்ட திட்டங்களை வாழ்க்கையின் மூலம் விளக்க வேண்டிய பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ளது. சுருங்கக் கூறின் சமூக வியல் பலதரப் பட்ட தனிமக்கள், குழுக்கள் இவற்றின் நன்மைகளையும் பயன்களை யும் கொண்டு சமுதாயத்தை முன்னேறச் செய்கின்றது. தனி மனிதன் எவ்வெவ்வகையில் இயற்கை, செயற்கை சுற்றுப்புறம் இவற்றிலிருந்து நன்மை அடைகிறான் என்பதைப் புலப்படுத்து கின்றது. மேலும், சமூக வியல் பலதரப்பட்ட பயன்கள் வெவ்வே றாயினும் சமூக ஒற்றுமைக்கு அடித்தளமாக உள்ளதை விவரிக் கின்றது.

## 6. சமூகவியலும் அதைச் சார்ந்த சமூகத் தொடர்பு கொண்ட இயல்களும்

## (The Relationship between Sociology and other Social Sciences)

சமூக இயலை ஒரு தனிப்பட்ட முழுமை வாய்ந்த அறிவியலாகக் கருத இயலாது. ஏனெனில், சமூக இயலுக்கும் வரலாறு (History), பொருளாதாரம் (Economics), மானிட இயல் (Anthropology), அரசியல் (Politics), அறவியல் (Ethics), தத்துவம் (Philosophy), உளவியல் (Psychology), சமூக உளவியல் (Social Psychology) போன்ற பல அறிவியற் பிரிவுகளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இவையனைத்தும் ஒருங்கிணைந்து சமூக இயலுக்குத் துணை புரிந்து அவ் வியலை ஒரு சிறப்புற்ற இயலாக உருவாக்கி யுள்ளன.

சான்றாக, பொருளாதாரம் (Economics) சமூக இயலுக்கு ஒரு பணிப் பெண்ணாகக் (Economic is the hand maid of Sociology) கருதப்படுகின்றது. மேலும் மற்ற சமூக அறிவியல்களும் சமூக வியலின் அடிப்படைத் தத்துவங்களையும் தன்மையையும் நோக்கத்தையும் ஓரளவிற்கு பயன்படுத்துகின்றன. சான்றாக தனிமனிதன் அல்லது பொதுமக்களைக் கொண்டுதான் பொருளாதாரம் (Economics), அரசு (Politics) ஆகிய இவை இயங்குகின்றன. ஆதலால், சமூகவியலும் சமூக அறிவியல்களும் மனித சமுதாயத்தைப் புரிந்துகொள்ள இன்றியமையாதனவாய் இலங்குகின்றன.

### அ. சமூகவியலும்அரசியலும் (Sociology and Politics)

அரசியல் ஒரு நாட்டிலுள்ள பல சமூகக் குழுக்களை அறிந்து கொள்ள முற்படுகின்றது. ஒரு நாட்டின் அமைப்பில் குடும்பம், தொழில் கல்வி நிறுவனங்கள் போன்றவை சமூக வியலின் பாடப் பயிற்சியாகும். பிளேட்டோ என்னும் உரோமத் தத்துவரின் 'குடியரசு' என்னும் நூலை அடிப்படையாகக் கொண்டே பல அரசியல் நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன என்று கருதப்படுகின்றது. தற்காலக் கருத்துப்படி அரசியலை சமூக இயலாகக் கருதுவது பொருந்தாது. ஏனெனில், அரசியலுக்கு ஒரு தனி இடம் அளிக்கப்பட்டுள்ளது. மேலும், அரசியல் பல தரப்பட்ட அரசியலின் கோட்பாடுகள், விதி முறைகள் இவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்து நன்கு விளக்குகின்றது. இவ்வறிவியலைத் தவிர மற்ற சமூக அறிவியல்கள் இச்செயலை முழுமையாகச் செயலாற்ற முடியாது. எனினும், அரசியலைச் சார்ந்த சட்டம், உரிமை இவை எந்த அளவிற்குப் பயன்படுத்தவேண்டும். இவை மனிதனுடைய சமூக வாழ்க்கைக்கு எவ்வெவ்வகையில் பணிபுரிகின்றன என்ற வினாக்களுக்கு சமூக அறிவியலின் மூலம் விடைகள் காணப்படுகின்றன. பொதுவாக அரசியல், சமுதாயத்தை ஒழுங்குபடுத்தும் ஒரு இயந்திரமாகவும் அரசுக்குத் தனி இடமளிக்கும் ஒரு தனி இயலாகவும் கருதப்படுகின்றது.

### ஆ. சமூகவியலும் பொருளாதாரமும் (Sociology and Economics)

பொருளாதாரம் நாட்டின் வளத்தைக் குறிக்கும் ஒரு சமூக அறிவியல். பொதுவாகப் பொருளாதாரம் மனிதனுடைய அன்றாட வாழ்க்கையைப் புரிந்து கொள்ள முற்படுகின்றது. பொருளாதாரம் நாட்டில் பொருளாதாரம் அதிகரித்தால் அது எந்த அளவிற்கு மனித வாழ்க்கையைப் பாதிக்கின்றது (அல்லது) அளவிடு கின்றது என்று எடுத்துக் காட்டுகின்றது. பொருளாதாரம் முக்கியமாக ஒரு நாட்டின் மூன்று கட்டங்களை குறிப்பாக எடுத்துக் காட்டுகின்றது. . நாட்டின் வளத்தைப் பெருக்குதல் (Production), . நாட்டின் செல்வத்தைப் பரவலாக்குதல் (distribution) 3. பரவலாக்கப்பட்ட பொருளை சரிவரப் பயன்படுத்துதல் (Consumption) என்பன. மேக்ஸ் வெபர் (Max Webar), பெரிடோ (Pareto), மற்றும் பல சமூக வல்லுநர்கள் பொருளாதார மாற்றங்கள் சமுதாய மாற்றத்தின் ஒரு பங்கைக்குறிக்கின்றதென்று கூறுகின்றனர். பொதுவாகப் பொருளாதாரச் சிக்கல்கள் சமூக அறிவியலின் மூலம்தான் தீர்க்கப்படுகின்றன. இவ் வுண்மை தற்காலத்தில் பெருமளவு பரவியுள்ளது. பொருளாதார நிறுவனங்கள் சமூக அமைப்பின் ஒரு பிரிவாக இருப்பதால் பெரும்பாலும்

பொருளாதாரப் பிரச்சனைகள் சமுதாயப் பிரச்சனைகளாகக் கருதப் படுகின்றன. சான்றாக வேலை வாய்ப்பின்மை, தொழிலாளர்க்குப் போதிய ஊதிய மின்மை என்பன.

கார்ல் மார்க்ஸ் என்னும் சூழ்நிலைக் கொள்கையாளர் சமூக வியல் பொருளாதாரத்தின் ஒரு இன்றியமையாத பிரிவு (அ) பகுதி என்று கூறியுள்ளார். இவர் கோட்பாடுகள் இந் நூற்றுண்டில் தீவிரமாக மேற்கொள்ளப்பட்டதால் பொருளாதாரம் சமுதாயம் இவ்விரண்டும் குழப்ப நிலைக்கு உள்ளாக்கப்பட்டிருக்கின்றன. எவ்வாறெனில் இவ் விரண்டு வியல்களும் வெறுப்படைந்த முதலாளி தொழிலாளி உறவை ஒன்றியுள்ளது. பொதுவாக தற்காலப் பெரும்பாலான சிக்கல்கள் பொருளாதாரச் சமுதாய அடிப்படையின் சிக்கலாகக் கருதப்படுகின்றன. எனினும், சமூக அறிவியல்கள் வரையறுக்கப்பட்டிருப்பதாலும் முன்னேற்றமடைந்திருப்பதாலும் ஓரளவிற்குச் சில சமூகச் சிக்கல்கள் தீர்க்கப்படுகின்றன. இருபதாம் நூற்றுண்டில் ஒவ்வொரு சமூக அறிவியலின் வரம்பை எடுத்துக் கூறுவது அரிது. பொதுவாக சமூக அறிவியல்கள் மனிதனின் ஒற்றுமை முன்னேற்றம் இவை ஓங்கியுள்ளதை சமுதாயத்தின் மூலம் அறியப்படுகின்றன.

### இ. சமூகவியலும் வரலாறும் (Sociology and History)

சமூக வியலும் வரலாறும் பண்டைக்கால முதல் இன்றுவரை மனிதன் முன்னேற்றமடைந்ததை எடுத்துக் காட்டி விளக்கியுள்ளன. சிற்சில சமூக வரலாற்று அறிஞர்கள் சமூக வியலுக்கும் வரலாற்றுக்கும் வேறுபாடில்லை என்றும் கூறுகின்றனர். வேறு சில அறிஞர்கள் முற்றிலும் வேற்றுமை உண்டெனக் கூறுகின்றனர். இவர்களின் கருத்து சமூக இயல் பொது விதிகளைக் கொண்டு மனித சமுதாயத்தை விளக்குகின்றது என்றும் வரலாறு சிற்சில நிகழ்ச்சிகளைக் கொண்டே முன்னேற்ற மடைந்துள்ளதென்றும் அமைகின்றது. இவ்விரண்டு கருத்துக்களையும் முற்றிலும் புறக்கணிக்க இயலாது. ஏனெனில், சமூக வியலின் முதற் கொள்கை, பொது விதியைக் கண்டுபிடித்தல். "சரித்திரத்தின் முக்கியத்துவம் சரித்திரப் பூர்வமாக சமுதாயத்தில் ஏற்படும் நிகழ்ச்சிகளை விளக்குவதாகும்". ஆதலால், சமூக வல்லுநர்கள், வரலாற்று நிபுணர்கள் சமூக வியலின் கட்டுப்பாடுகளையும், விதிகளையும் வரலாறு எடுத்து விளக்கும் நிகழ்ச்சிகளையும் புறக்கணிக்க இயலாதவர்களாக இருக்கின்றனர். எனினும், சமூகவியலுக்கும் வரலாற்றுக்கும் ஒரு முக்கிய வேறுபாடு உள்ளது. வரலாறு செயற்கை மாறுதல்களை காலத்தின் வாயிலாக எடுத்துக்காட்டுகின்றது; சமூகவியல் நட்பு அல்லது உறவின் வாயிலாக வெளிப்படுத்துகின்றது.

சான்ருக நெப்போலியன் போர் வரலாற்றுக் காரணங்களைக் கொண்டு விளக்கப்படுகின்றது. சமூகவியலோ மக்கள் வாழ்க்கை அப்போது எவ்வெவ்வகையில் பாதிக்கப்பட்டது என்பதை எடுத்துக்காட்டுகின்றது. வங்காள தேசத்தின் சுதந்தரப் போராட்டத்தைப் பற்றி வரலாறு காரண காரியத்துடன் எடுத்துக் காட்டுகின்றது. சமூக இயல் அப்போரின்போது மக்கள் எவ் வெவ்வகையில் துன்புறுத்தப்பட்டு இன்னல் அடைந்தனர் என்பதை விளக்குகின்றது. இத்தகைய சான்றுகள் உலகில் பற்பல உள. இவையனைத்தும் சமூக வியலுக்கும் வரலாற்றிற்கும் உள்ள நெருங்கிய தொடர்பை நன்கு விளக்குகின்றன. இவை தவிர வரலாறு மணம், குடும்பம், சமுதாயம், அரசு இவை எவ்வெவ்வகையில் மாறுபட்டு முன்னேற்ற மடைந்துள்ளன என்று விளக்குகின்றது. மாருகச் சமூகவியல் மேற்கூறியவை எக் காரணங்களால் மாறுபட்டன வென்றும் மாற்றங்களை மக்கள் விரும்புதற்குரிய காரணத்தையும் எடுத்துக் காட்டுகின்றது. சுருங்கக் கூறின் வரலாறு காலத்தைக் குறித்து நிகழ்ச்சிகளை முறையாக வெளிப்படுத்துகின்றது. சமூக அறிவியல் ஒவ்வொரு நிகழ்ச்சியும் எக்காரண காரியத்திஞல் மாறியுள்ளது என்பதை வலியுறுத்துகின்றது.

### ஈ. சமூகவியலும் அறவியலும் (Sociology and Ethics)

அறவியல் மனிதனின் ஒழுக்கம், தீய செயல்களைச் செய்யா திருத்தல் ஆகியவை பற்றிச் சான்ருேர்களும் இலக்கியங்களும் குறிப்பிட்ட நடைமுறைகளைப் பொருத்துள்ளது. அறவியல் மனிதனுக்குத் தேவையான நன்னடத்தை முறைகளையும் விதிகளையும் தோற்றுவித்துள்ளது.

> "ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
> உயிரினும் ஓம்பப் படும்".

வள்ளுவரின் இக் கூற்று அறவியலின் சிறப்பை உணர்த்துகின்றது. சமூக அறிவியலுக்கும் அறவியலுக்கும் இன்றியமையாதவை மனிதனின் நட்பு நன்னடத்தை போன்றவையாகும். இவ்விரு வியல்களும் மக்களின் செயல்முறைகளை ஆய்ந்து அவை ஏற்கக் கூடியவையா? பயன்தரக் கூடியவையா? என்று நுணுகி முடிவுசெய்கின்றன. சான்ருக வேலை நிறுத்தம் அல்லது ஒரு புரட்சி மக்களை எவ்வெவ் வகையில் துன்புறுத்தக்கூடும் என்பதை அறவியல் தெளிவாக வெளிப்படுத்துகின்றது. சமுதாயத்தில் மனிதன் அறவியலின் மூலம் பெறும் பயன் ஏராளம். சமூகவியல், அறவியல் ஆகிய இவ் விரண்டையும் வேறுபடுத்திப் புரிந்து கொள்ளுதல் மிகவும் அரிது. எனினும், சமூகவியலுக்கும்

அறவியலுக்கும் சில வேறுபாடுகள் உள்ளன. சமூகவியலில் உள்ள எல்லாச் சிக்கல்களும் அறவியலின் அடிப்படையில் கொண்டுவரவியலாது. அதுபோல் அறவியலில் உள்ள திட்டங்களும் விதிகளும் சமூகவியலால் முற்றிலும் மேற்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. ஒரு சிக்கலை சமூக வியல் ஏற்றுக் கொண்ட நோக்கத்தில் அறவியல் ஏற்கவேண்டிய அவசியம் இல்லை. மனிதனின் ஒழுக்கம் சமுதாயத்தில் ஓரளவிற்கு முன்னேற்றமடைந்துள்ளது. எனினும், அவனுடைய நடைமுறை சமுதாயப் போக்கு, அரசியல் போக்கு ஆகியவை அதே அளவிற்கு முன்னேற்றமடையவில்லை. பாக்ஸ் (Box) என்னும் அறிஞர் ஒழுக்கமின்மை சமூக அடிப்படையில் முற்றிலும் ஏற்றுக்கொள்ளவியலாது. சமூக வியலும் அறவியலும் அடிப்படைத் தத்துவத்தின் ஒரே தன்மையைக் கொண்டுள்ள போதிலும் நடைமுறையில் வேற்றுமை இருக்கக் கூடும் என்று கூறுகின்றார்.

## ஈ. சமூக வியலும் மானிட வியலும் (Sociology and Anthropology)

மானிட இயல் மனிதனின் தோற்றம், இயற்கை, பண்பாடு ஆகிய இவை பண்டைக்கால முதல் இன்று வரை மாற்றமடைந்துள்ளதை விவரிக்கின்றது. பொதுவாக மானிட வியல் மனித வரலாற்றை எடுத்துக்காட்டுகின்றது. மானிட இயல் ஒரு பரந்த பல பகுதிகளை மேற்கொண்ட இயல். மானிட வியல் பொதுவாக ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1. இயற்கை மானிட வியல் (Physical Anthropology) மனிதனின் பரிணாமம். இப்பிரிவு மனிதனின் தோற்றம், தன்மை, இனப் பிரிவு சுற்றுப்புறச் சூழ்நிலை, மனிதனின் நடத்தை முதலியவற்றைக் குறிப்பாக விளக்குகின்றது. 2. கலாச்சாரப் பண்பாட்டு மானிட இயல் (Cultural Anthropology) மக்களிடையே பண்பாடு எவ்வண்ணம் தோன்றி அது மற்ற இடங்களுக்குப் பரவியது என்பதை எடுத்துக் காட்டுகின்றது. 3. புதைபொருள் ஆராய்ச்சி (Archaeology) : பண்டைக் கால மனிதனின் வாழ்க்கை, பண்பாடு ஆகியவற்றை எடுத்துக் காட்டுகின்றது. 4. இன மானிடவியல் (Ethnology): உலகிலுள்ள மக்கள் இனம், இடம், மொழி என்பவற்றைக் கொண்டு எவ்வெவ்வகையில் பிரிக்கப்பட்டுள்ளனர் என்று விளக்குகின்றது. 5. சமூக மானிட இயல் மனிதன் உலகிலுள்ள இயற்கை செயற்கைப் பொருள்களை ஏற்று காலத்திற்கேற்ப முன்னேற்றமடைந்துள்ளதை எடுத்துக் காட்டுகின்றது. மேற்கூறிய பிரிவுகள் அல்லது வகைகள் மனிதன் இந்நிலவுலகில் தோன்றியது முதல் இன்றுவரை அவன் வாழ்ந்து வரும் வாழ்க்கை முறைகளை

பல கோணங்களிலிருந்தும் எடுத்துக் காட்டியுள்ளது. கிரேக்க மொழியிலுள்ள ஆந்ரோபாஸ் (Anthropos) என்னும் சொல் மனிதன் என்ற பொருளைத் தருகின்றது. எனவே, மானிட வியல் மனிதனை எல்லாக் கோணங்களிலிருந்தும் அறிந்து கொள்ள முற்படுகின்றது. சமூகவியல் மனிதன் சமுதாயத்தில் தொடர்பு கொண்டுள்ளதை உறுதிப்படுத்துகின்றது. மானிட வியல் மனிதனின் பொது நோக்கங்கள், கருத்துக்கள் ஆகிய இவற்றைப் பரவலாக விளக்குகின்றது. மானிட வியல் மற்ற இயல்களை விடப் பின்தோன்றியதாக இருந்தாலும் இவ்வியல் எல்லா அறிவியல்களைக் காட்டிலும் முன்னேற்றமடைந்துள்ளது. முதன்முதலாகத் தோன்றிய சில சமூக வல்லுநர்களாகிய வெஸ்டர் மார்க் (Wester Mark), கோல்டன் வீசர் (Golden Weiser), லவி (R.H. Lowie), பிரான்சிஸ் பாஸ் (Francis Boas), மெல்னேஸ்கி (Malanowski) மற்றும் பலர் சமூக இயலைப் பரிணமக் கோட்பாட்டின் மூலம் விளக்கக்கூடும் என்ற நம்பிக்கையை மாற்றி மற்றும்பல கொள்கையின் மூலம் புரிந்து கொள்ளக் கூடும் என்ற கருத்தை வெளிப்படுத்தியுள்ளனர்.

## உ. சமூக வியலும் சமூக உளவியலும் (Sociology and Social Psychology)

உளவியல் மனிதனின் எண்ணங்களையும் வேட்கைகளையும் புலனுணர்ச்சிகளையும் எடுத்துக் காட்டுகின்றது. சமூக உளவியல் மேற்கூறிய உணர்ச்சிகள் எவ்வெவ் வகையில் மக்கள் கூட்டத்தில் வெளிப்படுத்தப்படுகின்றன என்பதை விவரிக்கின்றது. சமூகவியல், சமூக உளவியல் இவை இரண்டும் மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. இவ்விரண்டின் வேற்றுமைகள் கல்வியறிவிற்கும் அதைப் பற்றித் தெளிந்து உணர்வதற்கு மட்டுமேயன்றி உண்மையில் வேறுபாடு இல்லை என்று சமூக இயல் வல்லுநர்கள் கூறியுள்ளனர். எனினும், பொருளாதாரப் பண்பாடு, நிலவியல், பரிணம மாறுதல்கள் போன்றவற்றை உளவியலின் வாயிலாகப் புரிந்துகொள்ள வியலாது. ஒவ்வொரு அறிவியலும் தனிப்பட்ட முறையில் தனி மனிதன் அல்லது குழுக்களின் தேவைகள் மற்றும் பல மாறுதல்களைத் தனித்தனியே ஆராய்ந்து முடிவெடுக்கின்றது. சமூக அறவியல் குழுவின் வெளித் தோற்றத்திலிருந்து ஒரு மாறுதலை ஏற்றுக் கொள்ளுகின்றது. உளவியல் அதே மாற்றத்தைத் தனி மனிதனின் நோக்கம், எண்ணம், இயல் பூக்கங்கள், வேட்கைகள், புலனுணர்ச்சி முதலியவற்றைக் கொண்டு விளக்குகின்றது.

ஊ. சமூக அறிவியல்களும் சமூகத் தத்துவமும் (Social Sciences and Social Philosophy)

சமூகத் தத்துவம் சமூக அறிவியல்களுக்கும் சமூகத் தத்துவத்திற்கும் உள்ள ஒற்றுமையைக் குறிப்பாக விளக்குகின்றது. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் சமுதாயம் பல்வேறு துறைகளில் வெற்றியடைய வேண்டிய நிலையில் உள்ளது. இந் நூற்றுண்டில் ஏனைய சமூக அறிவியல்களும் அவற்றின் சிக்கல்களை ஒன்றுசேர்த்து எந்த அளவிற்கு சிக்கல்களைத் தனிப்பட்ட முறையில் புரிந்து கொள்ளக் கூடும் ? மேலும், எவ்வெவ் வகையில் பிரச்சனைகளின் சிக்கலைத் தீர்க்கக் கூடும் என்ற பொறுப்பை ஏற்றுள்ளன. ஏனைய சமூக அறிவியல்களும் அறிவுக் கூர்மை, சிந்தனை ஆற்றல், ஆய்வு, தரம், மதிப்பீடு முதலியவற்றின் மூலம் சமுதாயத்திலுள்ள பெரும்பாலான சிக்கல்களை விளக்க முற்படுகின்றன. சமூக அறிவியல்களின் செயல் முறைகளை மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். 1. மெய்ப்பொருள் மூலவாராய்ச்சிக் குரியவை (Ontological) : இக் கொள்கை மனித வாழ்க்கைக்குத் தேவையான சமுதாய நடுநிலைமை (Justice), மகிழ்ச்சி ஆகியவற்றை எடுத்து விளக்குகின்றது. 2. ஒப்பளவு முறைக் கொள்கை (Criteriological) : மனிதனுடைய தேவைகள், செயல் முறைகள், முடிவுகள் இவை மதிப்புற்றதா என்ற கேள்வியை நுணுகி ஆராய்கின்றது. 3. கூட்டிணைப்பு முறைக் கோட்பாடு (Synthetic) : மனிதனுடைய செயல்முறை, கோட்பாடு முதலியவற்றை ஒன்று சேர்த்து மனிதனுக்குப் பயன்படச் செய்கின்றது. இவ்வாருகச் சமூகத் தத்துவக் கோட்பாடுகள், சேர்க்கைத் தத்துவ வியலின் (Synthetic Philosophy) தரத்திற்கு, சமூக அறிவியலை மேம்படுத்தி உலக மக்களின் ஒற்றுமையை எடுத்துக் காட்டியுள்ளது.

## 7. சமூக வியலின் மதிப்பு (Value of Sociology)

உலகிலுள்ள உயிரினங்களில் பகுத்தறிவுடைய மனித இனம் தலைசிறந்து விளங்குகின்றது. மனிதன், மக்களுக்கும் விலங்குகட்கும் உள்ள வேறுபாட்டை நன்கு உணர்ந்துள்ளான். மனிதனுக்கு ஆன்மா உயர்ந்த இடத்தை அளிக்கின்றது. மனிதன் அறிவுக் கூர்மை பெற்று பண்பாட்டின் மூலம் சமுதாய விலங்காகத் திகழ்கின்றுன். அவனுடைய அறிவுக் கூர்மையை அவன் பெற்றிருக்கும் பண்பாட்டின் மூலம் வெளிப்படுத்துகின்றுன். மொழி, சமுதாய வாழ்க்கை போன்றவை மனிதனின் பண்பாட்டை

நன்கு விளக்குகின்றன. பண்பாடு மனிதனின் நடத்தை, நோக்கம், எண்ணம் ஆகியவற்றை பாரம்பரியமாக்குகின்றது. மனிதனின் பண்பாடு அவன் வாழும் சூழ்நிலையை மேன்மைப் படுத்துகின்றது. மனித சமுதாயத்தைப் புரிந்துகொள்ள பண்பாடு மிக மிக அவசியம். சமூக அறிவியல்கள் பண்பாட்டின் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ள முயல்கின்றன. பண்பாடு என்னும் சொல் கலை, இசை, இலக்கியம், அறிவியல், தொழில் துறை நுணுக்கம் (Technology), தத்துவம், சமயம் மற்றும் பல இலட்சக் கணக்கான மக்களின் அன்றாட நடைமுறைகளைச் சார்ந்துள்ளது.

பல தரப்பட்ட சமூக அறிவியல்கள் மனித சமுதாயத்தை பல கோணங்களில் விளக்குகின்றன. எனினும் சமூக அறிவியல், மனித சமுதாயத்தின் அமைப்பு (Social Structure), சமுதாய நிறுவனங்கள் (Social Systems), அவற்றின் தன்மைகள், வரம்பு, அவற்றின் மாற்றம் முதலியவற்றை விளக்குகின்றது. மேலும், சமூக அறிவியல் சமுதாயத்தின் செயல் முறைகள், மக்களின் தொடர்பு, நிர்வாகம், திறம் ஆகியவற்றை எடுத்துக்காட்டு கின்றது. மற்றும், சமூக அறிவியல் மக்களின் ஊடாட்டம், மனப் போராட்டம், போட்டி, ஒத்துழைப்பு போன்றவை எவ்வெவ் வகையில் மனிதச் சமுதாயத்தை இயக்குகின்றன என்பதை வெளிப்படுத்துகின்றது. மேலும், சமூக அறிவியல் தனி மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் உள்ள ஒற்றுமை, ஆளுமை முதலியவை மனிதன் பல்வேறு சூழ்நிலைகளில் எவ்வாறு இயங்கு கின்றான் என்பதை தெளிவுபடுத்துகின்றது. இறுதியாகச் சமூக அறிவியல் சமூக மாற்றத்தை (Social change), ஊக்குவிக்கும் காரணிகள் அல்லது தடைப்படுத்தும் காரணிகள், மாற்றத்தின் விரைவு முதலியவற்றை அறிவுறுத்துகின்றது.

மேற்கூறிய குறிப்புகள் அனைத்தும் சமூக வியலின் மதிப்பைக் குறிக்கின்றன. எனினும், சமூக அறிவியலைப் பயில்வதன் மூலம் மனிதன் அடையும் பயன் யாது என்ற வினா எழுகின்றது. சமூக அறிவியலைப் பயில்வதால் மனிதன் தான் வாழும் சமுதாயம் மற்றவர்களின் சமுதாயங்கள் முதலியவற்றைத் தெரிந்து கொள்ளப் பயன்படுகின்றன. மனித சமுதாயத்தின் நோக்கங்கள், கருத் துக்கள் மனிதன் அடைய விரும்பும் முடிவைக் குறிக்கின்றன. நம் நாட்டில் மக்கள் தொகையைக் குறைப்பதற்கு எடுக்கப்படும் முயற்சிகளே சான்று. மக்கள் தொகையைக் குறைக்கப் பொருளாதாரம் அல்லது அரசு சமூகவியலின் உதவியின்றி செயல்பட முடியாது. ஏனெனில், அச் சிக்கல் குடும்பம், மக்களின்

பழக்கவழக்கங்கள், அவர்கள் ஏற்றுக்கொண்ட குறிக்கோள் போன்றவற்றைச் சார்ந்துள்ளது. ஆதலால், சமூக இயலின் விதிமுறைகளைக் கொண்டு அச்சிக்கலை ஆய்ந்து அறிதல் வேண்டும். ஒரு பரந்த சமுதாயத்தில் பல தரப்பட்ட மக்கள் வாழ்கின்றனர். ஒரு குடியானவன், ஒரு தொழிலாளியைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்ள வியலாது. எனினும், அவ்விருவரும் ஒரே சமுதாயத்தில்தான் வாழ்கின்றனர். அவர்களைப் புரிந்துகொள்ளச் சமூகவியல் வழிவகுத்துள்ளது. இன்றைய சமுதாயம் ஒரு சிக்கலான சமுதாயமாக விளங்குகின்றது. மக்களிடையே பலதரப்பட்ட எண்ணங்கள் நிலவுகின்றன. அவற்றைப் புரிந்து கொள்ளச் சமூக அறிவியல் இடமளிக்கின்றது. விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையற்ற சமுதாய எதிரிகளை நற்குணமக்களாக மாற்ற முயல்கின்றது. சமூக அறிவியல் மக்களிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமை ஆகிய இரண்டையும் ஒருங்கே எடுத்துக் காட்டுகின்றது. சமூக அறிவைப் பெற்ற ஒரு மனிதன் பாமர மனிதனைக் காட்டிலும் எல்லாத் துறையிலும் அனுபவம் பெற்று பாராட்டுதலுக் குள்ளாவான். இத்தகைய ஒரு மனிதன், தன்னையும் உணர்ந்து மற்றவர்களையும் புரிந்து கொண்டு சூழ்நிலைக்கேற்பத் தன்னை மாற்றி யமைத்துக்கொண்டு வாழ்வான்.

இறுதியாகப் பல சமுதாயங்களைத் தெரிந்து கொள்வதன் மூலம் ஒருவன் தன் வாழ்க்கைக்குத் தேவையானவற்றைத் தேடிக் கொள்ளுகின்றான். இவ்வண்ணம் அவன் வாழ்வு, முழுமைபெற்று வளம் பெறுகின்றது. சமூக உளவியல், சமூக மானிடவியல், சமூக அறிவியல் போன்றவை மனிதச் சமுதாயத்தையும் அதில் வாழும் மக்களையும் அறிந்துகொள்ள இன்றியமையாதவை. சமூக அறிவியல் சமூகக் குழுக்கள் (Social groups), சமூக நிறுவனங்கள் (Social Institutions), மன்றங்கள் (Associations) இவற்றை அடிப் படையாகக் கொண்டு இயங்குகின்றது. உலகிலுள்ள அறிவியல் களில் சமூக அறிவியல் தனிஇடம் பெற்றுள்ளது. ஏனெனில், அது ஒன்றே சமுதாயத்தை ஒரு கல்விப் பாடமாக ஏற்று விளக்கு கின்றது. சமூக அறிவியல், அறிவியல்களில் மேம்பட்ட அறிவிய லாகக் கருதப்படுகின்றது. சான்றாகத் தாவரவியல், தாவரத்தைப் பற்றித்தான் ஆராய்கின்றது. விலங்கியலும் அவ்வாறே விலங் கினத்தைப் பற்றித்தான் கற்கின்றது. ஆனால், சமூக அறிவியல் உலகிலுள்ள அனைத்தும் எவ்வெவ்வகையில் மனிதனை வாழ்விக் கின்றன என்பதை ஆராய்ந்து வெளிப்படுத்துகின்றது.

## 2. மனித சமுதாயத்தின் அடிப்படைகள்

(BASIS OF HUMAN SOCIETY)

### சமுதாயமும் இயற்கைச் சூழ்நிலையும்

### (Society and the Geographical Environment)

மனிதனைச் சுற்றியுள்ள இயற்கைப் பொருள்கள் மனிதனுக்குச் சூழ்நிலையாக அமைகின்றன. எ-க பூமி, பூமியிலுள்ள கனிப்பொருள்கள், தண்ணீர், மலை, மரம், செடிகொடிகள், விலங்குகள், தட்ப வெப்ப நிலை முதலியன. இத்தகைய சூழ்நிலையில் மனிதன் முன்னேற்ற மடைந்துள்ளான். மேற்கூறிய சூழ்நிலைகள் மனிதன் இல்லாவிடினும் அவை தம் வேலைகளைச் செய்தும் நிலைபெற்றும் விளங்குகின்றன. சாதாரணமாக இத்தகைய சூழ்நிலை மனிதனால் கட்டுப்படுத்த இயலாத சூழ்நிலை என்று கூறப்படுகிறது. எவ்வாறெனில் மனிதன் சூழ்நிலைகளிலிருந்து அவற்றின் பயனை அடையக் கூடுமே தவிர அவற்றை அவனால் மாற்ற இயலாது. எ-க மலை, கடல், தட்ப வெப்ப நிலை இவற்றை அழிக்கவோ ஆக்கவோ மனிதனால் இயலாது. எனினும் இவற்றின் மூலம் மனிதன் நன்மையைப் பெறலாம். எ-க மலையைக் குடைந்து தொடர் வண்டிப் பாதைகளை அமைத்து ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்ல முடியும். நீராவிக் கலத்தை (கப்பல்) உருவாக்கிக் கடலைக் கடந்து வெளிநாட்டிற்குச் சென்று வருதல். இவ்வண்ணம் மனிதன் இயற்கையின் ஆற்றல்களை கட்டுப்படுத்த முடியாதவன் எனினும் அவற்றோடு இணைந்து நன்மையைப் பெற்று வருகிறான். சுருங்கக் கூறின் மனிதன் இயற்கைச் சூழ்நிலையைப் பண்டைக் கால முதல் இன்று வரை பற்பல வகையில் பயன்படுத்தி வருகின்றான்.

இயற்கைச் சூழ்நிலையை இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்க இயலும். கட்டுக்கடங்கிய சூழ்நிலை, கட்டுக்கடங்கா சூழ்நிலை.

கட்டுக்கடங்கும் சூழ்நிலையைச் சமுதாயச் சூழ்நிலை என்றும் கட்டுப் படுத்த இயலா சூழ்நிலையை இயற்கைச் சூழ்நிலையென்றும் கூற லாம்.

நாம் பல துறைகளிலிருந்தும் அறிவைப் பெற்று அவற்றிற்கும் மனிதனுக்கும் உள்ள உறவைப் புரிந்து கொள்ளுவதே சூழ்நிலை யின் முக்கிய நோக்கம். இயற்கைச் சூழ்நிலை மூன்று பிரிவுகளை மேற்கொண்டுள்ளது. 1. தட்ப வெப்ப நிலை. 2. இயற்கை யால் உண்டாக்கப்பட்டுள்ள சூழ்நிலை. 3. இவற்றின் விளைவாக ஏற்படும் சூழ்நிலை.

2. உயிரியல் சூழ்நிலை விலங்கு, தாவரம் முதலியவற்றின் பிரிவுகளையும் மனிதன் இவற்றால் அடையும் பயன்களையும் குறிப் பிடுகின்றது.

3. சமுதாயச் சூழ்நிலை மக்களிடையே நட்பு தொடர்பு பழக்க வழக்கங்கள் முதலியவற்றை நிறுவனங்களின் மூலம் எடுத்துக் காட்டுகின்றது. சமுதாயச் சூழ்நிலை மூன்று துணைப்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1. பொருளாதாரச் சூழ்நிலை (Economic Environment). 2. பண்பாட்டுக்குட்பட்ட சூழ்நிலை (Cultural Environment). 3. மன நிலைக்கும் சமுதாயத்திற்கும் இடையே தொடர்புடைய சூழ்நிலை (Psycho-Social Environment).

பொருளாதாரச் சூழ்நிலை செல்வம் அவற்றின் பெருக்கம், அவற்றைப் பயன்படுத்தும் அவற்றைப் பங்கீடு செய்யும் முறை ஆகியவற்றை மனிதனுக்கு எடுத்துக் காட்டுகின்றது. நாகரிகத்தின் விளைவாகிய நடை, உடை பழக்க வழக்கங்களை பண்பாட்டுச் சூழ் நிலை விளக்குகின்றது.

மானிடச் சமுதாயத்தின் எண்ணங்களையும் அவ்வெண்ணங்கள் பாமர மக்களை எவ்வெவ் வகையில் பாதிக்கின்றன என்பதைச் சமுதாயச் சூழ்நிலை எடுத்துக்காட்டுகின்றது.

ஒவ்வொரு மாற்றமும் உலகிலுள்ள உயிரினங்களை ஓரளவு மாற்றுகின்றது. அதேபோல் சூழ்நிலையும் மனித இனத்தைப் பாதிக்கின்றது. ஆதலால் உயிரினங்களும் சூழ்நிலையும் ஒன்றை விட்டு ஒன்று இயங்க இயலாது. மனிதன் தன்னுடைய விடா முயற்சி, விட்டுக் கொடுக்கும் தன்மை, தேர்ந்தெடுக்கும் வகை இவற்றைப் பெரும்பாலும் கையாண்டு வாழ்ந்து வருகின்றான். சூழ்நிலை, வாழ்க்கை, சமுதாயக் குழு ஒருங்கே இயங்குவதை மனித சமுதாயங்களில் மட்டுமே காணலாம். மக்கள் கிராம வாழ்க் கையை விட்டு நகர வாழ்க்கையில் ஈடுபடுவதும் குளிர் நாடுகளி லிருந்து வெப்ப நாடுகளில் குடியேறுவதும் சூழ்நிலையை மாற்றிக் கொள்ளும் வகையை எடுத்துக் காட்டுகின்றன.

சமூக வல்லுநர்கள் இயற்கை-சமூதாயச் சூழ்நிலையையும் அதன் ஒற்றுமை வேற்றுமைகளையும் ஆய்ந்து முடிவு செய்துள்ளனர். இதற்கு எடுத்துக்காட்டாகச் சூழ்நிலைக்கேற்ப மூன்று வகைப்பட்ட இணைந்து போகும் முறைகளை விளக்கியுள்ளனர். இக்கூற்றுக்கேற்ப மனிதன் சூழ்நிலைக்கு இணைந்து போகும் இயல்பைப் பெற்றுள்ளான் (Man adapts to his environment) என்னும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர். பொதுவாக, மனிதன் 1. இயற்கையோடு இணைந்து போதல் (Physical adaptation ), 2. உயிரினங்களோடு இணைந்து போதல் (Biological adaptation ) 3. சமுதாயத்தோடு இணைந்து போதல் (Social adaptation) ஆகியவற்றை ஏற்றாலன்றி மகிழ்ச்சியோடு வாழ இயலாது.

இயற்கை யன்னையின் செயல்களை மனிதனால் ஒருபோதும் மாற்ற இயலாது. எ-க கதிரவன் ஒளி, வெப்பம், மதியின் தண்மை என்பன. இத்தகைய மாறுதல்களை மனிதன் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். இவற்றை இயற்கை விதிகள் (Natural Laws) என்று கூறுகின்றனர். இயற்கை தன் செயல்களைச் செய்தும் இறுதியாக மனிதனை மண்ணோடு மண்ணாக்குகின்றது. மனிதன் எத்தகைய சூழ்நிலையிலிருந்தாலும் ஏழ்மை அல்லது செல்வ நிலை, காட்டுவாழ்க்கை அல்லது நாட்டுவாழ்க்கை, நன்மை அல்லது தீமை இவற்றால் பாதிக்கப்படுகின்றான். மேற்கூறிய சான்றுகள் மனிதன் எவ்வெவ் வகையில் சூழ்நிலைக்கேற்ப இருந்தும் இயங்கியும் வாழ்கின்றான் என்பதை எடுத்துக் காட்டுகின்றது.

சமுதாயச் சூழ்நிலை சிற்சில வாழ்க்கைக் குறிக்கோளை மனிதன் ஏற்றுக்கொண்டு வாழ்வதைக் குறிக்கின்றது. மனிதன் மற்ற உயிரினங்களைப் போல் வாழ்ந்தாலும் அவனுடைய அறிவுத் திறன் சூழ்நிலையைத் தனக்கு நன்மை பயக்கும் சூழ்நிலையாக்கிக் கொள்ளுகின்றான். சமூக வல்லுநர்கள், "மனிதன் மாறி மாறி வரும் இயற்கைச் சூழ்நிலையை எதிர்த்தும் ஏற்றுக்கொண்டும் பயன்படுத்திக்கொண்டும் வாழ்வதை" எடுத்துக் காட்டுகின்றனர்.

சூழ்நிலையை வேறு வகையிலும் பிரிக்கலாம். 1. சமுதாயத்திற்குள் இயங்கும் சூழ்நிலை, 2. அதற்கப்பாற்பட்ட சூழ்நிலை. விதிகள், நிறுவனங்கள், விதி வழிகள் இவற்றை ஒருங்கிணைத்து மனிதன் தொன்றுதொட்டு வாழ்ந்ததை சமுதாயத்திற்குள் இருக்கும் சூழ்நிலை எடுத்துக் காட்டுகின்றது. இச் சூழ்நிலைக்கு மற்றொரு பெயர் சமுதாயத் தொன்மைப் பழக்கம் (Social Heritage) என்பதாகும்.

புறச் சூழ்நிலை மனிதன் வாழும் வீடு, நாடு, நகரம் மற்றுமுள்ள வசதிகளைக் குறிக்கின்றது. மானிட இயல் வல்லுநர்கள் இவற்றை ஒருங்கே செயற்கைப் பண்பாடு (Material culture) என்று கூறுகின்றனர்.

சூழ்நிலை மனிதனுடைய இணைந்து போகும் தன்மையைப் பொதுவாக எடுத்துக் காட்டுகின்றது. கிரகாம் வாலஸ் (Graham Wallas) என்பவர் மனிதன் பிறந்தது முதல் எண்ணங்களையும் கொள்கைகளையும் மேற்கொண்டு அவற்றிற்கேற்றவாறு சூழ்நிலையைத் திருத்தியும் அமைத்தும் நாகரிகத்தின் வளர்ச்சியை புலப்படுத்தியுள்ளான் என்று கூறுகின்றார். இத்தகைய மாறுதல்களை நாம் பண்டைக்காலச் சமுதாயத்திலிருந்து தொடங்கி நாகரிகத்தை முற்றிலும் ஏற்றுள்ள சமுதாயத்தின் வரலாற்றால் தெரிந்து கொள்ளுகின்றோம். தற்போதுள்ள சமுதாயச் சூழ்நிலை மிகச் சிக்கலானது. மனிதன் இத்தகைய சூழ்நிலையில் வாழ்ந்து கொண்டு மேன்மேலும் உயர முயலுகின்றான்.

## 2. மனித சமுதாயமும் விலங்கினமும் (Human Versus Animal Society)

மக்கள் கூடி வாழ்வதை மனித சமுதாயமென்று கூறுகின்றோம். மக்களேயன்றி மற்றுமுள்ள எறும்பு, சிதலை (கறையான்) பறவைகள், குரங்குகள் போன்ற உயிரிகளும் கூடி வாழ்கின்றன. மனித சமுதாயத்திற்கும் விலங்கினத்திற்கும் ஓரளவு தொடர்பு உண்டு. மனித சமுதாயம் படிப்படியாக விலங்கினத்தை ஒத்து விரிவடைந்துள்ளது. இம் முடிவு அறிவியலால் ஓரளவிற்கு நிரூபிக்கப்பட்டபோதிலும், விலங்கினம் அல்லது விலங்கினத்தின் மூலம் அறியும் அனுபவங்கள் மனித சமுதாயத்தை முற்றிலும் விளக்க இயலாது. விலங்கினத்தைப் புரிந்து கொள்வது மனித சமுதாயம் பரிணாமக் கொள்கையைக் கொண்டு எவ்வெவ்வகையில் முன்னேற்ற மடைந்துள்ளது என்பதை எடுத்துக்காட்டுகின்றது. மேலும், மனிதனுக்கும் விலங்கிற்கும் உள்ள பொதுத் தன்மைகளை எடுத்துக் காட்டி மனிதனின் தனித் தன்மைகளைப் புலப்படுத்துகின்றது.

சமுதாயக் குழுக்களை முழுமையாக விளக்குமுன் அதன் பொதுத் தன்மைகளைச் சிறிது ஆய்வோம். எல்லாக் குழுக்களிலும் உயிரிகள் ஒன்றுசேர்ந்தே வாழ்கின்றன. அவையனைத்தும் சங்கம் அல்லது மன்றக் கொள்கைகளை அல்லது கோட்பாடுகளை இயற்கையாகவே கொண்டு விளங்குகின்றன. வெள்ளம், புயல்

போன்ற புற ஆற்றல்களால் உயிரிகள் ஒன்றுசேர்வதற்கும் அவை தாமாகவே தம் தேவைகட்கேற்ப ஒன்றுகூடி வாழ்வதற்கும் வேறுபாடுண்டு. இத்தகைய உயிரினச் சேர்க்கை மனித சமுதாயத்தை வேறுபடுத்திக் காட்டுகின்றது. எனினும், சிற்சில தன்மைகள் உயிரிகட்குப் பொதுவாக உள்ளன. சான்று: விலங்குகள் தங்கள் பசியை ஆற்றிக் கொள்ளுதல். அதேபோல் மனிதன் தன் தேவையை நிறைவேற்ற செயல்படுதல். எல்லா உயிரிகளும் ஒன்றுகூடி தம் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதே சமுதாயத்தின் உண்மையான கோட்பாடு. ஒரு ஓநாய், தனித்து நின்று தனக்கு இரையாகும் பிற விலங்கை வேட்டையாட இயலாமையால் மற்ற ஓநாய்களைக் கூட்டி வேட்டையாடி உணவைப் பகிர்ந்து உண்டு உயிர் வாழும். முட்டைப் புழுவினின்று (Larva) இனிய மெல்லிய நீர்போன்ற இழை வெளிப்படுவதை வேலை செய்யும் குளவிகள் உறிஞ்சுவது நரம்புவகையில் உணவூட்டஞ் சார்ந்த (Trophic) செயல் என்றும் அது ஒன்றை ஒன்று சார்ந்த தென்றும் மேலும் அது சமுதாய உறவை எடுத்துக் காட்டுகின்ற தென்றும் கூறப்படுகின்றது. மேற்கூறிய சான்றுகள் விலங்கினத்தின் பசிப் பிணியைப் போக்குவதன் பொருட்டு விலங்குகளிடையே புறத் தூண்டுதலும் அதற்கெதிரான செயலும் காணப்படுகின்றன. இவ்விரு செயல்களும் இல்லையெனின் விலங்கினத்திற்குள் இனப் பெருக்கம், தற்காப்பு, ஒற்றுமை போன்றவை இரா. பெரும்பாலான சான்றுகளில் கூட்டங்களுக்கும் சமுதாயத்திற்கும் உள்ள வேறுபாடுகளை எடுத்துக் காட்டுவது மிகவும் கடினம். ஏனெனில் சிற்சில கீழ்த்தர மனித சமுதாயங்களும் விலங்கினத்தைப் போலுள்ளன. அத்தகைய சமுதாயங்கள் அக் கூட்டத்திலுள்ள மக்கள் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளாமலும் தெரிந்து கொள்ளாமலும் வாழ்வதே யாகும். சமுதாய உறவு புறத் தூண்டுதல் (Stimulus) எதிர்ச் செயல் (response) ஆகிய இவற்றை மேற்கொண்டு செயல்படுகின்றது. மேலும், செயல் படுவதற்கு ஒருமுறை (System) இன்றியமையாதது.

உயிரணுவைப் போல் சமுதாயம் பலதரப்பட்ட உறவை மேற்கொண்டு செயல்படுகின்றது. ஆதலால், சமுதாயத்தை விளக்க ஒரு தனி மனிதனைச் சான்றாக்க இயலாது. சமுதாயம் கல், மண், சுண்ணாம்பு ஆகிய இவற்றால் உருவாக்கப்பட்ட ஒரு இல்லம் போல் பல தரப்பட்ட மக்கள் அவர்தம் செயல் முதலியவற்றால் அமைக்கப்பட்டுள்ளது. சமுதாயவாழ்க்கை அக்குழு வாழ்க்கையின் தரம், சுற்றுப்புறச் சூழல் ஆகிய இவற்றை எடுத்துக்காட்டி குழுவிலுள்ள மக்களுக்கு வலிமை, சிறப்பு, அதன் தனித் தன்மை போன்றவற்றை ஊக்குவித்து பாதுகாப்பு

சத்துணவு முதலியவற்றை ஊட்டிச் சமுதாயத்தைத் மேன்மேலும் வளரச் செய்கின்றது.

உயிரணுக்கள் அடங்கிய புழு, பூச்சிகள், விலங்கினங்கள் ஆயினும் மக்களடங்கிய குழுவாயினும் மூன்று முக்கிய விதிகளைப் புறக்கணிக்க வியலாது. அவையாவன ஒன்றையொன்று சார்ந்து வாழ்தல், உணவு உட்கொள்ளுதல், இனப்பெருக்கம் ஆகியவை. இவை மூன்றும் ஒன்றேடொன்று தொடர்புடையவை. மேலும், ஒவ்வொரு உயிரினக் குழுவும் உணவைச் சேகரித்தும், மற்றைய உயிரிகள் அவ்வுணவைப் பறிக்காமல் பாதுகாத்தும், தத்தம் சேவைக்கேற்ற பலனை எதிர்பார்த்தும் வாழ்கின்றன. மற்றும் எல்லா உயிரிகளும் சூழ்நிலையைத் தத்தம் தேவைக் கேற்பப் பயன்படுத்திக் கொள்ளுகின்றன. மேலும், ஆண் பெண் சேர்க்கை, அவ்வுயிரிகளின் இனப் பெருக்கத்திற்கு இன்றியமை யாதது. மேற்கூறிய அனைத்தும் உயிரிகள் கூடி வாழ்வதன் மூலம் அறியக்கிடக்கின்றன.

குழுச் செயல்களை நிறைவேற்ற உயிரிகளிடத்தே சேவைப் பிரிவு காணப்படுகின்றது. சான்று ஆடுமாடுகளிடத்தே மிகக் குறைவாகவும் தேனீக் கூட்டத்தில் மிக அதிகமாகவும் காணப் படுகின்றது. உயிரிகள் தம் பணியைச் செவ்வனே செய்வதன் மூலம் அவை தம்மிடையே சேவைக் கேற்பச் செயல் புரியும் குழு இருப்பதை அறிகின்றோம். சுருங்கக் கூறின் ஒரு உயிரிக் குழு அல்லது ஒரு உயிரி இறப்பினும் அதை ஈடு செய்யும் பொருட்டு மற்றைய உயிரிகள் அல்லது உயிரிக் குழுக்கள் பரம்பரை பரம்பரையாகத் தொழில் நடத்துவதுபோல் தொழில் புரியும். புழு பூச்சி போன்ற உயிரினம் முதல் மனிதன் வரை பொதுவாக ஏற்கக்கூடிய சில விதிகள் உள்ளன. அவை 1. இனப் பாதுகாப்பு. இனப்பாதுகாப்பாவது, உணவளித்தல், தற்காப்பு, இனப்பெருக்கம் போன்றவை. 2. தாங்கள் செய்யவேண்டும் பணியைத் தங்கள் இனத்திற்குள்ளேயே பகிர்ந்து கொள்ளுதல். 3. குழு ஒற்றுமை. இவ்வொற்றுமை குழுவிலுள்ள உறுப்பினர் களின் தொடர்பு ஒன்றை யொன்று ஓரளவிற்குப் புரிந்து, விட்டுக் கொடுத்து அப்பாற்பட்ட உயிரிகள் அக்குழுவைச் சிதைக்காமல் பாதுகாப்பது. 4. சமுதாய அமைப்பை நீடிக்கச் செய்தல். இவை யனைத்தும் உயிரிகள் அவை உயிருடன் வாழ்வதற்காக மேற் கொள்ளப்பட்டவை. மேலும், உயிரி இனத்தை நீடிக்கச் செய்தல்.

பெரும்பாலும் குழுக்கள், நிலையான அமைப்புடைய குழுக்கள் ஆகிய இவை உயிரி-சமுதாயத் தன்மைகளை மரபொப்புத் திறனைக்

கொண்டு செயல்படுத்துகின்றன. விலங்கினம் மேற்கூறிய தன்மையை விளக்குகின்றது. மனிதனே மேற்கூறிய தன்மைகளோடு சமுதாயப் பண்பாட்டையும் ஏற்றுக்கொண்டு செயல் படுகின்றான். பொதுவாக உயிரிகள் தம் தேவைகளை மரபொப்புத் திறனால் நிறைவேற்றிக் கொள்ளுகின்றன. மரபொப்புத் திறனை யொட்டிய ஊக்கம் விலங்கினத்திடையே காணப்பட்டு ஒரு குழுவாகச் செயல் புரிவதைக் காணுகின்றோம். ஆதலால் பெரும்பாலும் குழுத்தன்மை மரபொப்புத் திறனை அடிப்படையாகக் கொண்டுள்ளது. எனினும், எல்லா உயிரிகளும் ஒரே தன்மையில் செயல்படுவதில்லை. சான்று : கறையான் கூட்டத்திற்கும் பறவை இனத்திற்கும் பரந்த வேறுபாடுகள் உள்ளன. கறையான் பணியாளர் பிரிவுகளைக் கொண்டு தமக்கேற்ற சூழ்நிலையை உண்டாக்கி அச்சூழ்நிலையில் ஒத்துழைக்கின்றன. இதற்கு மாறாகப் பறவையினக் கூட்டம் ஓரளவு தனிப்பட்ட முறையில் செயல்படுகின்றன. இவ்விரண்டு குழுவிற்கும் மரபொப்புத் திறனே அடிப்படையாகும். ஒவ்வொரு இனமும் தத்தம் குழுத்தன்மையை வெகு சிறப்பாக எடுத்துக்காட்டுகின்றன. மாறாக, மனித சமுதாயத்தில் மக்களிடையே பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. எவ்வாறெனில் மனிதனின் சமுதாயத் தன்மைகள் மரபொப்புத் திறன், சுற்றுப்புறச் சூழ்நிலை, பண்பாடு, நாகரிகம் ஆகிய எல்லாவற்றையும் மேற்கொண்டுள்ளன. இவை அனைத்திற்கும் அடிப்படைக் காரணம் மற்ற உயிரிகளைக் காட்டிலும் சிறப்பாகப் பெற்ற பகுத்தறிவேயாகும். மனித சமுதாயத்திலுள்ள மக்கள் உயிரி-சமுதாயப் பண்பாடு கொண்ட இனத்தைச் சார்ந்தவர்கள். குட்டிப் போட்டுப் பால் கொடுக்கும் இனத்தை புழு பூச்சிகளிலிருந்து வேறுபடுத்துவது வடிவ அமைப்பினாலாகும். பொதுவாக ஒரு பசுவிற்கும் ஒரு எருதிற்கும், ஒரு ஆண் பூனைக்கும் பெண் பூனைக்கும், ஆண் குரங்கிற்கும் பெண் குரங்கிற்கும் மேலும் ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள வேறுபாடுகள் மிகக் குறைவே. மேலும், வெளிப்படையாகத் தெரிந்து கொள்வதும் அரிதே ! மேல்நாட்டு நாகரிக மோகம் கொண்ட தற்கால இளைஞரிடையே பால் பாகுபாடு காண்டல் அரிது ! [ஹிப்பி].

மிக விரிவடைந்த புழு, பூச்சிக் குழுக்களிலும் விலங்கினக் குழுக்களிலும் பெண்ணினத்தை ஓரளவிற்கு ஆணினத்திலிருந்து பிரிக்கக் கூடும். சான்று : தேனீக்களிடையே ராணி ஈக்கள், வேலையாள் ஈக்கள் என்பன. மேலும், எறும்புகளிடையே பெண் எறும்புகள், ஆண் எறும்புகள். வேலையாள் எறும்புகள் ஆகிய இவற்றைக் காட்டிலும் உருவ அமைப்பில் மிகப் பெரியவை.

குட்டி ஈன்று பால் கொடுக்கும் இனத்தில் பெண் இனத்திற்கு, இனத்தைப் பெருக்கும் அரும்பணி நல்கப்பட்டுள்ளது. புழு, பூச்சி இனம் வெகு விரைவில் இனத்தைப் பெருக்கக் கூடிய ஆற்றல் வாய்ந்தவை. அவை ஆயிரக்கணக்கில் பெருகியும் குறுகிய காலத்தில் அழிந்தும் விடுகின்றன. விலங்கு, மனித இனத்தில் ஈன்றெடுத்த குட்டி, குழந்தைகள் எண்ணிக்கையில் குறைவாகவும் நீடித்த காலம் வாழ்வனவாயும் உள்ளன. மனித சமுதாயத்திலுள்ள மக்கள் பாரம்பரியம், தொழில் நுணுக்கம், உற்றுநோக்கல் போன்றவை மூலம் முன்னேற்றமடைந்துள்ளனர். மாறுக ஒரு குரங்குக் குட்டியின் தாய் தன் குட்டிக்கு சிலவற்றை மட்டும் கற்றுத் தரவியலுமே யன்றி அவற்றை மனதில் ஏற்று அடுத்த தலைமுறைக்குக் கற்பிக்க இயலாது. ஆதலால் சமுதாய மக்களுக்குப் பல நன்மைகள் உள. 1. நீடித்த ஆயுள், 2. நீண்ட இளமைப் பருவம், 3. தாய் குழந்தையைப் பராமரித்தல், 4 அப்பருவத்தில் குழந்தை முயற்சி, தவறு (Trial and Error) என்ற முறையைப் பயன்படுத்துதல், 5. குழந்தைகள் விளையாடுவதால் ஏற்படும் நன்மைகள், 6 பெற்றோர் மற்றும் சுற்றம், சூழ்நிலை போன்றவற்றிலிருந்து நன்மை பெறுதல் ஆகியவை. மேற்கூறிய அனைத்தும் மனித சமுதாயத்திற்குஇன்றியமையாதவை எனினும் மனிதன் ஒரு குழுவில் வாழ்ந்து தன் தனித் தன்மையைப் புலப்படுத்துகின்றான். உயிரினங்களைப் படைத்த இறைவன் மக்களை மாக்களினின்றும் வேறுபடுத்தப் பகுத்தறிவு, கல்வியறிவு, பேச்சறிவு ஆகிய மூன்று செல்வங்களை அளித்துள்ளான். இவற்றின் மூலம் மனிதன் உயிரினங்களுக்கிடையே ஓர் உன்னத நிலையைப் பெற்று விளங்குகின்றான். பண்பாட்டறிவு மனிதனுக்குப் பலதரப்பட்ட நன்மைகளை அளித்துள்ளது. ஏனெனில், பண்பாடு மனிதத் தன்மையை எடுத்து விளக்குகின்றது. குறுகிய கால வாழ்க்கை வாய்ப்புடைய புழு பூச்சிகள், விலங்குகள் ; நீடித்தகால வாழ்க்கையை உடைய மனிதன் ஆகிய எல்லா உயிரினங்களும் தத்தம் தேவைக்கேற்பச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு உயிர் வாழ்கின்றன.

## 3. மரபொப்புத் திறனும் சூழ்நிலையும்
## (Heridity and Environment)

மரபொப்புத் திறன் மனிதனின் உடற்கூறு, உளக்கூறு ஆகிய இவற்றின் தன்மைகளை ஒருங்கே தாய் தந்தையரிடமிருந்து முறையே பெற்றதாகும். இத்தன்மைகள் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வருகின்றன. சான்றாக நீக்ரோ குழந்தைகள் தங்கள் பெற்றோர்களுடைய உடல் அமைப்புகளைக் கொண்டுள்ளன.

வெள்ளையரின் குழந்தைகள் அவ்வினத்திற்குரிய தன்மைகளைப் பெற்று வளர்கின்றன. மரபொப்புத்திறன் உடலமைப்பு தோலின் நிறம், முடியின் நிறம், மூக்கு, கண், காது இவற்றின் அமைப்பு, மண்டையோட்டின் நீளம் அகலம் ஆகியவற்றை எடுத்துக் காட்டுகின்றது.

அறிவியல் ஆராய்ச்சிக்கு முன் மரபொப்புத் திறன் பெற்றோர் இரத்தம் ஒன்று சேர்வதன் பொருட்டு குழந்தைகளின் அமைப்பு உருவாக்கப்படுகிறது என்று கருதப்பட்டது. மெண்டல் (Mental) என்னும் அறிஞர் மரபொப்புத் திறன் உயிர்மத்தின் இணை மரபுக் கீற்றுக்கு (Gene) உட்பட்டுள்ளது என்று கூறியுள்ளார். குழந்தைகளின் மரபொப்புத் திறன் உயிர்மத்தின் இணை மரபுக்கீற்றின் மூலம் உடற் கூற்றையும் உளக் கூற்றையும் முடிவு செய்கின்றது. மரபொப்புத்திறன் வலிமையுள்ளதும் அல்லாததும் உயிர்மத்தின் இணைமரபுக் கீற்றுக்களைச் சார்ந்துள்ளது. சான்றுகப் பெற்றோர்கள் நல்ல நிறம் உயரம் முதலியவற்றைப் பெற்றிருந்தால் குழந்தைகளும் அவர்களைப் போல விளங்குவார்கள். சிற்சில வேளைகளில் பெற்றோர்கள் அழகாக இருப்பினும் ஒரு குழந்தை அழகின்றி இருக்கக்கூடும். ஏனெனில் பெற்றோரின் மூதாதையர்களின் உயிர்மத்தின் இணை மரபுக் கீற்று இயங்குகின்றது.

பல இனத்தைச் சார்ந்த குழந்தைகளையும் அவர்தம் பெற்றோர்களையும் ஒப்பிட்டு நோக்கினல் மரபொப்புத் திறனின் விளைவுகளைக் காணலாம். பொதுவாக மரபொப்புத் திறன் உடல் தோற்றத்தை முடிவு செய்கின்றது. எனினும் பல அறிஞர்கள் உணவு, சுற்றுப்புறம் இவையும் மனிதனின் வாழ்க்கையை உருவாக்குகின்றன என்று கூறுகின்றனர். அமெரிக்காவில் உள்ள நீக்ரோ குழந்தைகளும் அமெரிக்கக் குழந்தைகளும் இதற்குச் சிறந்த சான்றுகள். பொதுவாக மரபொப்புத் திறன் உடலமைப்பைப் பொறுத்துள்ளதே தவிர அறிவுக் கூர்மை, ஆளுமை முதலியவற்றைப் பாதிப்பதில்லை என்று கூறப்பட்டுள்ளது. இதை நிலைநாட்ட அமெரிக்க நாட்டில் இரண்டு பெரிய குடும்பங்களை ஆராய்ந்துள்ளனர். அஃதாவது ஏழ்மைக் குடியினரான ஜூக்ஸ் (Jukes) குடும்பத்தினர் செல்வக் குடியினரான எட்வர்ட் (Edward) குடும்பத்தினர் ஆகிய இவ்விரு குடும்பங்களின் உறுப்பினர்களை ஒப்பிட்டுப் பார்த்ததில் ஜூக்ஸ் (Jukes) குடும்பத்தினரில் பலர் நோய்வாய்ப்பட்டவர்களாயும் ஒழுக்கக் கேடுடையவர்களாயும் கொலைகாரர்களாயும் குற்றவாளிகளாயும் இருந்தனர். இதற்கு மாருக எட்வர்ட் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் பெரிய பொறுப்புள்ள பதவிகளை ஏற்றும் ஆசிரியர்களாயும் தேசத் தலைவர்களாயும்கூட விளங்கியிருக்கின்றனர்.

இவ்வாராய்ச்சியின் மூலம் மரபொப்புத் திறன் மனுவின் உடல், உளத் தன்மைகளை பாதிக்கின்றது என்று கூறப்படுகின்றது.

மரபொப்புத் திறனே சூழ்நிலையோ மனித நடத்தையை உறுதி செய்கின்றது என்ற வினு பழங்கால முதல் இருந்து வருகின்றது. மாபொப்புத் திறனை மேற்கொண்டுள்ள அறிஞர்கள் அதுவே மனிதனை ஆளாக்குகின்றது என்றும் சூழ்நிலையை மேற்கொண்டுள்ள வல்லுநர்கள் மனிதன் சூழ்நிலையால் மட்டுமே உருவாக்கப் படுகின்றுன் என்றும் சொல்லாடு (விவாதிக்)கின்றனர். எனினும் மனிதனை உருவாக்க இரண்டுமே இன்றியமையாதவை. இவற்றுள் சிறந்தது எது என்பதுவே விஞவாகும். மரபொப்புத் திறன் கால்டன் (Galton), கார்ல் பார்சன் (Karl Parson), மேக்டூகல் (Mcdougall) என்னும் அறிஞர்களால் உயர்த்தப்பட்டுள்ளது. இதற்கு மாருக நடத்தைக் கொள்கையாளர் வாட்சன் (W.B. Watson) சூழ்நிலையே மிகவும் இன்றியமையாத தென்று விளக்கியுள்ளார். மரபொப்புத் திறனு அல்லது சூழ்நிலையா ஒரு மனிதனுக்கு மிக இன்றியமையாதது என்பதை எடுத்துக்காட்ட இரட்டைக் குழந்தைகளின் மூலம் ஆய்ந்துள்ளனர். இவ்வாராய்ச்சியை "இயற்கையும் வளர்ப்பும்" (Nature versus Nurture) என்பதன் மூலம் எடுத்துக்காட்டியுள்ளனர். சான்ருக மேரி, மேபல் (Mary Mabel) என்னும் இரட்டைச் சிறுமிகள் மாறுபட்ட சூழ்நிலையில் வளர்க்கப்பட்டனர். எனினும் மரபொப்புத் திறனு சூழ்நிலையா எது இன்றியமையாதது என்று கண்டுபிடிக்க முடியவில்லை. இத்தகைய சான்றுகளிலிருந்து நாம் உணர்வது மரபொப்புத் திறனும் சூழ்நிலையும் மனித வளர்ச்சிக்கு அவசியம் என்பது புலனுகின்றது. இவற்றின் இன்றியமையாமையை விளக்க இரண்டு விதிகள் கொடுக்கப்பட்டுள்ளன. 1. உளநிலை பகுப்பாய்வுக் கொள்கை (Psycho Analytic theory), சிக்மெண்ட் ப்ராய்டு (Sigmunt Freud) 1856—1940. 2. மார்க்சிசின் கொள்கை (Marxist theory).

உளநிலை பகுப்பாய்வுக் கொள்கை மனிதனுடைய எல்லாச் செயல்களும் மேலும், எல்லா விதிகளும் மனிதனுடை உணர்ச்சியின் (Libido) உந்துதலைப் பொருத்துள்ளது. மனிதன் சாதாரணமாக இன்பத்தை மேற்கொண்டு துன்பத்தைத் தவிர்க்க முயல்கின்றுன். எனினும் சூழ்நிலை பலதரப்பட்ட இயல்பூக்கங்களைத் தூண்டிவிடுகின்றது. சில இயல்பூக்கங்கள் மனிதனுடைய வாழ்க்கையைப் பாதிக்கின்றன. சிலவற்றை அழுத்தியும் சிலவற்றை வெளிப்படுத்தியும் சுற்றுப்புறச் சூழ்நிலையை மனிதன் பயன்படுத்திக் கொள்ளுகின்றுன்.

மார்க்சிசம் என்னும் கொள்கைக்கும் மரபொப்புத் திறனுக்கும் அதிக தொடர்பு இல்லை. மார்க்சிசம் மனிதனை ஒரு இயந்திரம் என்று கருதி அவன் பொருளாதாரச் செயற்கைச் சூழ்நிலையைத் தன் நன்மைக்கே பயன்படுத்திக் கொள்ளுகின்றான் என்று கூறுகின்றது. செயற்கை உற்பத்தி மனிதனுடைய சமுதாயம், அரசியல் மேலும் ஆன்மீக முன்னேற்றம் முதலியவற்றை நிறைவு செய்கிறது. எனவே மார்க்சிசம் பொருளாதாரக் கொள்கைக்கு முதலிடம் கொடுத்துள்ளது. இத்தகைய கருத்தை மேற்கொள்வதும் முற்றிலும் பொருந்தாது. லூயிஸ் என்னும் அறிஞர் "மனிதன் ஓரளவிற்கே சூழ்நிலையால் பாதிக்கப்படுகின்றான்" (Man is partly determined by his environment) என்று கூறியுள்ளார்.

மரபொப்புத் திறனும் சூழ்நிலையும் இணைந்தே மனிதனின் வாழ்க்கையைத் திறம்படச் செய்துள்ளன. இவை இரண்டிற்கும் ஒற்றுமை வேற்றுமை ஆகிய இரண்டும் இருந்தாலும் ஒன்றைப் பிரிந்து மற்றொன்றை அறியவோ உணரவோ இயலாது. ஒரு மரத்தின் வளர்ச்சிக்கு காற்று, தண்ணீர், கதிரொளி, விதை முதலியவை எவ்வளவு அவசியமோ அதேபோல் சூழ்நிலையும் மரபொப்புத் திறனும் மனிதனுக்கு அவசியம். இவை இரண்டும் இணைந்தே மனிதனை ஆளாக்கியுள்ளன. ஒரு ஓவியக் கலைஞனுக்கு அவன் மனதிலுள்ள எண்ணங்களை வெளிப்படுத்த தூரிகை (brush) எவ்வளவு இன்றியமையாததோ அதேபோல் மனிதனுக்குச் சூழ்நிலை அவசியம். மரபொப்புத் திறன் மனிதனுக்குள்ள தன்மையை சூழ்நிலையின் வாயிலாக வெளிப்படுத்த உதவுகின்றது. சமூக வல்லுநர்கள் சூழ்நிலையின் இன்றியமையாமையை எடுத்துக் காட்டி மனிதன் மேன்மையடைந்ததை விளக்குகின்றனர்.

## 4. மக்கள் நெறியும் பழக்க வழக்கங்களும் (Customs, Folkways and Mores.)

நிறுவனங்களும் மன்றங்களும் மக்கள் நெறியையும் பழக்க வழக்கங்களையும் அடிப்படையாகக் கொண்டு உருவாயுள்ளன. எடுத்துக்காட்டாக மனிதன் உணவு நெறிப் பழக்கம் மொழிப் பழக்கம் இளைஞரைப் பழக்குதல் முதியோரைப் பாதுகாத்தல் என்பன. சமுதாயத்தின் பழக்க வழக்கங்களை மனிதன் ஏற்றுக் கொண்டு வாழ்வதுதான் சமுதாய வாழ்க்கை. மனிதன் அறிந்தோ அறியாமலோ பழக்க வழக்கங்களை ஏற்று அவற்றில் ஊறியுள்ளான். நிறுவனத்திற்கும் மன்றத்திற்கும் அதிக வேறுபாடு இல்லை. நிறுவனம் குழுவைப் பெற்றுள்ளது. எடுத்துக்காட்டாக திருமண விருந்தை ஒரு நிறுவனமாகக் கருதக் கூடும். ஆனால்

எவ்வகையான விருந்தை அளிக்க வேண்டும் என்பது பழக்க வழக்கத்தைப் பொறுத்துள்ளது. அதேபோல் திருமணம் என்பது ஒரு நிறுவனம்; ஆனால், எவ்வகையான திருமணம் மேற் கொள்ளப்பட்டுள்ளது என்பது அவரவர்களின் இனம் பழக்க வழக்கங்கள் முதலியவற்றைச் சார்ந்துள்ளது. நிறுவனத்திற்கு பொதுமக்களின் ஆதரவு உண்டு. பழக்க வழக்கங்களுக்கு ஆதரவு கிடையாது. எனினும் பழக்க வழக்கங்கள்தான் மனிதனின் நிறுவனத்தை நீடிக்கச் செய்கின்றது. நிறுவனம் பொதுவான சமுதாய உறவைத் தான் வற்புறுத்துகிறது. பழக்க வழக்கங்கள் தனிப்பட்ட உறவை எடுத்துக் காட்டுகின்றன. நிறுவனம் தனி மனிதனுக்கப்பால் உள்ள கட்டுப்பாட்டுச் செய் முறையை எடுத்துக்காட்டுகின்றது. நிறுவனம் மனிதனின் கடந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம் இவற்றைக் குறிக்கின்றது. மேலும் மனிதனுடைய முன்னோர்கள், அவர்கள் சந்ததியினர், அவர்களது வழிபடு தெய்வங்கள் இவற்றின் தொடர்பையும் விளக்கிக் காட்டுகின்றது. ஆதலால் மனிதன் பழக்க வழக்கங்கள் மாறுவதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. நிறுவனங்கள் மாறினால் அது கவலைக்கிடமாகின்றது. எடுத்துக்காட்டாகச் சொத்து என்னும் நிறுவனம் திருமணம், சமயச் சார்பான நிறுவனம் இவை மாறத் தொடங்கினால் மனிதனுக்கு அச்சம் ஏற்படுகின்றது.

W.G. Sumner என்னும் அறிஞர் மக்கள் நெறி என்னும் நூலில் மக்களின் பழக்க வழக்கங்களை பற்றிக் கூறியுள்ளார். பழக்க வழக்கங்கள் மனிதனின் உள்ளார்ந்த எண்ணங்களைப் போல் வேலை செய்து மனிதனின் தேவைகளை பெறச் செய்கின்றன. மக்கள் நெறிச் சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட பழக்கங் களாகக் கருதப்படுகின்றன. மக்கள் நெறி, பரம்பரைப் பழக்கம், ஒழுங்குபட்ட நடத்தை மற்றும் பல ஆயிரக்கணக்கான மனிதனின் நடத்தைகளை எடுத்துக்காட்டியும் அவை தொன்றுதொட்டு வந்துள்ளதையும் கூறுகின்றது. எனினும் நாம் மனித வரலாற்றில் சமுதாயத்திற்குச் சமுதாயம் நாளுக்கு நாள் மாறுதல் ஏற்படுவதைக் காண்கின்றோம். எ-க கோவிலுக்குள் புகுமுன் காலணிகளை நீக்குவதும் மதச் சின்னங்களை அணிந்து செல்வதும் மக்கள் நெறியாகும். மக்கள் நெறிகள் மனிதனின் நடத்தைக்கு ஒரு குறிக்கோளையும் நிறைவையும் எடுத்துக்காட்டுகின்றன. அவை சமுதாயக் கட்டுப்பாட்டுச் சட்டமாகக் கருதப்படுகின்றது. மேலும் சமுதாயக் குழுவிற்கு ஒரு குறிக்கோளாகவும் குழுவின் எடுத்துக் காட்டாகவும் மக்களின் நல்வாழ்க்கைக்கு ஒரு அமைப்பாகவும் விளங்குகின்றது.

பொது வாழ்க்கைத் தத்துவத்திற்கும் (Folk ways) மக்கள் நெறிக்கும் வேறுபாடுகள் உள்ளன. மக்கள் நெறி வாழ்க்கையின் எண்ணங்களை எடுத்துக்காட்டுகின்றது. வாழ்க்கைத் தரத்தின் நன்மை தீமைகளைக் குறிப்பிடுகின்றது. எல்லா விதிகளும் ஒருங்கிணைந்து வாழ்க்கைத் தத்துவம் உண்டாக்கப்படுகின்றது. எடுத்துக்காட்டாக ஒரு வகையான உடை உடுத்துதல் மக்கள் நெறியாகவும்=உடை உடுத்துதல் என்பது வாழ்க்கைத் தத்துவமாகவும் புகுத்தப்படுகின்றது. வாழ்க்கைத் தத்துவம் ஒரு சமுதாயக் கட்டுப்பாடு. வாழ்க்கைத் தத்துவம் சமுதாயத்தின் நிலையான பழக்க வழக்கங்களை அறிந்தோ அறியாமலோ எடுத்துக்காட்டுகின்றது. மக்கள் நெறி வாழ்க்கைத் தத்துவம் இரண்டும் மனிதன் எவற்றைச் செய்யக்கூடும் கூடாது என்பதை எடுத்துக்காட்டுகின்றது. இவை இரண்டும் சேர்ந்து சமுதாயத்தை அமைத்தும் வேறுபடுத்தியும் மக்களின் நடத்தையை விதிக்குள்ளாக்குகின்றன. குழந்தைப் பருவம் முதல் முதுமைப் பருவம் வரை புகழ்தல், இகழ்தல், ஏற்றல், வில்க்கல் இவற்றைச் சமுதாயத்தின் மூலம் வெளிப்படுத்துகின்றது. மக்களின் நடத்தை அதன் பொருள் முதலியவற்றைச் சமூக இயல் வல்லுநர்கள்தான் புரிந்து கொள்ளக் கூடும்.

அடிப்படை வாழ்க்கைத் தத்துவங்களைப் புரிந்து கொள்ள பல சமுதாயங்களை ஒப்பிட்டுக் காணவேண்டும். எ-க ஆங்கிலேய சமுதாயத்தில் ஒருவன் தன் மேலதிகாரிக்குத் தன் பணிவைக் காட்டத் தலையிலுள்ள தொப்பியை எடுத்துவிட்டு வணங்குவான். நம் நாட்டிலோ காலணியை நீக்கிவிட்டு வணக்கம் செலுத்துதல் வழக்கம். மேலும், ஒரு சமுதாயத்தில் விதவை மணம் வழக்கமாக ஏற்றுக்கொள்ளப்பட்டு மற்றொரு சமுதாயத்தில் புறக்கணிக்கப்படுகிறது. இவற்றிலிருந்து சமுதாயத்திற்குச் சமுதாயம் வேறுபாடு உள்ளதென்பது தெளிவாகப் புலப்படுகின்றது. மக்களின் அடிப்படைத் தத்துவங்கள் மனிதக் குழுவின் அனுபவங்களையும் மறைந்துபோன அனுபவங்களையும் எடுத்துக்காட்டுகின்றன. தொன்றுதொட்டு வரும் நிலையான பழக்க வழக்கங்கள் ஆழ்ந்த ஆர்வத்தின் காரணமாக உருமாறி அச்சத்தினால் உருவாகி பழக்கத்தில் வராததைத் தவிர்த்து உருவாக்கப்படுகின்றது. வாழ்க்கைத் தத்துவங்கள் சமுதாயத்திற்கு ஒரு உறைவிடமாகும். எனினும், சில சமயங்களில் அவை மாறக்கூடும். அவை மாறுபட்டால் சமுதாயக் கிளர்ச்சி உண்டாகின்றது.

வாழ்க்கைத் தத்துவத்தின் அடிப்படைக் கொள்கைகள் கீழ் வருவன. 1. வாழ்க்கைத் தத்துவங்கள் மனிதனின் நடத்தையை

முடிவு செய்கின்றன. அத்தகைய நடத்தை சமுதாயத்திலுள்ள மற்ற உறுப்பினரையும் பாதிக்கின்றது. வாழ்க்கைத் தத்துவத்தின் அவசியம் தற்கால சமுதாயத்தின் சமுதாய விதிகளை புரிந்து கொண்டால் நன்கு விளங்கும். 2. வாழ்க்கைத் தத்துவம் ஒரு வகையில் தனிமனிதனின் எண்ணங்களையும் நோக்கங்களையும் எடுத்துக்காட்டுகின்றது. மற்றொரு வகையில் அவனுடைய கூட்டு வாழ்க்கையைப் புரிந்துகொள்ள உதவுகின்றது. பொதுவாக தனிப்பட்ட முறையிலும் மனிதன் கூடிவாழ்வதை விவரிக்கின்றது. 3. இறுதியாக மக்களின் ஒற்றுமையை நன்கு விளக்குகின்றது. எல்லா நாட்டிலும் எல்லாக் காலத்திலும் எல்லாப் பிரிவுகளிலும் எல்லாக் குழுக்களிலும் குடும்பம் முதல் நாடு உலகம் வரை — வாழ்க்கைத் தத்துவம் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது. இதற்குக் காரணம் குழுவின் ஒற்றுமையேயாம். வாழ்க்கைத் தத்துவங்கள் பெரும்பாலும் கிராம மக்களிடம் பெருவாரியாகக் காணப்படுகின்றது. மனித சமுதாயம் வளர வளர அவை தனிச் சிறப்புப்பெற்று சமுதாயத்தின் தனி விதி களாகவும் பழக்க வழக்கங்களாகவும் நாகரிகமாகவும் பண்பாட்டுக் குழுக்களாகவும் சட்டமாகவும் தோன்றுகின்றது. வாழ்க்கைத் தத்துவங்கள் நாளடைவில் வளைந்து கொடுக்கும் கட்டுப்பாடாக மாறி சமுதாய அனுபவங்கள் சுதந்திரமாகவும்(தன்னிச்சையாகவும்) முழுமையாகவும் வெளிப்படத் துணைபுரிகின்றன.

# 3. சமுதாயத்தின் பகுதிகள்
## (SOCIAL GROUPS)

### 1. தோழமைக் குழுமம் அல்லது சமூகம் (Community)

தோழமைக் குழுமம் என்பது பல மக்கள் ஒன்றுகூடி ஒன்று பட்ட எண்ணத்துடன் ஒரே இடத்தில் வாழ்வதாகும். கீழ்க் காணும் தன்மைகள் தோழமைக் குழுவிற்கு இன்றியமையாதவை. 1. தோழமைக் குழுவிற்கு அவர்கள் வாழும் இடம் இன்றியமை யாதது. 2. தோழமைக் குழுமம் மனித இனத்தில்தான் மேன்மை யடைந்துள்ளது. மனிதர்கள் இல்லையெனில் தோழமைக் கூட்டமும் இல்லை. 3. தோழமைக் குழுவில் உள்ள உறுப்பினர் கள் ஒரே மொழி, ஒரே விதமான பழக்கங்கள், போக்கு ஆகிய இவற்றை மேற்கொண்டுள்ளனர். தோழமை எண்ணங்கள் தோழமைக் கூட்டத்தில்தான் காணக்கூடும். 4. தோழமைக் குழுமம் பொது வாழ்க்கையை மேற்கொண்டு ஒரே நிலத்தில் வாழ்கின்றனர். 5. தோழமைக் குழுமம் சாதாரண குழுமத்தைப் போன்று நிலையற்றதல்ல. நிலையான வாழ்க்கையை நிலையான இடத்தில் மேற்கொள்ள முற்படுகின்றது. 6. தோழமைக் குழுமங்கள் தாமாகவே தோன்றி அவற்றில் தனி மனிதன் பிறந்து வளர்ந்து நன்மைகளைப் பெற்று வாழ்கின்றான். 7. ஒவ்வொரு குழுமமும் இடத்திற்கேற்ப பெயரைக் கொண்டு விளங்குகின்றது.

மக்கள் கூடி ஓர் இடத்தில் அவர்கள் ஆர்வம் வேலை இவை களுக்கு ஏற்ப வாழ்ந்து வருவதைத் தோழமைக் குழுமம் என்று ஆக்பேர்ன் (Ogburn) என்றும் அறிஞர் கூறியுள்ளார். தோழமைக் குழுமத்திற்கும் சமுதாயத்திற்கும் உள்ள வேறுபாடுகளை நாம் எடுத்துக்காட்டுவோம். 1. சமுதாயம் சமுதாயத்தில் உள்ள சிக்க லான உறவை எடுத்துக் காட்டுகின்றது. தோழமைக் குழுமம் பல மக்கள் சேர்ந்து வாழ்வதை எடுத்துக்காட்டுகின்றது. 2. சமுதாயம்

அருவமானது அல்லது புலனுகாதது. தோழமைக் குழுமம் பருப் பொருள் அல்லது புலனுவது 3. குறிப்பிட்ட நிலம் அல்லது இடம் சமுதாயத்திற்கு அவசியமானதல்ல. குறிப்பிட்ட நிலம் அல்லது இடம் தோழமைக் குழுமத்திற்கு மிகவும் அவசியம். 4. ஒரு சமுதாயத்தில் பல பொதுவுடைமைக் குழுமம் இருக்கக் கூடும். ஒரு தோழமைக் குழுமத்தில் ஒரு சமுதாயக் குழுவே இருக்கக்கூடும். 5. தோழமைக் குழுமத்தின் பொதுக் கருத்து சமுதாயத்திற்கு அவசியமாகாதது. தோழமைக் குழுமத்திற்கு பொதுக் கருத்து நீக்க முடியாத ஒரு தன்மையாகும். 6. சமுதாயத் தில் பலதரப்பட்ட பொது நோக்கங்களும் எண்ணங்களும் ஒன்று சேர்க்கப்படுகின்றன. தோழமைக் குழுமத்தில் பொது எண்ணங் கள் போதிய அளவிற்கு ஒன்று சேர்க்கப்படுவதில்லை. 7. சமுதா யத்திற்குப் பொதுக் கருத்துக்களும் எண்ணங்களும் தேவை யற்றவை. தோழமைக் குழுமத்திற்கு எண்ணங்களும் நோக்கங் களும் உடன்பட்டிருக்கவேண்டும். பொதுவாகக் கூறினுல் தோழமைக் குழுமம் என்பது சமுதாயம் முழுமை பெற்று ஓரிடத்தில் நிலையாக இருப்பதைக் குறிக்கின்றது. அயலவராகக் கொண்டது தான் (Neighbourhood) தோழமைக் குழுமத்தில் ஒரு சிறிய பகுதி.

அருகிடம் (Neighbourhood) குடும்பத்திற்கு அடுத்ததாகச் சமுதாயத்தில் இடம் பெற்றுள்ளது. அருகிடம் தோழமைக் குழுமத்தின் ஒரு பகுதியாகும். இவ்வாறு தோழமைக் குழுமத்தில் பல பகுதிகள் உள்ளன. அருகிடம் மனிதனின் கூட்டுச் செயல்களைப் பற்பல வகைகளில் ஊக்குவிக்கின்றது. அருகிடம் ஒரு கிராமம் அல்லது நகரம் இவற்றைப்போலன்று. ஒரு கிராமத்தில் அருகிடம் மக்களின் மிக நெருக்கமான உறவை எடுத்துக்காட்டு கின்றது. அஃதாவது அங்குள்ளவர்களின் நன்மை தீமை இவை கள் ஒரு குடும்பத்திலுள்ளவர்கள் எவ்வண்ணம் பாதிக்கப் படுகின்ருர்களோ அதேபோல் பாதிக்கப்படுகின்ருர்கள். இதற்கு மாருக அருகிடம் என்பது நகரங்களில் அவ்வளவு முக்கியத்துவம் பெறவில்லை. சான்ருக, கல்கத்தா, பம்பாய், சென்னை போன்ற பெரு நகரங்களில் அண்மையில் உள்ளவர்கள் ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்ளாமல் இருக்கக்கூடும். இதற்குக் காரணம் மக்கள் போக்குவரத்து போன்ற வசதிகளைப் பெற்றுள்ளதால் ஒருவர் மற்றவரைச் சந்திக்கவோ தெரிந்து கொள்ளவோ அவசியம் இல்லாமல் போகின்றது. இதற்கு மாருகத் தோழமைக் குழுமம் மக்களை ஒன்றுகூட்டி அவர்தம் சமுதாய உறவு, ஒற்றுமை இவற்றை எடுத்துக் காட்டுகின்றது. இவ்வகையில் தோழமைக் குழுமம் பரந்த நோக்கம், தன்மை முதலியவற்றை மேற்கொண்டு மக்கள் தொடர்பைப் பரவச் செய்து விரிந்து செயல்படுகின்றது.

அருகிடம் இதற்கு மாருகக் குறுகிய நோக்கங்களைப் பெற்று தோழமைக் குழுமத்தின் ஒரு சிறிய பாகமாக விளங்குகின்றது.

கீழ்க்காணும் அட்டவணை அருகிடத்திற்கும் தோழமைக் குழுமத்திற்கும் உள்ள வேறுபாடுகளை எடுத்துக் காட்டுகின்றது.

| தோழமைக் குழுமம் | அருகிடம் |
|---|---|
| 1. தோழமைக் குழுமம் பரவலானது. | 1. அருகிடம் வரையறைக் குட்பட்டது. |
| 2. இக் குழுமம் அருகிடத்திலுள்ள பலரைத் தெரிந்துகொள்ளப் பயன்படுகின்றது. | 2. அருகிடம் ஒரு சிலரைத்தான் தெரிந்துகொள்ளப் பயன்படுகின்றது. |
| 3. இது சமுதாயத்தில் ஒரு பகுதி. | 3. அருகிடம் பொது வழிபாட்டுக் குழுமத்தின் ஒரு பகுதியாகும். |
| 4. தோழமைக் குழுமத்தின் நோக்கம் இங்கு முக்கியத்துவம் பெற்றுள்ளது. | 4. இங்கு அருகிடத்தின் நோக்கமே முக்கியத்துவம் பெற்றுள்ளது. |
| 5. பொது வாழ்க்கை, இருப்பிடம், பொது நோக்கம் முதலியவையே தோழமைக் குழுமத்திற்கு அவசியம். | 5. ஒரே இடத்தில் வாழ்வதுதான் அருகிடத்தின் தன்மையாகும். |
| 6. தோழமைக் குழுமத்தின் குறிக்கோள் உறுதியானது. | 6. அருகிடத்தின் குறிக்கோள் உறுதியற்றது. |
| 7. தோழமைக் குழுமம் விதிகளுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்டது. | 7. அருகிடம் விதிகளுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்படாதது. |

தோழமைக் குழுமம் பல மனிதர்களை ஒன்றுகூட்டி பொது வாழ்க்கையின் தன்மையை எடுத்துக்காட்டுகின்றது. இது "யாதும் ஊரே; யாவருங் கேளிர்" என்ற புறநானூற்றுக் கொள்கையைச் சார்ந்துள்ளது. பொது வழிபாட்டுத் தன்மைகள் பொது வாழ்க்கை நடத்துவோரிடம் மிகுதியாகக் காணப்படும். எவ்வாறெனில் அவர்தம் மொழி, பழக்க வழக்கங்கள், முன்னேற்றம், முடிவு இவை ஒரே தன்மை வாய்ந்தவை. இக் குழுமத்தில் வாழும் மக்கள் அதற்கப்பாலோ வெளியிலோ வாழ முடியாது. ஒரு கிராமத்தில் உள்ள மக்கள் அவரவர் தகுதிக்கேற்ப பணிசெய்து முன்னேற்ற மடைகின்றனர். கிராமத்தில் நிகழும் எல்லா நிகழ்ச்

களிலும் பங்கேற்பர். சான்ருக, ஒரு குடும்பத்தில் ஏற்படும் பிறப்பு, இறப்பு மற்ற விழாக்களிலும் பங்கு கொள்வர். இவ்வண்ணம் கிராம மக்கள் இன்ப துன்பங்களை ஏற்றும், பகிர்ந்தும் ஒத்துழைத்து வாழ்வர். தோழமைக் குழுமத்தின் நோக்கம் தனி மனிதனின் தனிப்பட்ட நோக்கத்தை அழுத்தி விடுகின்றது.

பொதுவாக தோழமைக் குழுமம் கீழ்க்காணும் கருத்துக்களை வெளிப்படுத்துகின்றது. 1. நாம் எல்லோரும் ஒன்று. இக்கருத்து தோழமைக் குழுமத்திற்கு மிகவும் அவசியம். மேலும், எல்லா உறுப்பினர்களும் இக் கருத்தை மேற்கொண்டு இன்ப துன்பங் களைப் பங்கேற்கச் செய்கின்றது. இத்தகைய எண்ணத்தை மேற் கொள்ளக் காரணம் இக் குழுவிலுள்ள எல்லா மக்களுக்கும் ஒரே விதமான எண்ணமும் நோக்கமும் இருந்து ஒரே இடத்தில் வாழ் வதேயாகும். 2. தோழமைக் குழுமத்தில் தனி மனிதனின் கடமை பங்கு (Role) மிகவும் அவசியம். இக் கருத்தை மேற்கொண்டு ஒவ்வொரு தனி மனிதனும் தன் பங்கை ஏற்றுச் செயல்படுகின்ருன். 3. ஒவ்வொரு தனி மனிதனும் தன்னுடைய வாழ்க்கைக்கே பொதுக் கட்டுப்பாட்டுக் குழுமம் அவசியம் என்பதை முழு நோக்கத்துடன் ஏற்றுக்கொள்ளுகின்ருன். இத்தகைய நோக்கமானது குழுமம் இட்ட கடமையைத் தவருது செய்ய வழிகாட்டுகின்றது. இத்தகைய நோக்கம் மக்கள்தம் பல சிக்கல்களைத் தீர்த்து வைக்கத் துணை புரிகின்றது.

பண்டைக்காலத் தோழமைக் குழுமம் மிகச் சிறியதாக இருந்தது. மக்கள் அவரவர் குழுமத்தில் செயலாற்றினர். அறிவியலின் பயனுகப் போக்குவரத்துச் சாதனங்கள் முன்னேற்ற மடைந்து மனிதன் மற்ற நாடுகளுடன் வாணிகம் செய்தும் அந் நாடுகளில் குடியேற்றம் செய்தும் மேன்மை யடைந்துள்ளான். இதன் பயனுகத் தோழமைக் குழுமத்தின் நோக்கங்கள் விரிவடைந் துள்ளன. தற்காலத்தில் எல்லாக் குழுமங்களும் ஒன்றை ஒன்று பாதிக்கின்றன. இதற்குச் சான்ருக ஐக்கிய நாட்டுச் சபை தோன்றியதன் மூலம் உலகத் தோழமை அல்லது சகோதரத்துவம் பரவி வருவதைக் காண்கின்ருேம். பல அறிஞர்கள் இதனை ஏற்றுக் கொண்டுள்ளனர்.

## 2. மன்றம்
## (Association)

பொதுவாக மன்றங்கள் ஒரு கருத்து அல்லது குறிக்கோளுடன் சில விதிகளைக் கொண்டு தாமாகவே தொடங்கப்பட்ட குழுக்

களாகக் கருதப்படுகின்றன. சான்று : பொருளாதார மன்றம், தொழில் மன்றம், விளையாட்டு மன்றம் என்பன. ஒரு மன்றம் தொடங்குவதற்கு முன்னர் அம்மன்றத்தின் மக்கள் தாமாகவே ஒத்துழைத்து மன்றத்தை உருவாக்க வேண்டும். சான்ருக பொதுப்பணி மன்றங்கள் பல நகரங்களில் தோன்றியுள்ளன. மன்றத்தின் உறுப்பினர்கள் சில விதிகளுக்குக் கட்டுப்பட வேண்டும். எவனொருவன் அவ்விதிகளை மறுக்கின்ருனே அவன் அச்சங்கத்தை விட்டு நீக்கப்படுவான். ஒரு நகரிலுள்ள எல்லா மக்களும் மன்ற உறுப்பினராக இருக்க வேண்டுமென்ற அவசியம் இல்லை. மன்றத்தின் விதிகள் அதன் நோக்கம் அது செயல்படும் முறை முதலியவற்றை ஏற்றுக் கொள்பவர்களே மன்றத்தின் உறுப்பினர்களாக இருக்க இயலும். மன்றத்தின் எல்லா உறுப்பினர்களும் ஒரே நோக்கத்தை மேற்கொள்வர். மன்றத்தைச் செயல்படுத்துவதற்கு மன்றச் செயற் குழுவினர் மிக இன்றியமையாதவர் ஆவர். அவரின்றி மன்றம் செயல்பட முடியாது. மன்ற உறுப்பினர்களும் மன்றச் செயற் குழுவினரும் ஒத்துழைத்து எல்லா நிகழ்ச்சிகளிலும் பங்கேற்க வேண்டும்.

இன்று இந்தியாவிலுள்ள எல்லா பெரு நகரங்களிலும் நகர சபைகள் உள்ளன. இதன் உறுப்பினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நகர சபைத் தலைவர் போன்ருேர் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நகர சபையின் முக்கிய நோக்கங்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாகக் கல்வி, சுகாதாரம், சாலையமைப்பு, குடிநீர் வசதி, சட்டம் ஒழுங்கு, அங்காடிகள் முதலியவற்றை ஒழுங்கு செய்தல் ஆகும். நகர சபையின் நிதி (வருவாய்) வரியின் மூலம் பெறப்படுகின்றது. கல்வி வசதிக்காக நகர சபை தொடக்கப் பள்ளிகள், உயர்நிலைப் பள்ளிகள் முதலியவற்றைத் தொடங்கி இலவச-கட்டாயக் கல்வியை நல்குகின்றது. சுகாதார அலுவலர் மக்களுக்குச் சுகாதார வசதியை ஏற்படுத்திக் கண்காணிப்பார். சாலை, பொது இடங்கள் இவற்றைப் பயன்படுத்த சட்ட திட்டங்கள் வகுத்துள்ளனர். நகர சபையின் செயல் சூழ்நிலைச் சிக்கலுக்கேற்ப மக்கள் தொகையை ஒட்டியும் மாறுதலடைகின்றது.

கழக மனை (club) திருமணம் என்னும் நிறுவனத்தை வேறுபடுத்திக் காட்டுகின்றது. கழக மனை உறுதி வாய்ந்தது. அமைப்புடையது. அதற்குரிய தனிப்பட்ட இடத்தில் உறுப்பினர்கள் கூடுவர். கழக மனையின் முக்கிய நோக்கம் உறுப்பினர்களின் மற்ற தேவைகளை ஓரளவிற்கு நிறைவு செய்வதாகும். கழகமனை நிலையற்றது. உறுப்பினர்கள் அதை விட்டு விலகக் கூடும்.

பொதுவாகக் கழக மனை உறுப்பினர்களின் ஒத்துழைப்பால்தான் செயலாக்கம் பெறுகின்றது. கழக மனைக்கு ஒரு நிலையான அமைப்பு இல்லை. உறுப்பினர்கள் கழக மனையின் விதிகளை உறுப்பினர்களாக இருக்கும் வரைதான் ஏற்றுக் கொள்கின்றார்கள். எனினும் ஒவ்வொரு கழக மனையும் ஒரு தனிப்பட்ட பெயரைக் கொண்டுள்ளது. எடுத்துக் காட்டாக விளையாட்டுக் கழக மனை, இலக்கிய மன்றம் என்பன.

மன்றம் (Association) கீழ்க்காணும் இயல்புகளைக் கொண்டுள்ளது. 1. மனிதக் குழு (Human Group) என்பது மக்களால் மக்களின் நன்மைக்காக தோற்றுவிக்கப்படுகின்றது. 2. சங்கம் பொது நோக்கங்களை (Common Interest) மேற்கொண்டு ஒரு தரப்பட்ட அறிவுள்ள மக்களைக் கொண்டு செயலாற்றப்படுகின்றது. 3. கூட்டுறவு மனப்பான்மை (Co-operative spirit) உள்ள உறுப்பினர்கள் பொது நோக்கத்தைக் கொண்டு செயல்படுகின்றனர். 4. அமைப்பு (Organisation) சங்கங்கள் மக்களால் ஒரு குறிப்பிட்ட செயலுக்காக உருவாக்கப்பட்டு அச் செயலை முற்றுப் பெறச் செய்கின்றது. சான்றாக தொழிற் சங்கங்கள் அரசியல் கழகங்கள் (கட்சிகள்) அறிவாளிகள் சங்கம் முதலியன. 5. சட்டம் (Laws) மன்றங்களின் அமைப்பு குறிப்பிட்ட விதிகளைச் சார்ந்துள்ளது.

சமுதாயத்திற்கும் மன்றத்திற்கும் உள்ள வேறுபாடுகள்.

| சமுதாயம் (Society) | மன்றம் (Association) |
|---|---|
| 1. சமுதாயம் சமுதாய உறவை மேற்கொண்டு அமைந்துள்ளது. | 1. மன்றம் ஒரு சில உறுப்பினர்களைக் கொண்டு அமைந்த ஒரு குழு. |
| 2. சமுதாயம் உருவமற்றது. | 2. மன்றம் உருவமானது. |
| 3. சமுதாயம் பெரும்பாலும் நிலையானது. | 3. மன்றம் நிலையற்றது. |
| 4. சமுதாயம் இயல்பாகத் தோன்றியது. | 4. மன்றம் மக்களால் தோற்றுவிக்கப்பட்டது. |
| 5. சமுதாயத்தில் ஒற்றுமை வேற்றுமை உடையது. | 5. மன்றம் ஒற்றுமையாலேயே உருவாக்கப்படுகிறது. |
| 6. சமுதாயத்திற்கு அமைப்பு அவசியமில்லை. | 6. மன்றத்திற்கு அமைப்பு அவசியம். |

| சமுதாயம் (Society) | மன்றம் (Association) |
| --- | --- |
| 7. சமுதாயம் பலதரப்பட்ட உறவை மேற்கொண்டுள்ளது. | 7. மன்றம் ஒருசில எண்ணங்களையும் உணர்வுகளையும் மேற்கொண்டுள்ளது. |
| 8. சமுதாயத்தின் நோக்கங்களும் கொள்கைகளும் முடிவு பெருதவை. | 8. மன்றத்தின் கொள்கைகள் முன்னமே முடிவு செய்யப்பட்டவை. |
| 9. சமுதாயம் மக்களால் தவிர்க்க முடியாதது. | 9. மன்றம் மக்களால் தவிர்க்கக்கூடியது. |
| 10. சமுதாயம் ஒரு முடிவைக் கொண்டுள்ள நிறுவனம். | 10. மன்றம் முடிவை அடையச் செயல்படும் சங்கம். |

மன்றம் மக்களின் அறிவுத் திறத்தைக் கொண்டு மக்களின் நோக்கங்களை நிறைவு செய்யத் தன் விதிகளை அமைத்துக்கொண்டு செயலாற்றுகின்றது. இதற்கு மாறுபட்டது பொது வழிபாட்டுக் குழுமம் (Community) பொது வழிபாட்டுக் குழுமத்தின் நோக்கங்களிலிருந்து சிலவற்றைத் தேர்ந்தெடுத்து மன்றத்தின் முக்கிய குறிக்கோளாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. மனிதன் ஒரு பொது வழிபாட்டுக் குழுமத்தில் பிறந்து பலதரப்பட்ட மன்றங்களில் உறுப்பினராகித் தன் தேவைகளை நிறைவு செய்து கொள்ளுகின்ருன். மன்றம் ஒரு பொது வழிபாட்டுக் குழுமம் ஆகாது. மன்றம், பொது வழிபாட்டுக் குழுமம் இவற்றின் வேற்றுமைகள் கீழ்க் காண்பனவாகும்.

| மன்றம் (Association) | பொதுவழிபாட்டுக குழுமம் (Community) |
| --- | --- |
| 1. மன்றம் ஒரு சிலரால் தோற்றுவிக்கப்படுவது. | 1. பொது வழிபாட்டுக் குழுமம் தானே தோன்றுவது. |
| 2. மன்றத்தில் ஈடுபாடுடையவர்களே உறுப்பினராவர். | 2. உறுப்பினர்கள் இன்றியமையாதவர்கள். |
| 3. மன்றம் ஒரு சில முக்கிய நோக்கங்களைக் கொண்டுள்ளது. | 3. மக்களின் பலதரப்பட்ட நோக்கங்களையும் நிறைவு செய்கிறது. |

| மன்றம் (Association) | பொதுவழிபாட்டுக் குழுமம் (Community) |
|---|---|
| 4. மன்றம் பொதுவாக நிலையற்றது. | 4. பொதுவழிபாட்டுக் குழுமம் நிலையானது. |
| 5. உறுப்பினர்களுக்குப் பொதுவான எண்ணங்கள் அவசியமாகா. | 5. பொது எண்ணங்களைக் கொண்டே நிறைவு பெறுகிறது. |
| 6. தனிச் சொத்து உடையது. | 6. தனிச் சொத்துக் கிடையாது. |
| 7. சட்டத் தொகுதி உண்டு. | 7. சட்டத்தொகுதி கிடையாது. |
| 8. தனிப்பட்ட விதிகளைக் கொண்டு இசைவு பெறுகிறது. | 8. பழக்க வழக்கங்களைக் கொண்டு செயல்படுகிறது. |
| 9. ஒரு சில முக்கிய நோக்கங்களைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது. | 9. பொது எண்ணங்களைக் கொண்டு உருவாக்கப் பட்டுள்ளது. |
| 10. பொதுவழிபாட்டுக் குழுமத்தில் ஒரு பகுதி. பல மன்றங்கள் ஒரு பொது வழிபாட்டுக் குழுமத்தில் காணப்படும். | 10. மன்றத்தை ஒரு கருவியாகக் கொண்டு அதன் முக்கியச் சேவைகளை முடிவு பெறச் செய்கின்றது. |
| 11. ஒரு தனி மனிதன் மன்றத்தில் விருப்பமுடன் கலந்து கொள்ளுகின்றான். | 11. தனி மனிதன் ஒரு பொது வழிபாட்டுக் குழுமத்தில் பிறந்து அதில் செயலாற்றி மறைகின்றான். |
| 12. மன்றத்தின் செயல்களை ஆற்ற உறுப்பினர்கள் உள்ளனர். | 12. செயலாற்றும் உறுப்பினர்கள் அவசியமல்ல. |

## 3. நிறுவனம்
## (Institution)

நிறுவனம் சமுதாயத்திற்கு பல துறைகளில் துணை நிற்கின்றது. அதன் அமைப்பு, பழக்க வழக்கங்கள் கொள்கை, சடங்குகள் முதலியவற்றை மேற்கொண்டு செயலாற்றுகின்றது. ஒவ்வொரு நிறுவனத்தின் சின்னம் உருவமாகவோ அருவமாகவோ

இருக்கலாம். நிறுவனத்தின் விதிமுறைகளுக்கு அந்நிறுவனத்தைச் சார்ந்த ஒவ்வொரு தனிமனிதனும் கட்டுப் பட வேண்டும். நிறுவனத்தின் செயல்முறைகள் அதன் பாரம்பரியத்தைக் கொண்டு உருவாகியுள்ளது. பொதுவாக நிறுவனம் மக்களின் கூட்டுச் செயல்முறைகளைச் சார்ந்துள்ளது. பலவித சமூகக் கட்டுப்பாடுகளில் தனிமனிதனைக் கட்டுப்படுத்த நிறுவனம் ஒன்றுதான் பெருமளவிற்கு நிலையானது. நிறுவனம் மனிதனுடைய இன்றியமையாத் தேவைகளை நிறைவு செய்வதற்காகத் தோற்றுவிக்கப்பட்டது எனலாம்.

சமுதாய நிறுவனம்மக்களின் பண்பாடு, நடத்தை, கட்டுப்பாடு, அறிவு, ஒழுக்கம் முதலியவற்றை ஓரளவிற்கு தலைமுறை தலைமுறையாக நிலைநாட்டியுள்ளது. குறிப்பாக இளைஞர் சமுதாயத்திலுள்ள பல சிக்கல்களைத் தீர்க்க முற்படுகின்றது. நிறுவனம் சமுதாய அமைப்பிற்கும் பண்பாட்டிற்கும் மிக இன்றியமையாதது.

நிறுவனத்திற்கும் மன்றத்திற்கும் உள்ள வேறுபாடுகளைச் சிறிதளவு ஆராய்ந்து பார்ப்போம்.

நிறுவனத்திற்கும் மன்றத்திற்கும் உள்ள வேறுபாடுகளைத் திருமணம் என்னும் நிறுவனத்தின் மூலம் விளக்கலாம். எல்லாச் சமுதாயத்திலும் சிற்சில பழக்க வழக்கங்கள் சடங்குகள் மணமுறைகள் முதலியவை வேரூன்றி உள்ளன. இவை சமுதாயத்தின் ஒப்புதலைப் பெற்று ஒவ்வொரு உறுப்பினரையும் இயங்கச் செய்கின்றன. மணம் என்னும் நிறுவனம் பண்டைக் காலத்தில் முதன் முதலாகத் தோன்றிப் பல தரப்பட்ட சடங்குகளை மேற்கொண்டு முன்னேற்ற மடைந்துள்ளது. மணம் கட்டுப் படுத்தப்பட்ட ஒரு வழி முறையை மேற்கொண்டு பல விதிகளை மக்களுக்கு நல்கியுள்ளது. திருமணத்திற்குப் பல சின்னங்கள் உள்ளன. சான்றாக மங்களநாண் அணிதல், மாலைமாற்றுதல், தீவலம் முதலியன.

நிறுவனம், விதிகள், சட்டதிட்ட அமைப்பு முதலியவற்றைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது. மன்றம் மக்களைக் கொண்டுள்ள ஒரு குழு. நிறுவனத்திற்கு வடிவம் இல்லை. புலனியல்களால் பார்க்க முடியாது. இதற்கு மாறாக மன்றத்திற்கு உறுதியான அமைப்பு உண்டு. நிறுவனம் தாமாக உண்டாவது. மன்றம் உண்டாக்கப்படுவது. மன்றம் நிறுவனத்தைப் போல் நெடுங்காலம் நிலைப்பதில்லை. நிறுவனம் பெரும்பாலும் செயல் முறையை விளக்குகின்றது. மன்றம் உறுப்பினர்களைக் கணக்கிடுகின்றது. என்றாலும் மனிதன் முதலில் மன்றத்தின் உறுப்பினராக இருந்துதான் நிறுவனத்தின் விதிகளை ஏற்றுக் கொள்ளுகின்றான்.

நிறுவனத்தின் வேறுபாடுகளைப் பொது வழிபாட்டுக் குழுமத்துடன் ஒப்பிட்டு நன்கு தெரிந்து கொள்ளலாம். நிறுவனத்தின் குறிக்கோள் மனிதனின் சட்ட திட்டங்களை அப்படியே ஏற்றுக் கொள்வதாகும். பொது வழிபாட்டுக் குழுமம் பல மக்கள் கூடி ஒரே இடத்தில் பொது வாழ்க்கை நடத்துவ தாகும். மக்கள் பொது வழிபாட்டுக் குழுமத்தில் உறுப்பினராக இருப்பதால் அது ஓரளவிற்கு முக்கியத்துவம் பெற்றுள்ளது. நிறுவனம் வாழ்க்கையின் முக்கிய கட்டங்களை எடுத்துக் காட்டியும் பயனடையவும் செய்துள்ளது. நிறுவனம் மனிதனின் முக்கியத் தேவைகளைப் பெறச் செய்கின்றது. அவன் நடத்தையை ஒழுங்கு படுத்துகின்றது. அதன் அமைப்பு மக்களின் தேவைக் கேற்ப அமைந்துள்ளது. அவற்றின் அமைப்பு, செயல்முறை இவைகட்கு ஊக்கமளிப்பது மன்றங்களும் பொது வழிபாட்டுக் குழுமமும் ஆகும். ஒரு நிறுவனம் மனித வாழ்க்கையின் ஒரு பகுதியைத் தான் அலசி ஆராய்கின்றது.

# 4. சமூக அமைப்பு

## (SOCIAL STRUCTURE)

### 1. குடும்பம்

குடும்பம் என்பது ஒரு மிகச் சிறிய குழு. அது ஆண் பெண் சேர்க்கை உறவைக் கொண்டுள்ளது. மனிதனிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை பிரித்துக் காட்டுகின்றது. ஒற்றுமையில்லையேல் சேர்ந்து வாழும் மனப்பான்மை இருக்காது. உடல், உள்ளம், மனப்பான்மை இவைகளில் ஒற்றுமை இருக்கவேண்டும். பண்டைக் கால மக்கள் ஒற்றுமை என்பதை உறவால் எடுத்துக் காட்டினார்கள். இன்றைய நாகரிக உலகில் மனிதன் நாட்டுப்பற்று என்ற சொல்லால் வெளிப்படுத்துகின்றான். சமுதாயத்திற்கு ஒற்றுமையே யன்றி வேற்றுமையும் அவசியம். வேற்றுமை இன்றி மனிதனுடைய பல எண்ணங்களையும் குணங்களையும் அறிய இயலாது; மனித குலம் உயர்வடையாது. எனவே, சமுதாயத்தில் மனிதன் தன் எண்ணங்களைப் பங்கீடு செய்வதோடு மற்றவர் தம் எண்ணங்களையும் ஏற்றுக் கொள்கிறான். எடுத்துக்காட்டாக, குடும்பம் என்னும் குழு ஆண் பெண் வேறுபாடு, அவர்களுடைய மனப்பான்மை, கொள்கை, நுண்ணறிவு, விருப்பம் ஆகியவற்றை மேற்கொண்டுள்ளது. இவ்வேற்றுமைகள் சமுதாயத்தில் ஒத்துழைப்பதற்கும் அவரவர் தத்தம் தொழிலைச் செய்வதற்கும் துணைநிற்கின்றன. குடும்பத்தில் காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளை அடிப்படையாகக் கொண்டே சமுதாய வளர்ச்சி முன்னேற்ற மடைந்துள்ளது என்பதை நாம் காண்கின்றோம்.

**உறவு முறைச் சுற்றம்** (Kinship Groups)

குடும்பத்தைப் பல பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1. பிறந்த குடும்பம் (Consanguine Kin), 2. புகுந்த குடும்பம் (Family of Procreation), 3. சுருங்கிய குடும்பம் (Nuclear Family), 4.

கூட்டுக் குடும்பம் (Joint Family). 5. விரிந்து பெருகும் குடும்பம் (Extended Joint Family) என.

பிறந்த குடும்பம் ஒரு மனிதனுடைய உற்றார் உறவினர், பெற்றோர், உடன் பிறந்தோர் இவர்களுள் இரத்தக் கலப்பு இனத் தொகுதியில் உள்ளவர்கள் என்று கூறப்படுகின்றது.

புகுந்த குடும்பம் ஒருவன் அல்லது ஒருத்தி தங்கள் காம இச்சைகளை அனுபவித்தும் ஒருவருக்கு ஒருவர் துணையாகப் பெறும் குழந்தைகளை வளர்த்தும் செயல்படுகின்றார்கள்.

சுருங்கிய குடும்பம் இன்றைய கணவனும் மனைவியும் அவர் தம் குழந்தைகளும் அடங்கியதாகும்.

பெரிய குடும்பம் அல்லது ஒருங்கிணைந்த குடும்பம் நம் நாட்டில் உள்ள பல தரப்பட்ட குடும்பங்களில் முக்கியத்துவம் பெற்று விளங்கியவை யாகும். ஒருங்கிணைந்த குடும்பம் தாய், தந்தை, அவர்தம் பெற்றோர்கள், பிள்ளைகள் அவர்தம் கணவன் மனைவியர் ஆகியோர் ஒன்றுசேர்ந்து தந்தையின் பொறுப்பில் இயங்கு வதாகும்.

விரிந்து பெருகும் குடும்பம் தாய் தந்தை வழியில் வரும் எல்லா உறவினர்களையும் அடக்கி விளங்குவதாகும்.

மேற்கூறிய குடும்பங்களில் சிலவற்றை விரிவாகக் காண்போம்.

கூட்டுக் குடும்பம் அல்லது ஒருங்கிணைந்த குடும்பம் (Joint Family) :

சமுதாயம் முற்றிலும் வளர்ச்சியடையக் குடும்பம் ஒரு அடிப் படையாக உள்ளது. குடும்பம் சமுதாயத்தின் அடித்தளமாகக் கருதப்படுகின்றது. அது தன் செயல்களை மற்ற நிறுவனங்களுடன் ஒத்துழைத்து நிறைவேற்றுகின்றது. மனிதனின் பொது நல வாழ்க்கையைப் புரிந்து கொள்ளக் குடும்பம், சமுதாயம், பொருளாதாரம், நீதி, பண்பாடு, ஒழுக்கம், சமயம், கல்வி முதலிய நிறுவனங்களை ஆய்ந்து அறிய வேண்டும். இந் நிறுவனங்களின் அடிப்படைத் தத்துவங்களைக் கொண்டுதான் சமூக வாழ்க்கை ஓரளவிற்கு முழுமை பெறுகின்றது. இந் நிறுவனங்கள் ஒருங்கே சமூக அமைப்பு நிறுவனங்கள் (Social Struct ure) என்று கூறப்படுகின்றன.

குடும்பம் ஒரு சங்கம் மட்டுமல்ல ; ஒருங்கிணைந்த விதிகளைக் கொண்ட நிறுவனம். தொடக்கக் குடும்பம் என்பது இன்றியமையாத

சமூகக் குழு. இக்குழு சாதாரணமாக ஒரு மனிதன் அவன் மனைவி அவர்தம் மக்கட் செல்வங்களைக் கொண்டுள்ளது. சிற்சில சமயங்களில் பெற்றோர்களின் உறவினர்களும் குடும்பத்தில் சேர்க்கப்படுகின்றனர். குடும்பம் என்பது (Famulus Servant) என்னும் சொல்லிலிருந்து பழக்கத்திற்கு வந்துள்ளது. ஒருங்கிணைந்த குடும்பம் ஒருவன் அல்லது ஒருத்தி பல பெண்களையோ ஆண்களையோ மணந்து வாழ்க்கை நடத்துவதாகும். இப்படிப்பட்ட குடும்பம் இந்தியாவில் பொதுவாக இருந்து வந்தது. ஒருவன் பிறந்த குடும்பத்தைத் தொடக்கக் குடும்பம் என்றும் அவன் மணம் செய்துகொள்ளும் குடும்பத்தை உற்பத்திக் குடும்பம் என்றும் வேறுபடுத்தியுள்ளான். ஒரு ஆண் - பெண் சேர்க்கையாவது ஒரு ஆண் ஒரு பெண்ணைத் தான் மணக்க வேண்டும் (Monogamy) என்னும் பழக்கம் கையாளப்படுகின்றது. மேலும், ஒரு ஆண் பல பெண்களை மணந்து வாழ்க்கை நடத்துவதும் (Polygamy) ஒரு பெண் பல ஆண்களை மணந்து வாழ்க்கை நடத்தலாம் (Polyandry) என்னும் கொள்கைகளும் நம் நாட்டில் பண்டைக் காலத்தில் இருந்து வந்தது.

குடும்பத்தின் தலைவன் தந்தையாயிருந்தால் அக் குடும்பம் தந்தை வழிக் குடும்பம் (Patriarchal) என்று கூறப்படுகின்றது. இத்தகைய குடும்பம் நம் நாட்டில் பொதுவாகக் காணப்படுகின்றது. உரிமை தாய்க்குக் கொடுக்கப்பட்டால் அது தாய் வழிக் குடும்பம் (Matriarchal) என்று கருதப்படுகின்றது.

தந்தைவழிக் குடும்பம் (Patriarchal) ஒருங்கிணைந்த குடும்பத்தின் நீக்க முடியாத விதிகளைக் கொண்டு மணம் புரிந்த ஒரு ஆண் குடும்பப் பொறுப்பை ஏற்பதாகும். அவர் குடும்பச் சுமையை ஏற்றும் சொத்துரிமையைப் பொறுப்பேற்றும் அக் குடும்பத்தில் வாழும் மணமாகாத தமக்கை தங்கையரைப் பாதுகாப்பது மாகும். உரிமை பெற்ற தலைவன் இறக்க நேரிடுமாயின் அவனுடைய முதல் புதல்வன் அப்பொறுப்புகளை ஏற்றுக் கொள்ளத் தகுதி உடையவனாகின்றான்.

தந்தை வழிக் குடும்பத்தின் முக்கியம், குடும்பம் ஒருங்கிணைந்து செயல்படுகின்றது. இத்தகைய குடும்பமே நாகரிகத்தை மேன் மேலும் ஓங்கச் செய்கின்றது. உரோமாபுரியில் தந்தை வழிக் குடும்பம் மிக உயர்ந்த நிலையில் இருந்து வந்தது. தந்தை என்பவர் குடும்பத் தலைவராய் மட்டுமில்லாமல் குருவாகவும் ஆளுநராகவும் மேன்மைப்பட்ட அதிகாரியாகவும் இருந்துள்ளார். தந்தையே வழிபடும் கடவுளுக்குச் சமயச் சடங்குகளை செய்து குடும்பத்தை முன்னேற்றமடையச் செய்தார். அவரே குடும்பத்தின்

சட்ட நிர்வாகியாக இருந்து வந்தார். அவர் ஆதிக்கம் குடும்பத்தில் முழுமை பெற்றிருந்தது. எடுத்துக்காட்டாகப் பிள்ளைகளைக் கட்டுப் படுத்தவும் பழக்கவும் அவர்களைத் தண்டிக்கவும் மேலும் அடிமை களாக விற்கவும் அவருக்கு உரிமை இருந்தது. அவர்தம் உறவினர்களின் தீர்மானத்தை ஏற்றுக்கொண்டும் மறுத்தும் முடிவுக்கு வரக்கூடும். இவை ஒருபுறமிருக்க, தந்தை வழிக் குடும்பத்தில் கணவன் உண்மை, நேர்மை இவற்றைக் கடை பிடித்து தீய ஒழுக்கங்களை நீக்கிச் செயல்புரிய வேண்டும். பெரும் பாலும் மனைவியை விலக்குதல் என்பது தந்தை வழிக் குடும்பத்தில் பொதுவாக ஏற்படுவதில்லை. எல்லா நிலையிலும் கணவன் துணை புரிந்தும் அறிவுரை கூறியும் குடும்பத்தை நடத்தி வந்திருக்கின்றான். ஐரோப்பா, ரோமாபுரி, ஜெர்மனி, இங்கிலாந்து போன்ற நாடு களில் தந்தைவழிக் குடும்பம் பெருமளவுக்கு நன்மை புரிந்தது. நம் நாட்டுக் குடும்ப வாழ்க்கையிலும் தந்தை வழிக் குடும்பம் ஓரளவிற்கு அவசியமாக ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது.

மேற்கூறிய நன்மைகளைத் தவிர நம் நாட்டு இதிகாசங்கள், இலக்கியங்கள் ஆகிய அனைத்தும் தந்தைவழிக் குடும்பத்தின் பெருமைகளை எடுத்துக்காட்டுகின்றன. மனு என்னும் சட்ட நிபுணர் கீழ்க்கண்டவாறு கூறியுள்ளார். ஒரு தந்தை ஆசிரியரை விடப் பன்மடங்கு பெருமை வாய்ந்துள்ளார். தாய் தந்தையைக் காட்டிலும் ஆயிரமாயிரமளவு பெருமை வாய்ந்துள்ளார். எனினும் கணவன், தந்தை இவர்களது பெருமை இன்று வரைக் குறைந்ததாக இல்லை.

தந்தைவழிக் குடும்பத்தில் பல நன்மைகளையும் சில தீமைகளை யும் காண்கின்றோம். எடுத்துக்காட்டாக இந்தியா, சீனு நாட்டுப் பெண்கள் மூன்றுவித கீழ்ப்படிதல்களுக்கு உட்பட்டவர்கள். 1. மணமாவதற்குமுன் தந்தையின்கீழ் வாழ்வது. 2. மணமான பிறகு கணவனின் ஆளுமைக்குக் கீழ்ப்படிந்து வாழ்வது. 3. விதவைகளும் வயது முதிர்ந்த பெண்டிரும் அவர்கள் தங்கள் பிள்ளைகளின் ஆதரவில் வாழ்வது. நாளடைவில் பெண்களின் நிலை முற்போக்கடைந்து இளமைத் திருமணம், உடன்கட்டை ஏறுதல் போன்றவை தவிர்க்கப்பட்டு விதவைக்கு மறுமணம், பெண்களுக்கு உரிமை முதலியவை புகுத்தப்பட்டன.

தாய்வழிக் குடும்பம் பல நன்மைகளைப் பெற்று ஒரு காலத்தில் நன்கு விளங்கியது. இத்தகைய குடும்பத்தில் வயது முதிர்ந்த பெண்ணே குடும்பத்தலைவி. அவர்களே குடும்ப நிர்வாகம் நடத்த உரிமை பெற்றவர். அத்தகைய குடும்பத்தில் பெண் களுக்கே உரிமை அதிகம். பெண்கள் மணமான பின் பிறந்த

வீட்டை விட்டுப் புகுந்த வீட்டிற்குப் போவதில்லை. சொத்து உரிமை பெண்களுக்கு மட்டுமே உண்டு. ஆண்களுக்குக் கிடையாது. கணவன், மகன் இவர்கட்கு உணவு, உறைவிடம் முதலியவைதான் அளிக்கப்படும். இவர்கள் சாதாரணமாக விருந்தினர் போல்தான் கருதப்பட்டனர். இவர்கட்கு எந்த உரிமையும் தாய்வழிக் குடும்பத்தில் கொடுக்கப்படுவதில்லை. இதற்கு எடுத்துக்காட்டாக இன்றும் கேரளத்தில் பல பழக்க வழக்கங்கள் இருந்து வருகின்றன. சட்டம் அல்லது நீதி இதை மருமகள் தாயம் (Marumakkathayam) என்று கூறுகின்றது. நாளடைவில் தாய்வழிக் குடும்பம் மாறுபட்டுத் தந்தைவழிக் குடும்பம் முன்னேற்றமடைந்துள்ளது.

பலதரப்பட்ட குடும்பங்களில் நம் நாட்டில் முக்கியத்துவம் பெற்றது ஒருங்கிணைந்த குடும்பமே (Joint Family) யாகும். இக் குடும்பம் தாய் தந்தை அவர்தம் பெற்றோர், மற்றும் உடன் பிறந்தோர் அவர்தம் கணவன் மனைவியர் ஆகியோர் ஒன்று சேர்ந்து தந்தையின் பொறுப்பில் இயங்குவதாகும். ஒருங்கிணைந்த குடும்பம் மூன்று அடிப்படைத் தத்துவங்களைக் கொண்டுள்ளது. 1. பொது இருப்பிடம், 2. பொது உணவு, 3. பொது வழிபாடு என.

ஒருங்கிணைந்த குடும்பம் மனிதன் நாகரிகத்தைக் கடைப் பிடித்தது முதல் தோன்றியதெனக் கூறப்படுகின்றது. ஏனெனில் ஆடு மாடுகளைப் பழக்கி உழவுத் தொழிலை மேற்கொண்டு ஒரு இடத்தில் நிலையாக வாழத் தொடங்கி குடும்பத்திலுள்ள உறுப்பினர் களைத் துணையாகக்கொண்டு வாழ்க்கையைத் தொடங்கியதாகும். இக் காலத்தில் குடும்பத்தினர் ஒன்று சேர்ந்து பயிர்த் தொழிலை மேற்கொண்டு மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். அவர்தம் தேவைகள் அதிகம் இல்லாமையால் மன நிறைவும் இருந்துவந்தது. ஒருங்கிணைந்த குடும்பத்தின் நன்மைகள் கீழ்வருவன. 1. மனித வாழ்க்கையின் ஒற்றுமைக்கு ஒரு எடுத்துக்காட்டு. 2. குடும்பத்தி லுள்ள எல்லா உறுப்பினர்களும் வேற்றுமையின்றி வாழ்தல். 3. வயது வந்த உறுப்பினர்களை அன்போடும் ஆதரவோடும் பணிவோடும் பாதுகாத்தல். 4. உடல் ஊனம், அறிவின்மை முதலியவற்றால் பாதிக்கப்பட்ட உறுப்பினர்களை அன்போடு ஆதரித்தல். 5. விதவையைப் பாதுகாத்தல். 6. ஊதியம் பெறுபவர், பெறாதவர் எல்லோருக்கும் அவரவர் தேவைக் கேற்பப் பொருள் வழங்குதல். 7. சமயக் கோட்பாடுகளையும் பழக்க வழக் கங்களையும் உறுப்பினர்களுக்குக் குடும்பத் தலைவன் புகுத்துதல். 8. நன்னடத்தை நற்பண்பு இவற்றைக் குடும்ப உறுப்பினர்கட்குக் கற்பித்தல்.

மனிதன் ஒரு குழுவில் இருக்க வேண்டிய கட்டுப்பாடுகள் உள என்பதை ஒருங்கிணைந்த குடும்பம் மேற்கூறிய குறிப்புகளால் காட்டுகின்றது. ஒருங்கிணைந்த குடும்பம் நம் நாட்டில் தற்போது சிதைந்து வந்த போதிலும் சமதர்மக் கொள்கை சார்ந்த சமுதாயம் (Socialistic Pattern of Society) கொண்டுவர முயல்கின்றது.

ஒருங்கிணைந்த குடும்பத்தில் பல நன்மைகள் இருந்தபோதிலும் சில தீமைகளும் காணப்படுகின்றன. அவை 1. இக் காலத்தில் மனிதன் தன் உரிமையைப் பெற முயல்வதால் ஒருங்கிணைந்த குடும்பம் பயன்தருவதில்லை. 2. அறிவியல் வளர்ச்சியால் மனிதன் தொழில் கல்வி இவற்றின் பொருட்டுத் தன் குடும்பத்தைவிட்டு வேறிடத்திற்குச் செல்ல வேண்டியிருப்பதால் ஒருங்கிணைந்த குடும்பம் சிதைந்து போகின்றது. 3. பண்டைக் காலப் பண்பாடு கள் இக்காலத்தில் முற்றிலும் ஏற்கப்பட முடிவதில்லை. ஏனெனில் மனிதன் காலத்தை வென்று தன் செயல்களைச் செய்ய முன் வந்துள்ளான். 4. ஒருங்கிணைந்த குடும்பத்தின் உறுப்பினர்கள் பல்வேறு நாடுகளில் தனி வாழ்க்கை நடத்தக்கூடும். ஆதலால் தற்காலத்தில் ஒருங்கிணைந்த குடும்பம் என்பது பெயரளவில்தான் இருக்கின்றதே தவிர உண்மையில் செயலளவில் இருக்க முடியாத நிலைமைக்கு வந்துள்ளது.

தாய்வழிக் குடும்பம் நம் நாட்டில் பண்டைக் கால முதல் இருந்து வந்ததாக வரலாறு கூறுகின்றது. மனிதன் ஓரிடத்தில் நிலையாகக் குடியேறியது முதல் அவன் குடும்ப உறுப்பினர்களை அவன் மேற்கொண்ட தொழிலுக்காக இரண்டு பிரிவாகப் பிரித்தான். 1. வீட்டுக்கு வெளியே சென்று நிலத்தை உழுதல், நீர் பாய்ச்சுதல், விதைத்தல் என்பன. 2. வீட்டில் தங்கி குழந்தைகள், ஆடு மாடுகள் முதலியவற்றைப் பராமரித்தல், உணவு செய்தல் வீட்டை ஒழுங்கு செய்தல் என்பன.

மேற்கூறிய செயல்களில் முதலாவது ஆடவர்க்குரியதாகவும் இரண்டாவது பெண்டிர்க்குரியதாகவும் வகுக்கப்பட்டது. இது முதல் தொழிற் பிரிவுகள் முதன் முதலாகத் தோன்றலாயின என்று கூறப்படுகின்றது. தாய் வீட்டின் பொறுப்பை ஏற்றுக்கொண்டதால் குடும்பத் தலைவன் பெண்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்துத் தாய்வழிக் குடும்பத்தை முற்போக்கடையச் செய்தான் என்று கருதப்படுகின்றது. இதுதவிர தாய்வழிக் குடும்பம், ஆடவர் எண்ணிக்கை அதிகமாக இருந்ததாலும் பெண்டிர் எண்ணிக்கை குறைவாக இருந்ததாலும் ஒரு பெண் பல ஆண்களை மணந்து வாழ்க்கை நடத்தலாம் என்ற நோக்கமும் மேலோங்கியது.

தாய்வழிக் குடும்பம் நாளடைவில் பழக்கத்தில் இல்லாமல் போயிற்று. எனினும் திபெத், மலபார் நீலகிரி போன்ற இடங்களில் பழங்குடி மக்கள் பழக்கத்தில் வைத்துள்ளனர்.

தாய்-தந்தை வழிக் குடும்பங்கள் பற்பல மாறுதல்களைத் தந்து பல நன்மைகள் தீமைகள் இவ்விரண்டையும் எடுத்துக்காட்டி மக்களின் பண்பு, நாகரிகம் இவற்றை உயர்த்த வழிகாட்டியுள்ளது. தற்போது தந்தைவழிக் குடும்பமும் முழுமையாக எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. இது அறிவியல், நாகரிக முன்னேற்றத்தின் விளைவாகும். மனிதன் அறிவியலால் பெற்றுள்ள சாதனங்களைக் கொண்டு தனிமையாக முன்னேறக்கூடும் என்ற எண்ணம் முன்வந்துள்ளது. இப்போக்கை வருங்கால மக்களிடத்தில் பெரும்பான்மையாகக் காண்கின்றோம். இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகிய இந்நாளில் பெரும்பாலும் இளைஞர்கள் மாலுமி இல்லாத கப்பல் போல் நிலையற்று நிம்மதியற்று வாழ்கின்றனர். ஏனெனில் பண்டைக்காலக் கொள்கை, பண்பாடு இவை இக்காலத்தில் ஏற்கப்படமாட்டா; ஏற்கவும் முடியாது. உலகில் உள்ள எல்லா நாடுகளிலும் இது ஒரு பெரிய சிக்கலாக இருந்து வருகின்றது. இக்காலம் மனிதனுக்கு ஒரு சோதனைக் காலமாக விளங்குகிறது. இச் சோதனைக்கு முடிவு மனிதன்தான் கண்டு பிடிக்க வேண்டும்.

### குடும்பத்தின் கடமைகள் (The Functions of Family)

குடும்பத்தின் கடமைகள் பல்வேறு பட்டவை. சில கடமைகள் குடும்பத்திற்கு இன்றியமையாதனவாக இருக்கின்றன. ஆனால், தற்காலத்தில் விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளும் தனி நிறுவனங்களும் பல கடமைகளைக் குடும்பத்திலிருந்து பிரித்துவிட்டன. குடும்பம் பல கடமைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. எடுத்துக்காட்டாகப் பொருள் உற்பத்தி, உற்பத்தி செய்த பொருள்களைப் பயன்படுத்துதல், கல்வி கற்பித்தல், சமய வழிபாடு போன்றவையாகும். குடும்பம் என்னும் நிறுவனத்தின் குறிக்கோள் அதன் கடமைகளை நிறைவேற்றுவதிலும் அதன் முக்கியத்துவத்தை எடுத்துக்காட்டுவதிலும்தான் இருக்கின்றதேயன்றி அதன் அமைப்பில் இல்லை. குடும்பத்தின் சில கடமைகளை நாம் விரிவாகக் காண்போம். 1. பொருள் உற்பத்தி செய்யும் கடமை. ஒரு கிராமத்தைச் சார்ந்த குடும்பங்கள் பொருள் உற்பத்தி செய்வதிலும் பொருள்களைப் பயன்படுத்துவதிலும் தனிப்பட்ட முறையில் இயங்கி வருகின்றன. குடும்பமே உயிர்வாழ்வதற்குத் தேவைப்பட்ட எல்லா பொருட்களையும் உற்பத்தி செய்து அதைப் பயன்படுத்தி வந்தது. ஆனால், தற்போது ஒரு குடும்பம் தேவைப்பட்ட

எல்லாவற்றையும் உற்பத்தி செய்ய முடிவதில்லை. ஏனெனில், சமுதாய அமைப்பு விரைவாக மாறிவிட்டது. நகரக் குடும்பங்களால் இக் கடமைகள் முற்றிலும் கைவிடப்பட்டு வருகின்றன. நகரக் குடும்ப மக்கள் பலதரப்பட்ட வேலைகளைச் செய்து பணம் சேர்த்து தேவையானவற்றை வாங்கிக்கொள்கின்றார்கள். எனவே குடும்பத்தின் உற்பத்தி செய்யும் கடமையானது வீட்டிற்கு வெளியே மக்களால் மறைமுகமாக நிறைவேற்றப்படுகிறது.

பண்டைக் காலத்தில் குடும்பம் உற்பத்தி செய்த பொருள்களைத் தானே பயன்படுத்தியது. இக் காலத்தில் குடும்ப மக்கள் உயர்ரகப் பொருட்களையே பயன்படுத்த விரும்புகிறார்கள். மனிதனால் கண்டுபிடிக்கப்பட்ட பல அறிவியல் இயந்திரங்கள் பொருட்களை உற்பத்தி செய்வதுடன் அவற்றை நல்ல முறையிலும் மிக அழகாகவும் உற்பத்தி செய்கின்றன. இயற்கையாகவே மனிதன் அவற்றை விரும்புகிறான். பலதரப்பட்ட குடும்பங்களில் பயன்படுத்தும் கடமைகளை அளவிட்டுப் பார்ப்போமாகில் பல உண்மைகள் வெளிப்படும். அஃதாவது குறைந்த வருமானமுள்ள குடும்பங்கள் உணவு, உடை உறையுள் போன்றவற்றில் அளவுக்குமேல் செலவிடுகின்றன. அதிக வருமானம் உள்ள குடும்பங்கள் கல்வி, பொழுதுபோக்கு, உடை போன்றவற்றில் அதிக பணம் செலவிடுகின்றார்கள் என்ற உண்மை கணிக்கப்பட்டுள்ளது.

குடும்பம் உற்பத்தியல்லாத பல கடமைகளையும் செய்து வருகிறது. எடுத்துக்காட்டாக அறிவு, தொழில்முறை (Skill) பண்பாடு போன்றவை அடுத்த தலைமுறைக்குக் கற்பிக்கப் படுகின்றன. தெய்வ வழிபாட்டு முறையை எடுத்துக்காட்டு கின்றது. நோயாளிகளையும் முதியோரையும் பாதுகாத்து கடமைகளை நிறைவேற்றுகின்றது. இவற்றைச் சமூகச் சார்பான கடமைகள் (Social Functions) என்று கூறுவர். ஆனால், இன்று பல கடமைகள் குடும்பத்திலிருந்து பிரிக்கப்பட்டுப் பல தனிப்பட்ட நிறுவனங்களாலும் அரசாங்க நிறுவனங்களாலும் மேற்கொள்ளப் பட்டு நிறைவேற்றப்படுகின்றது. அப்படி பிரிக்கப்பட்ட சில கடமைகளை நாம் கீழே காண்போம்.

**1. கல்வி கற்பிக்கப்படும் கடமை (Educational Function)**

**முற்காலத்தில் குடும்பமும் கோவில்களுமே கல்வி கற்பிக்கப் படும் நிறுவனங்களாக விளங்கிவந்தன. இக் கடமையின் பெரும் பகுதி பிரிக்கப்பட்டாலும் இன்றும் குடும்பம் கல்வி கற்பிக்கப்படும் நிறுவனமாக விளங்கி வருகின்றது. குழந்தையின் இளமைப்**

பருவத்தில் குடும்பமானது சமூகத்தின் வழி முறைகளைக் கற்பிக் கின்றது. ஆனால் இன்று கல்வி நிறுவனம் விரிவடைந்துள்ளது. ஒரு குழந்தையின் சக்தியும் நேரமும் இந் நிறுவனத்திலேயே பெரும்பாலும் செலவிடப்படுகின்றது. சமூகம் எளிமையான நிலையிலிருந்து மிகச் சிக்கல் நிறைந்த சமூகமாக மாறியுள்ளது. சமூகம் எளிய நிலையிலிருந்தபோது, மனிதன் ஒரு தொழில் முறையை மட்டுமே கற்று வாழ முடிந்தது. ஆனால், இன்று மனிதன் பல தொழில் முறைகளைக் கற்றிருந்தால்தான் இவ்வுலகில் வாழ முடியும் என்ற நிலை உள்ளதால் மனிதனுக்குப் பல தொழில் முறைகளைக் கற்பிக்க வளர்ந்த கல்வி நிறுவனத்தால் மட்டுமே முடியுமன்றிக் குடும்பத்தால் முடியாது. மேலும், கல்வி நிறுவன மானது மனிதனைப் பல துறைகளில் விரிவாக உருவாக்குகின்றது. ஒருவன் மற்றவரிடம் எப்படிப் பழக வேண்டும், எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்பதையும் கற்றுத் தருகின்றது. இதற்காகச் சில கல்வி நிறுவனங்கள் சமூக நல ஊழியர்களையும் நியமித் துள்ளது. சில சமயம் ஆசிரியர்கள் ஒரு மாணவனுடைய வீட்டிற்கு வந்து அவனுடைய வீட்டுச் சூழ்நிலை எவ்வாறிருக்கிறது என்பதைக் கணித்து அதற்கேற்றவாறு வீட்டிற்கு வெளியே அவன் நடந்து கொள்ள வேண்டிய முறையைக் கற்பிக்கிறார்கள். இவ்வாறாகக் கல்வி நிறுவனம் தனது கடமைகளைக் குடும்பத்தி லிருந்து பிரித்து செயலாற்றுகின்றது.

முற்காலத்தில் மக்கள் தங்கள் நேரத்தை விளையாட்டு வேடிக் கைகளில் செலவிட விரும்பும்போது குடும்பமே அதற்கேற்ற இடமாக விளங்கி வந்துள்ளது. வீட்டிற்கு வெளியே நடக்கும் சில கேளிக்கைகளும் குடும்பங்களின் மேற்பார்வையிலேயே நடத்தப் பட்டுவந்தன. ஆனால் தற்போது பல திரைப்படக் கூடங்களும், விளையாட்டு அரங்கங்களும் மற்றும் இவைபோன்ற வசதிகள் பெருகியுள்ள நிலையில் மனிதன் தன் நேரத்தைச் செலவிட இவற்றைத் தேர்ந்தெடுக்கின்றான். மேலும், தற்காலத்தில் வேலைத் திறனைச் சேமிக்கும் சாதனங்களாலும் தொழில் மற்றும் உணவு உற்பத்திப் பெருக்கத்தாலும் மனிதனுக்குப் பொழுதுபோக்கு நேரம் பெருமளவில் கிட்டுகிறது. இக் கூடுதல் நேரத்தைச் செலவிட வசதிகளைத் தருவது என்பது தனிப்பட்ட நிறுவனங்களால் மட்டுமே இயலுவதாகும்.

மேலும், குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரும் வெவ்வேறு சூழ்நிலையில் வேலை செய்வதால் ஒவ்வொருவருடைய மனப் போக்கும் வேறுபடுகின்றது. ஆதலால் ஒவ்வொருவரும் தங்களுக் கேற்ற பொழுதுபோக்குச் சாதனங்களைத்தான் தேர்ந்தெடுப்பார்

களேயன்றி, அனைவரும் ஒரே விதமான சாதனத்தைத் தேர்ந்தெடுக்க இயலாது. எடுத்துக்காட்டாக நாள் முழுதும் வேலை செய்யும் தந்தை மாலைப் பொழுதில் வீட்டிலிருந்து செய்தித்தாள் படிக்க விரும்புவார். ஆனால், தாயோ நாள் முழுதும் வீட்டிலடங்கி வேலை செய்வதால் ஒரு மாற்றத்திற்காக வெளியே செல்ல விரும்பலாம். குழந்தைகள் பெரும்பாலும் வீட்டிற்கு வெளியிலேயே வயதுக்கேற்ற நண்பர்களுடன் விளையாட விரும்புவார்கள். எனவே, ஒரு குடும்பம் இக் கடமையையும் (Recreational Function) நிறைவேற்ற முடியாமல் போய்விடுகிறது.

முதன் முதலில் ஒரு குழந்தை சமயக் கல்வியை (Religious education)த் தான் பிறந்த குடும்பத்தில்தான் கற்கின்றது. குடும்பம் அவன் பின்பற்ற வேண்டிய சமயத்தைப் பற்றியும் அதன் மூலம் நன்னடத்தைக்கு அடிக்கல் நாட்டுகின்றது. நம் பண்பாட்டில் சமயம் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. நம் நாட்டில் மக்கள் சமயத்திற்கு ஓரளவு முதலிடம் கொடுத்துள்ளனர். எனினும், இக் கடமையும் தற்சமயம் குடும்பம் இழந்துவிட்டது என்று கூறலாம். ஏனெனில் நாகரிகம் வளர வளர ஒரு மனிதன் தன் முன்னோர்கள் பின்பற்றி வந்த சமயத்தைத்தான் பின்பற்ற வேண்டும் என்ற கட்டாயம் மாறி எந்தச் சமயத்தையும் பின்பற்றலாம் என்ற எண்ணம் மேலோங்கி வருகிறது.

குடும்பம் ஒரு மனிதனை எல்லா நிலைகளிலும் குழவிப் பருவம், குமரப் பருவம், வாலிபப் பருவம், முதுமைப் பருவம் - பாதுகாத்து துணை நின்று வந்த நிறுவனமாக விளங்கியுள்ளது. மேலும் நோய்வாய்ப்பட்ட நிலையிலும் ஓய்வு பெற்ற நிலையிலும் பெண்டிர் விதவையான நிலையிலும் தாய் தந்தையரை இழந்த குழந்தைகளின் வாழ்விலும் பாதுகாப்பளித்தது. இக் கடமைகளை பாதுகாக்கும் கடமை (Protective Function) என்று கூறுவர். மனிதன் தன் ஏழு பருவக் காலங்களிலும் பாதுகாப்பைக் குடும்பத்தில்தான் நாடி வந்தான். ஆனால் இப்பொழுதோ இக்கடமைகளை தனிப்பட்ட நிறுவனங்களும் அரசாங்க நிறுவனங்களும் மேற்கொண்டு நிறைவேற்றுகின்றன. பல பாதுகாப்புச் சட்டங்கள் ஈட்டுறுதி (Life Insurance), கூட்டமைப்பு (Company)களும் மனிதனுக்கு வேண்டிய பாதுகாப்பை அளிக்கின்றன. தனிப்பட்ட பாதுகாப்பு நிறுவனங்களும் சிக்கல் வாய்ந்த சமூகத்தில் உண்டாகும் பல்வேறு சிக்கல்களை மனிதனுக்குத் தீர்த்து வைக்கின்றன. தற்போது, வேண்டிய வசதிகளும் உறுப்பினர்களும் பொருள் வசதியும் குடும்பத்தின் கண் இல்லை.

இவ்வாருகப் பலகடமைகள் குடும்பத்திலிருந்து பிரிக்கப்பட்டு விட்டன. ஆனுல், அதற்காக நாம் குடும்பத்தைக் குறைகூற முடியாது. ஏனெனில் பலதரப்பட்ட நிறுவனங்கள் பல நவீன வசதிகளைத் தன்னகத்தே கொண்டுள்ளதால் குடும்பத்தை விட நல்ல முறையிலும் திறமையான வகையிலும் மனிதர்களுடைய சிக்கல்களைத் தீர்த்து வைக்கின்றன. தொழிற்சாலைகள் நல்ல துணி வகைகளையும், பாத அணிகளையும், உணவுப் பொருட்களையும் செய்ய முன் வந்துள்ளன. திரைப்படங்கள் உணர்ச்சி, கவர்ச்சி நிறைந்த பொழுதுபோக்குக் கருவியாக அமைந்துள்ளன. அரசாங்கம் முதியோர்களைக் காப்பாற்றவும் நோயாளிகளைப் பாதுகாக்கவும் மற்றும் பல வசதிகளை மேற்கொள்வதால் குடும்பத்திலுள்ள உறுப்பினர்கள் பயனடைகின்றனர்.

குடும்பத்தின் பிடிப்பு அல்லது பிணைப்பு குறைந்த போதிலும் மனிதன் குடும்பத்தைத் தவிர்க்க முடியாத நிலையிலிருக்கின்ருன். மேலும், சில இன்றியமையாத கடமைகளை குடும்பத்தின் மூலமாகத் தான் நிறைவேற்ற முடியும். உயிர் பிறப்புக் கடமை (அல்லது) இனப்பெருக்கம் (Biological), கணவர் மனைவியரன்றி மற்ற நிறு வனங்களால் இயலாது. பாச உணர்வு (Affectional) என்னும் உரிமை குடும்பத்திற்கே உரியதாகும். குழந்தைகளைச் சமுதாய மக்களாக்குவது (Socializing Function) குடும்பத்தின் பொறுப்பு. மனிதனுக்கு வேண்டிய உறவை வளர்த்தலும், வசதிகளை கொடுத்துச் சமூக மனிதனுக்குவதும் குடும்பத்தின் கடமைகள். குழந்தைக்கு அன்பையும் உணர்ச்சி (Feeling) பாதுகாப்பையும் தருவது குடும்பமே. இறுதியாகப் பண்பாடு, மரபு இவைகளை ஒட்டி குழந்தையின் ஆளுமையை உருவாக்கும் ஒரே ஒரு நிறுவன மாகக் குடும்பம் விளங்குகிறது.

## 1. குடும்பம்—சமுதாயம்

குடும்பம் சமுதாயத்திற்கு ஒரு துணைஅமைப்பாக இருக்கிறது. சமுதாயம் குடும்பத்திற்கு வாழ்வை அளிக்கிறது. சமுதாயம் பண்பாடு, பொதுக் கருத்து இவற்றை மேற்கொண்டு குடும்பத்தை மேன்மையடையச் செய்துள்ளது. மணம், சொத்துரிமை இவைகள் ஓரளவிற்குச் சமுதாயத்தைச் சார்ந்துள்ளன. மேலை நாட்டுக் குடும்பங்கள் செயல் முறைகளில் தனிமை வாய்ந்தது. குடும்பத்தில் செய்து வந்த வேலைகளைத் தற்போது பெரும்பாலும் இயந்திரங்கள் செய்கின்றன. எடுத்துக்காட்டாகக் குழந்தை வளர்ப்பு, கல்வி கற்பித்தல், உணவளிப்பு போன்றவை. குடும்பம் இவற்றை ஏற்காததற்குக் காரணம் கணவன் மனைவி இருவருமே

தொழில் புரிவதாகும். சட்ட அமைப்பும் சமயத்திற்கேற்ப மாறி மாறி வந்துள்ளது. தற்போது பெண்களுக்குத் தனிச் சொத்துரிமை உண்டு. வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது. பெண்களுக்கு மணவிலக்கு உரிமையும் வழங்கப்பட்டுள்ளது. குறிப்பாக நம் நாட்டில் வயது வந்த பெண்களுக்கு வாக்குரிமையும் ஓட்டுரிமையும் வழங்கப்பட்டுள்ளது.

குடும்பம் என்பது பல கட்டங்களைக் கடந்துள்ள போதிலும் சில முக்கியத் தன்மைகளைக் குடும்பத்தை விட்டுப் பிரிக்க முடியாது. அவை 1. குடும்பம் தாய் தந்தை இல்லாவிடில் மக்கள் பெருக்கம் (Increase in population) இருக்க முடியாது. 2. தாய் தந்தையரைத் தவிர வேறு எந்த நிறுவனத்தாலும் அன்பு, ஆதரவு முதலிய வற்றை முழுமையாகக் கொடுக்க இயலாது. 3. நன்னடத்தை நற்குணம் இவற்றைப் பயக்கக் குடும்பம் இன்றியமையாதது. குடும்பம் என்னும் நிறுவனம் இல்லையேல் மனிதன் ஓரளவிற்கு விலங்குகளைப் போல் வாழத் தொடங்க நேரிடும்.

மேற்கூறிய காரணங்கள் குடும்பம் என்னும் நிறுவனத்தை அழிக்க முடியாத தன்மைகளாகக் கருதப் படுகின்றன.

## 2. திருமண முறைகள்

இல்லறம் என்னும் நல்லறம் குடும்பம், மணம் ஆகிய இரண்டையும் வெளிப்படுத்துகின்றது. குடும்பம் மணமக்களைத் தேர்ந்தெடுக்க இன்றியமையாதது. மணம் குடும்பத்தைத் தோற்று விக்க இன்றியமையாதது. இவை இரண்டும் பழங்கால முதல் மனிதனால் ஏற்கப்பட்டு உலகில் மக்கள் உள்ளவரை இயங்கும் என்பதில் ஐயமில்லை. மணமுறைகள் வேறுபடினும் குடும்ப வகைகள் மாறுபட்டாலும் இவை இரண்டும் ஒருங்கே மனிதச் சமுதாயத்தின் போக்கை எடுத்துக் காட்டியுள்ளன. குடும்பம் ஒரு தனிமனிதனை உருவாக்கப் பல்வேறு துறைகளில் செயல் படுகின்றது. அதேபோல் திருமணம், ஆண் பெண் சேர்க்கை யின் ஒற்றுமை, அவர்தம் கடமை, நாட்டிற்கு ஆற்ற வேண்டிய பணி ; அஃதாவது மக்களைப் பெருக்குதல் போன்றவை இன்றியமையாதவை. மணம் என்ற நிறுவனம் பண்டைக் கால முதல் இன்றுவரை பல்வேறு மாற்றங்களை கொண்டு விளங்கு கின்றது. இவ்வுண்மையை நாம் வரலாற்றின் மூலம் தெரிந்து கொள்ளுகின்றோம். பொதுவாக மணம் -ஆண் பெண் சேர்க்கை, விலங்குகளின் கூட்டம் அவைதம் நடத்தை, பெண் விலங்கு தன்

குட்டிகளைக் காப்பாற்றுவது மனிதனுக்கு ஒரு முன்னோடியாக விளங்குகின்றது. சான்றாக, ஒரு குரங்குக் கூட்டத்தில் ஆண் பெண் குரங்கு சேர்க்கை நிலைத்து அவை தம் குட்டிகளைக் காப்பாற்றுகின்றன என்று கூறப்படுகின்றது. இத்தகைய உறவையே மனிதனும் மேற்கொண்டுள்ளான் என்று மனித வரலாறு கூறுகின்றது.

பண்டைக்கால மக்கள் மணம் என்னும் நிறுவனத்தை வலியுறுத்தவில்லை எனத் தெரிகின்றது. பொதுவாக ஒரு குழுவிலுள்ள மக்கள் மற்றொரு குழுவிலுள்ள மக்களுடன் ஆண் பெண் சேர்க்கை கொண்டுள்ளதாகக் கூறப்படுகின்றது (Promisequous). இவ்வுண்மையை "திருமணத்தின் வரலாறு" என்னும் நூலில் லாயிட் மார்கன் (L. Margan) கூறியுள்ளார். சமூகம் சமுதாயங்களின் உறுப்பாகிய 'குடும்பம்' அதனுள் அடங்கிய நிறுவனமாகிய 'மணம்' ஆகிய இரண்டிலும் ஆதிகால முதல் இன்று வரை ஏற்பட்ட போக்குகளையும் மாறுதல்களையும் சடங்குகளையும் அறிந்து கொள்வதற்கு சரித்திர வாயிலான ஆதாரங்கள் போதிய அளவில் கிடைக்கப்படுவதில்லை. எனினும், ஆண் பெண் சேர்க்கை, குடும்பம் ஆகிய இவற்றைப் பலதரப்பட்ட சமுதாயங்களிடையிலும் இன்றும் காண்கின்றோம். மனித சமுதாயத்தில் பல்வேறு திருமண முறைகளைக் காணலாம். சாதி என்னும் சமுதாய நிறுவனம், மணம் என்னும் நிறுவனத்திற்கு அடிக்கல் நாட்டியுள்ளது. வேதம், உபநிடதம் ஆகிய இவை மேலின ஆண்கள் கீழினப் பெண்களை மணக்கலாம் (Anuloma marriage). ஆனால், மேலினப் பெண்கள் கீழின ஆண்களை மணக்கவியலாது என்றும் குறிப்பிட்டுள்ளன. மேலும், மணவகைகளை எட்டுப் பிரிவுகளாகப் பிரித்து விளக்கலாம். அவை 1. பெண்ணின் பெற்றோர் ஒரு பெண்ணுக்குத் தகுந்த கணவனைத் தேர்ந்தெடுத்துப் பெண்ணைக் கொடுத்தல் (Brahma form of marriage). 2. வேள்வியை நடத்துகின்ற ஒருவனுக்கு ஒரு கன்னியை மணம் செய்வித்தல் (Deiva form of marriage). 3. ஒரு பொருளைப் பெற்று அதற்கு மாறாகப் பெண்ணைக் கொடுத்தல் (Marriage by contract). 4 ஒரு கன்னியைப் பொருளுக்குப் பதிலாகக் கொடுத்தல் (Marriage by purchase). 5. ஒருவன் ஒரு பெண்ணுடன் சேர்ந்து சடங்குகளைச் செய்து மணந்து கொள்ளுதல் (Marriage by rituals). 6. ஒருவரை ஒருவர் காதலித்து மணந்து கொள்ளுதல் (Gantharva form of marriage). 7. பலாத்காரத்தினால் ஒரு பெண்ணைக் கடத்திச் சென்று மணம் செய்து கொள்ளுதல். (Marriage by force). 8. ஒரு பெண்ணை ஏமாற்றி மந்திரம் முதலியவற்றின் மூலம் தன் வயமாக்கி அடைதல் (Paisaca form of marriage) என

"மறைஓர் தேஎத்து மன்றல் எட்டு" தொல் -கள-சூ. 1. மேற் கூறிய சில மண முறைகள் இன்றும் பின்பற்றப்பட்டு வருகின்றன, சான்ருக, ஆண் பெண் ஒருவரை ஒருவர் காதலித்து மணம் புரிந்து கொள்ளுதல் (Love marriage), வரதட்சணை கொடுத்து ஒரு பெண்ணை மணம் செய்தல் போன்றவை இம்மண முறைகளைத் தவிர பழங்குடி மக்களிடையே மேலும் பல மண முறைகள் நிலவு கின்றன பண்டைக்கால மக்களும் எட்டு வித மண முறைகளை மேற்கொண்டுள்ளனர். 1. மணப் பருவத்தில் ஒரு ஆண் தான் தேர்ந்தெடுக்கப்படும் பெண் குடும்பத்தினருடன் சில நாட்கள் தங்கி அவன் தன் தகுதியை நிரூபித்துப் பெண்ணைப் பெற வேண்டும். அவன் தகுதி அற்றவனுயின் பெண் வீட்டாருக்கு ஊதியத்தைக் கொடுத்து விடுவித்துக் கொள்ள வேண்டும் (Probationary marriage). 2. ஒரு பெண்ணை வற்புறுத்தித் திருமணம் செய்து கொள்ளும் வழக்கம். இது சட்டத்திஞலும் சமுதாயத்தின் முன்னேற்றத்திஞலும் குறைந்துள்ளது. ஏனெனில், இன்றும் நம் நாட்டுப் பழங்குடி மக்கள் இப்பழக்கத்தைக் கடைப் பிடித்து, பெண் வீட்டார் ஒரு இளைஞனை வற்புறுத்தித் தம் மகளைக் கட்டாயத் திருமணம் செய்து கொள்ள வேண்டுவர். இத் திருமணச் சடங்கில் பெண்வீட்டார் மணமகனைத் தடுப்பதும் வேடிக்கையாகச் சண்டை போடுவதும் மணப்பெண் ஓரளவிற்கு மறுப்பதும் சடங்குகளாகக் கருதப்படுகின்றன (Marriage by capture). 3. ஒரு வாலிபனின் துணிவு, பண்பு ஆகியவற்றைப் பெண் வீட்டார் ஏற்றுக்கொண்டு திருமணம் செய்தல் (Marriage by trial). 4. பெண்ணை விரும்பும் ஒரு வாலிபன் பெண் வீட்டாருக்குப் பொருளோ அல்லது ஊதியமோ கொடுத்துப் பெறுதல் (Marriage by purchase). 5. இரு குடும்பங்கள் தத்தம் செல்வங்கள் பிரிந்து போகாமல் அக்குடும்பத்திலேயே பெண் எடுத்தல் அல்லது கொடுத்தல் (Marriage by exchange). 6. வயது வந்த ஆண் பெண் ஒருவரை ஒருவர் விரும்பி வாழத் தொடங்கி அச் செய்தியைத் தத்தம் பெற்ருேர்களை அழைத்து அவற்றை ஒத்துக் கொள்ள செய்தல் (Marriage by mutual consent and elopement). 7. ஒரு பெண் அவளை விரும்பாத ஆண்மகனைத் திருமணம் செய்து கொள்ள வற்புறுத்துதல் (Marriage by intrusion). 8. ஒருவன் ஒரு பெண்ணை மணக்க விரும்பினுல் அப்பெண்ணின் குடும்பத் தினருக்கு ஊழியம் செய்து நற்பெயர் பெற்று நடந்து கொள்ளுதல் (Marriage by service).

மேற்குறிப்பிட்ட வண்ணம் நம் நாட்டில் பல்வேறு திருமண முறைகளும் சடங்குகளும் நடைமுறையில் இருந்து வருகின்றன. இந்துக்கள் திருமணத்திற்கு தெய்வீகத் தன்மையளித்து அதை

மேம்படச் செய்துள்ளனர். மணம், ஆண் பெண் சேர்க்கை மட்டுமல்ல. இரு குடும்பங்களை ஒன்று சேர்த்து மேன்மையடையச் செய்கின்றது.

மணமென்னும் நிறுவனம் உலகிலுள்ள மக்களால் ஏற்கப்பட்டு அதற்குத் தேவையான சில விதிகளையும் வகுக்கப்பட்டுள்ளது. பெரும்பாலும் அவ் விதிகள் விலக்குதல் (Prohibitions), முன்னுரிமை (Preference), விதியமைப்பு (Prescription) என்பன. நெருங்கிய உற்ருர் உறவினர்களுடன் பாலுணர்ச்சி கொள்ளுதல் (Sexual Relation) மக்களால் ஏற்கப்படுவதில்லை. சான்ருக, தன்னை ஈன்ற அன்னையிடம் தனையன் பாலுணர்வு கொள்ளுதல்; உடன் பிறந்தாளிடம் தமயன் பாலுணர்வு கொள்ளுதல் போன்றவை. இதன் விளைவே அகமணத் தடை முறை (Exogamy). அகமணத் தடைமுறை விதி, ஒரு பெண்ணோ ஆணோ தங்களுக்குரியவரை தங்கள் குழுவிற்குப் புறம்பான குழுவிலிருந்தே தேர்ந்தெடுத்தல் வேண்டும். இம்முறையே இன்றும் இந்துக்களிடம் குல அகமணத் தடை முறை (Gotra Exogamy) என்று கூறப்படுகின்றது. இவ்விதி முறையை ஒருவன் மறுப்பாணுயின் அவன் அக்குழுவிலிருந்து விலக்கப்பட்டு தன் உரிமைகளை இழப்பான்.

ரெஸ்லி (Risley) என்னும் அறிஞர் அகமணத் தடைமுறைக்கு விளக்கம் தந்துள்ளார். 1. மனிதனிடையே புதுமையை விரும்பும் நோக்கம் இயல்பாகவே அமைந்ததனுல் தன் குழுவிலுள்ளோரை மணஞ் செய்ய விரும்பாமை. 2. தான் வாழும் குழுவில் தன் விருப்பத்திற்கேற்ப பெண்ணோ ஆணோ இல்லாமை. 3. மற்ற குழுக்களின் சடங்குகளை ஓரளவிற்குப் பின்பற்ற விரும்புதல் என்பன.

சிற்சில குழுக்களில் முன்னுரிமை (Preference), விதியமைப்பு (Prescription) மண முறைகளைக் கட்டுப்படுத்துகின்றது. தங்கள் குழுவில் மணத்தற்குரிய பெண்ணோ ஆணோ இருப்பராயின் அவரையே மணந்து கொள்ள வேண்டும் என்பது முன்னுரிமை (Preference) மணமுறை. அத்தை மகன், மாமன் மகள் என்பன சான்ருகக் கூறப்படுவன.

விதியமைப்பு (Prescription) மணமுறை தேர்ந்தெடுக்கப்பட்ட பெண்ணை மணந்து அவளுடன் குடும்ப வாழ்க்கை நடத்திக் குழந்தைகளைப் பேணுதல்.

புறமணத் தடைமுறை, முன்னுரிமை, விதியமைப்பு ஆகிய மணமுறைகட்கு அடித்தளமாக அமைகின்றது. இது மக்க

ளிடையே வேற்றுமையின்றிக் கூடி வாழ்வதற்கு இன்றியமை யாததாகக் கருதப்படுகின்றது. மேலும், அறிமுகமில்லாத மக்கள், அவர்தம் பண்பாடு முதலியவற்றை மறுக்க வழிவகுக்கின்றது. மற்றும், ஒரு குழுவின் பண்பாடு விதிமுறைகளை நிலைநாட்டத் துணையாக விளங்குகின்றது.

முன்னுரிமை மணம் இரண்டு குடும்பங்களை ஒன்று சேர்க்க முற்படுகின்றது. ஒருவன் மனைவி இறந்துவிட்டால் இறந்தவளின் சகோதரியை மணந்து கொள்ளும் வழக்கம் இன்றும் நம் நாட்டில் இருந்து வருகின்றது. இதேபோல் ஒருத்தியின் கணவன் இறந்து விட்டால் இறந்தவனின் சகோதரனை மணக்கலாம் என்ற வழக்கம் இன்றும் சிற்சில பழங்குடி மக்களிடையே நடைமுறையில் இருந்து வருகின்றது. இவ்விரண்டு மணமுறைகளும், லிவரேட் (Leverate), சோரரோ ரேட் (Sororate) என்று கூறப்படுகின்றன. இம் மண முறைகள் இவ்விரு குடும்பங்களையும் சிற்சில கடமை உணர்ச்சி களுக்கு உள்ளாக்குகின்றன. மேற்கூறிய மணமுறைகள் மணமகனையோ மணமகளையோ தேர்ந்தெடுப்பதைப் பெரு மளவுக்குக் கட்டுப்படுத்திய போதிலும் அம்முறைகள் பெரும்பாலும் எல்லா நாட்டினராலும் பரவலாகப் பின்பற்றப்படுகின்றன.

திருமணம் என்னும் நிறுவனம் உலகெங்கும் பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்ட போதிலும் வரலாறு, அதன் பல கட்டங்களை எடுத்து விளக்குகின்றது. குழுமணம் பண்டைக்கால மக்களால் ஏற்கப்பட்ட போதிலும் ஒரு பெண் பல ஆண்களை மணக்கலாம் என்ற முறை முதன் முதலாகத் தோன்றியதாகச் சரித்திரம் கூறு கிறது (Polyandry). நம் நாட்டில் இந்த முறை இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1. பல சகோதரர்களை ஒரு பெண் மணத்தல் (Freternal Polyandry). சான்றுகத் திரௌபதி பஞ்ச பாண்டவர்களை மணம் புரிந்து வாழ்ந்தது. தோடர் இனப் பெண்கள் (Todas) பல சகோதரர்களை கணவனுக ஏற்று வாழ்க்கை நடத்துதல். கேரளத்திலுள்ள நாயர் என்னும் இனப் பெண்கள் பல சகோதரர்களை மணத்தல். இதற்கு மாருக சகோதரத்துவம் இல்லாத பல ஆண்களை ஒரு பெண் மணந்து வாழ்தல் (Adelphic Polyandric) என்று பெயர். இவ்வழக்கம் பொதுவாக பழங்குடி மக்களிடையே காணப்படுகின்றது.

ஒரு பெண் பல ஆண்களை மணந்து கொள்வதற்குரிய காரணங்களுக்கு வெஸ்டர் மார்க் (Wester Marck) என்னும் அறிஞர் விளக்கம் தந்துள்ளார். பெண்கள் குறைவுள்ள குழு, அல்லது நாடு போன்றவற்றில் இப்பழக்கம் மேற்கொள்ளப்

பட்டது. மேலும், இத்தகைய மணமுறை ஒவ்வொரு பெண்ணுக்கும் குறைந்த மகப்பேற்றைக் கொடுத்தும், அதிலும் பெண் குழந்தைகள் மிகக் குறைவாகவும், பெரும்பாலான பெண்களுக்கு மகப்பேறு இல்லாமலும் இருக்கக்கூடிய நிலையை உண்டாக்குகின்றது. ஒரு ஆண் பல பெண்களை மணக்கலாம் என்ற முறை நம் நாட்டில் பெருவாரியாக ஏற்றுக் கொள்ளப் பட்டது— இது 'Polygamy' என்று கூறப்படுகின்றது.

நாகரிகமுற்ற இந்து மக்களாலும் பழங்குடி மக்களாகிய பைகா, கோண்டு Gont), நாகர்கள் முதலியோராலும் இம்முறை ஏற்கப்பட்டுள்ளது. இம்முறை ஏற்கப்பட்டதற்குக் காரணம் பல பெண்களைப் பராமரிப்பதற்கேற்ற பொருளாதார வசதியும் குழந்தைகளின் எண்ணிக்கை பெருகவேண்டும் என்ற நோக்கமுமாகும். மேலும், பெண்கள் எண்ணிக்கை பெருகி ஆண்களின் எண்ணிக்கை குறைந்ததுமாகும்.

ஒரு பெண் பல ஆண்களை மணக்கும் முறை, ஒரு ஆண் பல பெண்களை மணக்கும் முறை ஆகிய இவை இரண்டும் ஒருங்கே பன் மனை மணமுறை (Polygamy) என்று கூறப்படுகின்றது.

நம் நாட்டில் குழந்தைகள் இல்லாத குடும்பம் சமுதாய மதிப்பினைப் பெற முடியாத நிலையில் இருந்தது. ஏனெனில், குழந்தைகள் செல்வமாகவும் தெய்வமாகவும், தாய்தந்தையரின் பாவ-புண்ணியங்கட்கு காரணமாவர் என்றும் மற்றும் முதுமைக் காலத்தில் தங்களைக் காப்பாற்றும் ஈமக்கிரியை செய்யக் கடமைப் பட்டவர்களாகவும் கருதப்பட்டு, போற்றப்பட்டனர்.

மேற்கூறிய கூற்றுகட்கேற்ப பிள்ளையில்லாக் குடும்பத்தில் தத்தெடுத்துப் பெற்றெடுத்தக் குழந்தைபோல் பராமரிப்பது இந்திய நாட்டுப் பண்பாடு.

நம் நாட்டவராகிய இந்துக்களுக்கு மணம் இன்றியமையாதது என்பது மனு என்னும் சட்ட நூல் நிபுணர் வாழ்க்கையின் இரண்டாவது கட்டமாகிய இல்லறத்தில் வாழ்க்கை நடத்துவதன் மூலம் எடுத்துக் காட்டியுள்ளார்.

இல்லற மல்லது நல்லற மன்று' என்று ஔவையாரும்

'அறமெனப் பட்டதே இல்வாழ்க்கை' என்று வள்ளுவரும் திருமண வாழ்க்கையைப் போற்றுகின்றனர். இன்றும் மணம், மணச்சடங்குகள் பெரும்பாலான இந்துக்களால் ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளன. ஒரு இந்து மணச் சடங்குகள் நான்கு கட்டங்களை

மேற்கொண்டுள்ளது. 1. ஒரு கன்னியை ஈன்றோன் பெருமையும் உரனும் அமைந்த ஓர் ஆடவனுக்கு உயரிய அணிகலன்களுடன் தானமாகக் கொடுத்தல். இதைக் கன்னிகா தானம் என்று கூறுவர். 2. வேள்வித் தீ முன்னர் சடங்குகளை நடத்துதல். இதை விவாக ஹோமம் (Vivaha Homa) என்று கூறுவர். 3. மணமகன் மணப் பெண்ணின் பொற்கரங்களைப் பற்றி ஏழு அடி (சப்தபதி) தூரம் நடந்து செல்லுதல். 4. மணமகன் மணப்பெண்ணை உடன் அழைத்துச் செல்லுதல்.

நம் நாட்டில் இன்றும் ஓரளவிற்கு மணம் சமயத்தைத் தழுவி வருவதால் கணவன் மனைவியைப் பிரிப்பது அரிது. பொதுவாக இருவரில் ஒருவர் இறந்தாலன்றிப் பிரிவு என்று கருதவியலாது. விதவையான ஒரு பெண் மறுமணம் செய்து கொள்ள சமுதாயம் அண்மைக் காலம் வரை அனுமதிக்கவில்லை.

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நம் நாட்டில் திருமணம் பல மாறுதல்களைச் சமுதாயப் போக்கிற் கேற்ப ஏற்று நற்பணி புரிகின்றது என்று கூறலாம். நம் நாட்டுத் தந்தையாகிய காந்தியடிகள் கலப்பு மணம் (Inter Caste) தவறானதாகக் கருதவியலாது என்று வற்புறுத்தினர். 1954 ஆம் ஆண்டு தனித் திருமணச் சட்டம் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது. இச் சட்டம், இனவேறுபாடின்றி மணமக்களே தமக்குரியோரைத் தேர்ந்தெடுக்கலாம் என்று உரிமையளிக்கின்றது. 1956 ஆம் ஆண்டு இந்து பரம்பரைச் சட்டம் (Hindu Succession Act) மேற் கூறிய முறையில் மணந்தோர்க்கும் சொத்துரிமை உண்டு என்று வலியுறுத்துகின்றது. மேலும், மண விலக்கு (விவாக ரத்து—Divorce) உரிமையும் அளிக்கப்பட்டது. பெண்களுக்கு ஆண்களைப் போல மகவேற்பு (Adoption) உரிமை அளிக்கப்பட்டுள்ளது. இன்று மணம் என்னும் நிறுவனம் தெய்வீகச் சடங்கு (Religious Secrement) என்ற கொள்கை ஓரளவிற்கு மாறி சமுதாய ஒப்பந்தம் (Social contract) என்ற கொள்கை பரவி வருகின்றது

# 5. தனி மனிதனும் சமுதாயமும்

(INDIVIDUAL AND SOCIETY)

## தனி மனிதனைச் சமுதாயமாக்குதல்

மனிதன் ஒரு சமூக விலங்கு என்றும் கருதப்படுகின்றான். மனிதனுடைய சமூக வியல்பைச் சமுதாய மாக்குதல் (Sociability) என்று கூறப்படுகின்றது. சமூக வியல்பு என்னும் சொல் மனிதன் எத்தகைய இயைபுக் குழுவில் அல்லது நிறுவனத்தில் செயல் படுகின்றான்? அவன் ஒரு சமூகக் குழுவில் அன்றி வாழ வியலாது. ஆதலால் தனிமனிதன் சமூகத்துடன் தொடர்பு கொண்டிருப்பது வியப்புக் குரியதன்று. மனிதன் ஒரு குடும்பம், குழு, அரசு போன்ற வற்றில் இணைந்தே செயல்படுகின்றான். சமுதாயம் தனிமனிதனை சமுதாய உறுப்பினனாக்கப் பெருமளவிற்குத் தொண்டு புரிகின்றது. பொதுவாகச் சமூக இயல்பு தனிமனிதன் இயல்பு ஆகிய இரண்டும் ஒருங்கே வளர்கின்றன. ஒரு குழந்தை பிறந்து சில வாரங்களே ஆயினும் அன்னை சிரித்தால் அம்மழலையும் சிரிக்கின்றது; கடிந்து கொள்ளும்போது அழுகின்றது. பின்னர் நாளடைவில் மற்ற குழந்தைகளுடன் விளையாடுகின்றது. மகிழ்ச்சி, கோபம், இரக்கம் வெறுப்பு, விருப்பு, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை தன்னலம் போன்ற பல பண்புகளை உருவாக்கிக் கொள்ளுகின்றது. ஒருவன் சமூக விலங்காக்கப்படுவதற்கு தன்னைச் சுற்றியுள்ள சமூகச் சூழ்நிலைகளும் துணை புரிகின்றன. மேற்கூறிய அனைத்தும் அவன் பருவம் அடையும் வரை அவனுக்கு ஊன்றுகோலாகத் துணை புரிகின்றன. ஒருவன் பிறந்தது முதல் மிகச் சிறிய குழுவாகிய குடும்பத்திலும், பின்னர் பள்ளியிலும் அதற்குப் பிறகு சமுதாயத் திலும் அவன்தன் தனி இயல்பு, சமூக இயல்பு இவை இரண்டும் இணைந்து அவனைச் சமுதாயத்தின் ஓர் உறுப்பினனாகச் செயல் படச் செய்கின்றது. இவ்வாறு ஒருங்கிணைந்து வளர்ந்த அவனது சமூக இயல்புகளைத்தான் தற்காலத்தில் ' ஆளுமை '(Personality) அல்லது ' நன்னடத்தை ' என்ற சொல்லால் குறிக்கின்றனர்.

மனிதனைச் சமுதாய உறுப்பினனுக்குதலைப் பற்றிச் சில கருத்துக்கள் வெளிப்பட்டுள்ளன. அவை 1. தனிமனிதக் கோட்பாடு (Individualistic theory) 2. குழுமனக் கோட்பாடு (Group mind theory) 3. உயிரி கோட்பாடு (Organismic theory) 4. சமூக ஒப்பந்தக் கோட்பாடு (Social Contract theory) என்பன.

தனிமனிதக் கோட்பாடு மனிதனைப் பற்றிய பல தவருன கருத்துக்களில் ஒன்ருகும். பொதுவாக மனிதன் தனித்து வாழ்ந்து தன் மகிழ்ச்சியை முழுமையாக்க விரும்புகின்ருன். இக் கொள்கையைக் கடைப்பிடித்தோர் அரசியலால் உண்டாக்கப் பட்ட சட்டங்களும் சமூக அமைப்புகளும் தனிமனிதனின் சுதந்திர வாழ்வைப் பாதிக்கும் வகையில் உண்டாக்கப்பட்டவை என்று நம்புகின்றனர்.

மனிதன், இயல்பில் சுயநலமும் விட்டுக்கொடுக்காத மனப்பான்மையும் உடையவன். இக் கருத்து ஒவ்வொருவனும் மற்றவனுக்குப் பகைவன் என்ற கொள்கையை எடுத்துக் காட்டி 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்ற பரந்த நோக்கை மறுக்கின்றது. இத்தகைய நிலையை மாற்றவே மனிதன் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ள முனைந்து சமூகத்தில் வாழத் தொடங்கினன் என்று கூறப்படுகின்றது (Social Contract theory). இக் கொள்கை தாமஸ் ஹாப்ஸ் (Thomas Hobbes), ஜான் லாக் (John Lache), ஜே. ஜே. ரூஸோ (J.J. Rousseau) போன்ரோரால் விரிவாக விளக்கப்படுகின்றது. இவர்கள் வெவ்வேறு வழிகளில் மேற்கூறிய கொள்கையை விளக்கியுள்ளனர். பொதுவாகச் சமுதாயம் தோன்றுவதற்கு முன்பே மனிதன் இயற்கைச் சூழ் நிலையில் வாழ்ந்தனன் என்றும் பின்னர் மற்றவரோடு சேர்ந்து வாழ்வான் வேண்டி ஓர் ஒப்பந்தம் செய்து சமூகத்தை உருவாக்கியதாகவும் கருதப்படுகின்றது.

1. தனிமனிதன், இயற்கை நிலையில் சுற்றுப் புற மக்களுடன் இடையருது பூசலிட்டுக் கொண்டிருந்தான். அவனது வாழ்க்கை தனிமை வாய்ந்ததும், அருவருப்பானதும், விலங்குத் தன்மை யானதும், குறைவானதும் ஆகும் (His life was solitary, nasty, brutish and short). இவ்விழிவான நிலையில் வாழ்ந்து வந்தவன்மற்ற மக்களுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு சமுதாயத்தை உருவாக்கி மனநிறைவுடன் வாழ எண்ணினன். அச்சமே சமுதாயம் உருவாகியதற்கு முக்கிய காரணமாகும். இவ் வொப்பந்தத்தின் அடிப்படையில் மக்களின் விருப்பத்திற்கேற்ப அரசு உருவாக்கப் பட்டது. அரசின் நடவடிக்கைகளுக்கும் தனிமனிதனின்

நடவடிக்கைகளுக்கும் வேற்றுமைகள் இராதென்று கருதப்பட்டது. லாக் (Locke) என்னும் அறிஞர் மனிதன் இலட்சிய சுதந்தரத்தை அனுபவித்து வந்தான். அச் சுதந்தரத்தைக் காக்க அரசுக்கும் சமுதாயத்திற்கும் உரிமை அளிக்கப்பட்டது. இவ்வாறு அளிக்கப் பட்ட உரிமை முழுமையானதன்று, ஏனெனில், வாழ்க்கை, சுதந்திரம் சொத்து போன்ற இயற்கை உரிமைகள் தனிமனித னிடமே இருந்தன. சுருங்கக்கூறின் சமூகத்திலுள்ள எல்லா உரிமை களும் அரசிடமிருந்தே பெறுவதில்லை என்று கூறுகின்றார். ரூஸோ என்னும் அறிஞர், மனிதன் இயற்கை நிலையில் கண்ணிய மிகுந்த காட்டுமிராண்டியாய் இருந்தபோதிலும் மன அமைதியுடன் நன் முறையில் வாழ்ந்து வந்தான் என்று விளக்கியுள்ளார். மக்கட் தொகை பெருகியதால் அவரிடத்தே பூசலும் பொருமையும் தோன்றின எனவே, மனிதன் மற்றையோருடன் கூடி வாழும் ஒப்பந்தம் செய்து கொண்டான். எனினும், அவ்வொப்பந்தம் அவன் தனிச் சுதந்திரத்தை பறிக்கவில்லை. ஒப்பந்தத்தின் விளைவு ஒரு பொது விருப்பம் மக்களிடையே தோன்றலாயிற்று. இவ் விருப்பத்தை மேற்கொண்டு தனிமனிதனும் சுதந்தர முடைய வனாய்த் திகழ்ந்தான்.

2. ரூஸோவின் கருத்து குடியாட்சித் தனிப்போக்கு (Democratic Liberalism), எதேச்சாதிகாரப் போக்கு (Totalitarian Idealism) மற்றும் பல முரண்பட்ட கோட்பாடுகளை உருவாக்கியது.

சமூகம் மனிதனுக்குப் பல நன்மைகளை வழங்கிய போதிலும் அவனது முழு வாழ்க்கையும் சமூகத்திலேயே நிறைவு பெறுவதில்லை. சமூக வாழ்க்கையினூடே மனிதனுடைய சுதந்திரமும் ஆளுமையும் சிறந்த முறையில் இயங்குகின்றன. இக் கோட்பாடுகளை மேன்மேலும் ஆராய்ந்தால் இயற்கை நிலையிலும் கூட மனிதன் சமூகத்திலேயே வாழ்ந்தான் என்பது புலப்படுகின்றது. ஏனெனில், சமூக ஒப்பந்தத்திற்குத் தேவை யான எண்ணங்கள், உணர்ச்சிகள் அவன் உள்ளத்திலேயே உருவாக இயலா. அவை, மற்றவருடன் கொண்ட தொடர்பினாலேயே உருவாகியிருக்கலாம் என்று தோன்றுகின்றது. மேற்கூறிய கோட்பாடுகள் ஏற்க இயலா ; ஏனெனில், மனிதன் ஒருகாலும் தன்னந்தனியே வாழ்ந்திருக்க முடியாததுமன்றி வாழவும் இயலாது.

3. உயிரிக் கோட்பாடு இருவகையாக விளக்கப்படுகிறது. ஒன்று உயிரிக் கோட்பாடு. மற்றையது குழுமனக் கோட்பாடு எனப்படும். இக் கோட்பாடுகளை மேற்கொண்டுள்ள வல்லுநர்கள்

சமூக அரசியல் அமைப்புகள் ஒரு உயிரியைப் போல் பல உறுப்புகளைக் கொண்டு செயலாற்றுவதாகக் கூறுகின்றனர். உயிரியின் பல்வேறு உறுப்புகள் அதற்கு அடங்கிச் செயல்படுவது போலத் தனி மனிதனும் சமூக அமைப்பின் ஒரு உறுப்பினனாக இருந்து செயல்படுகின்றான். இக் கருத்தை ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் (Herbert Spencer), ஸ்பெங்லர் (Spengler) ஆகியோர் மேற்கொண்டுள்ளனர். மற்றும் பல வல்லுநர்கள் சமூகத்தை உயிரினத்துடன் ஒப்பிட்டு உயிரியின் சிறிய அணு அவ்வுயிரியின் உரிமைக்காக வாழ்வது போல் தனி மனிதனும் சமூகத்திற்காகவே செயல்படுகின்றான் என்று கூறுகின்றனர். இவ்வுண்மை ஏற்கப்படுமாயின் மனிதனின் தனித்தன்மை புறக்கணிக்கப்பட்டு சமுகத்திற்காகவே மனிதன் தோற்றுவிக்கப்பட்டான் என்ற நிலையே ஏற்படும். சமூகத்தை ஓர் உயிரிபோல் கருதினாலும் சமூகத்திலுள்ள தனி மனிதனின் உருவில் சமூகம் செயலாற்றுவதில்லை. சமூகத்தை ஓரளவிற்கே உயிரியுடன் ஒப்பிடலாம். சமூகத்தின் அமைப்பிற் கேற்பத் தனிமனிதன் செயல்படுகின்றான். பல மக்கள் பொது எண்ணத்தை மேற்கொண்டே சமூகத்தை உருவாக்கியுள்ளனர். சுருங்கக் கூறின் தனிமனிதனின் போராட்டம், விருப்பம் ஆசை, நம்பிக்கை, அச்சம் போன்றவற்றின் மூலமே சமூகத்தின் குறிக்கோளையும் கோட்பாடுகளையும் செயல்படும் முறையையும் முடிவு செய்கின்றோம். சான்றாகக் குழுவின் ஆர்வம் என்பது அக்குழு உறுப்பினர்களின் ஆர்வத்தைத் தான் குறிக்கும்.

குழு மனக் கோட்பாட்டை சில அறிவியலறிஞர்கள் விளக்கியுள்ளனர். குறிப்பாக, பிளேட்டோ சமூகத்தை "விரிவுபட்ட மனம்" என்று கூறுகின்றார். அரசுதான் இன்றியமையாதது என்றும் தனிமனிதன் அவசிய மற்றவன் என்றும் அவன் அரசின் ஓர் உறுப்பினனாக இயங்குகின்றான் என்றும் அவன் அரசின் விருப்பத்திற்கேற்பத் தன் வாழ்க்கையை மாற்றி அமைத்துக் கொள்ளுகின்றான் என்றும் ஹெகல் கூறுகின்றார்.

ஒவ்வொரு தனி மனிதனும் 'தான்' (Self) என்னும் உணர்வை வெளிப்படுத்துகின்றான். இப் பண்பு தனிமனிதனது உண்மையான நற்குண இயல்பிற்கு மாறுபட்ட ஒரு குறிக்கோளாக விளங்குகின்றது. எனினும் இக் குறிக்கோள் எல்லா மக்களிடையிலும் ஒரே தன்மையாகவும் அடிப்படையில் சமூகச் சார்புடையதாகவும் இருக்கும். இது ஓரளவுக்கு அரசோடு இணைந்தது மாகும். சமூக மனம் என்பது தனி மனித மனத்திலிருந்து வேறுபட்டதென டர்க்கியம் (Durkheim) கூறியுள்ளார்.

சமூக மனம் (Group mind) தனி மனித எண்ணங்களை எல்லாம் உள்ளடக்கியது. மெக்டூகல் (Villiam Mcdougal) என்னும் உளவியல் வல்லுநர், குழு மனம் தனி மனிதரால் உருவாக்கப்பட்ட போதிலும் சமூகத்தில் பொதுமக்களின் நலனுக்காகச் செயலாற்று கின்றது ; சமூகக் குழுவின் தன்மை, நடைமுறை இவற்றை உறுதி செய்வது சமூகக் குழுவே யாகும் ; சமூகம் ஒரு உள்ளம் படைத்த இயக்கம் என்று கூறுகின்றார். குழு மனக் கோட்பாட்டாளர் மனிதன் குழுவின் உறுப்பினன் என்றும் குழு தனிமனிதனின்றிச் செயல்பட இயலாதென்றும் கூறியுள்ளனர்.

## 2 ஆளுமை
## (PERSONALITY)

சமூக இயல், மானிட இயல், சமூக உளவியல், உயிரியல் போன்ற இயல்கள் மனிதனைச் சமுதாய மனிதனுக்கும் குறிக்கோளை மேற்கொண்டுள்ளன. மேற்கூறிய ஒவ்வொரு தனி அறிவியலும் தத்தம் பங்கை அள்ளிக் கொடுத்து மற்ற அறிவியல்களிலிருந்தும் சிற்சிலவற்றை ஏற்கின்றன. மனிதனைச் சமுதாயமாக்குதல் (Socialization) ஒரு விந்தை என்றே கூறலாம். எனினும் இதை நாம் ஓரளவிற்கு உணரக்கூடும். மனிதனைச் சமுதாய உறுப்பின னுக்கக் காரணமாவது மரபொப்புத் திறனு (Heredity), சுற்றுப் புறச் சூழ்நிலையா என்ற கேள்வி எழுகின்றது. மனிதன் மரபொப்புத் திறன் சூழ்நிலை ஆகிய இரண்டையும் ஒருங்கே பெற்று உருவாகி யுள்ளான். மரபொப்புத்திறன் அவனுடைய உயிரித் தன்மைகளை வெளிப்படுத்துகின்றது. சுற்றுப்புறச் சூழ்நிலை மனிதனின் அறிவு, ஒருவரோடொருவர் கொள்ளுகின்ற தொடர்பு, பழகிய முறைகள் போன்றவை சமூகப் பண்பாடு என்று சமூகவியலினுல் கூறப்பட்டு மனிதனை உருவாக்கக் காரணமாகின்றன. மனிதனைச் சமுதாய உறுப்பினனுக்கும் பொறுப்பை (Social psychology) சமூக உளவியல் அல்லது உள சமூகவியல் ஏற்றுக்கொண்டுள்ளது. அடுத்து வரும் அட்டவணை இதனைத் தெளிவுபடுத்துகின்றது.




உயிரியல் இயற்கைச் சூழ்நிலை

சமுதாயப் பண்பாட்டுச் சுற்றுப்புறச் சூழ்நிலை

மரபொப்புத் திறனும் சுற்றுப்புறச் சூழ்நிலையும் ஒன்றுசேர்ந்து மனிதனை உருவாக்குகின்றன. மேலும், மனிதன் மற்றும் பல சூழ்நிலைகட்கு உள்ளாகின்றான். அவை நிலவியல் சூழ்நிலை, பண்பாட்டுச் சூழ்நிலை, பொருளாதாரச் சூழ்நிலை என்பன. ஆதலால், மனிதன் ஓரளவிற்குச் சூழ்நிலைகளால் மாறக்கூடும் என்ற கருத்தும் எழுகின்றது.

மனிதனைச் சமுதாயமாக்குதலின் முக்கிய நோக்கம் தான் என்னும் முனைப்பை (Self or ego) வெளிப்படுத்துதல். இத் தலைப்பிலேயே ஆளுமை உருவெடுக்கின்றது. ஒரு குழவி மற்றவரிடத்தே தன் செய்கைகளின் மூலம் தொடர்பு கொள்ளு கின்றது. இத் தொடர்பு முதன் முதலாக உடலினாலும் மற்றவர்கள் அக் குழந்தைக்கு ஆற்றும் தொண்டினாலும் ஏற்படுகின்றது. இத்தகைய தொடர்பு பழக்கத்தை ஏற்படுத்துகின்றது. சான்று நகம் கடித்தல், விரலைச் சப்புதல் போன்றவை. இத்தகைய செயல்களைத் திரும்பத் திரும்பச் செய்து அவற்றை வளர்த்துக் கொள்ளுகின்றது. மேற்கூறியவை இயல்பாகத் தோன்றிய போதிலும் தன்முனைப்பு ஒரு தனிச் சூழ்நிலையை உண்டாக்குகின்றது. இத்தகைய தன்மை பிறப்புடன் தோன்றுவதில்லை. எனினும் பிறருடன் பழகுவதால்

தோன்றுகின்றது. சான்று ஒரு பெண் ஒரு பல் அல்லது நகம் போன்றவற்றைப் பறிகொடுத்தல் பெரிதாகக் கருத இயலாது. அதே பெண் கால் கை முடமானாலோ மூளைக் கோளாறு ஏற்பட்டாலோ அவளுடைய தன்முனைப்பு பாதிக்கப்படுகின்றது. ஆதலால், உடல் தோற்றம் பாதிக்கப்பட்டால் அது மனத் தோற்றத்தை மாற்றி ஆளுமையைப் பாதிக்கின்றது.

ஜார்ஜ் மீடு (George H. Mead) என்னும் அறிஞர் தன் முனைப்பைப் பற்றி வெகு தெளிவாகக் கூறியுள்ளார். தன்முனைப்பு என்பது தன்னைத் தானே பரிசோதிக்கும், மற்றவர்கள் பரிசீலனை செய்யும் தன்மையைக் கொண்டுள்ளது. இக் கருத்தை அவர், மற்றவர் ஒருவனை எவ்வண்ணம் அறிவர் என்றும் அவன் தன்னைத் தானே அறிந்து கொள்ளும் முறையையும் எடுத்துக்காட்டுகின்றது. இத்தகைய நிலையில் ஒரு குழந்தை மற்றவர்களைப்போல் நடிக்கவோ சிந்திக்கவோ முயல்வது ஒரு விந்தையே. பொதுவாக இரண்டு, மூன்று வயதுக் குழந்தைகள் அன்னை தந்தை, தமக்கை தங்கை என்று அழைத்து விளையாடுவது வியப்புக்குரியவையே. இப் பருவக் குழந்தைகள் பொம்மைகளை வைத்துக்கொண்டு அப் பொம்மைகளுக்கு உடை, அணிகலன் அணிவித்து தங்களை தம் தாய் பராமரிப்பதுபோல விளையாடுவது தன்முனைப்பு வளர்ச்சியுறுவதை எடுத்துக்காட்டுகின்றது. இப் பருவத்திலேயே குழந்தையின் ஒழுக்கமுறை, பொறுப்புதான் ஓரளவிற்கு விரும்புகின்ற வேலை வாய்ப்பு முதலியவற்றை எடுத்துக்காட்டுகின்றன. மேலும் தன் முனைப்பு வளர்வது 'நான்', 'நீ' என்னும் பொறுப்பை ஏற்று அதற்கேற்ப நடந்து கொள்வது. தன்முனைப்பு ஓரளவு வளர்ச்சியுற்று மற்றவர்களுடன் தொடர்பு கொண்டு செயல்படுகின்றது. ஆளுமை அல்லது தன்முனைப்பு மாறியும் சூழ்நிலைக் கேற்ப ஒத்துப் போதலும் மாறான சூழ்நிலையில் முரண்பாட்டுடன் வெளி வருதலையும் காணக்கூடும்.

ஒரு தனி மனிதனைச் சமுதாய மாக்குதல் எளிதன்று. அதனை அறிவியல் தொடர்பான முறைகளில் புரிந்து கொள்ளுதலும் மிக அரிது. ஆதலால் ஆளுமையின்மை (Personality disintegration) ஆளுமையை மிகத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றது. சான்று உள நிலை குழம்பிய ஒருவனை விளக்குவது எளிது. உளவியல் வல்லுநர்கள் ஆளுமைத் தொகுப்பை விளக்க உடலமைப்பு, உள்ளவமைப்பு, சமுதாயச் சூழ்நிலை போன்றவற்றை மேற் கொண்டு விளக்க முயன்றும் விளக்க முறைகளில் இன்னலுற்றுக் குழம்புகின்றனர். மேலும், அவர்கள் ஒவ்வொரு தனி மனிதனுடைய ஆளுமையை வேறுபடுத்திக் காட்டி ஒரு பொது ஆளுமைக் கோட்பாட்டை உறுதிப்படுத்த முற்படுகின்றனர்.

ஆதலால், ஆளுமைத் தன்மைகளை எடுத்து விளக்குகின்றனரே யன்றி முழு ஆளுமையை விளக்க இயலுவதில்லை. மாருக உள-ஆய்வாளர் (Psycho Analysts) கல்வி உளவியல் வல்லுநர் களைக் காட்டிலும் புரிந்துகொள்ளக்கூடிய அளவிற்கு ஆளுமை யைப் பற்றிய விளக்கம் தந்துள்ளனர்.

ஆளுமை, உளநிலை மாறுதல்கள் போன்றவற்றைக் குறிக் கின்றது. இயல்பூக்கம், சுற்றுப்புறச் சூழ்நிலை ஆகிய இவ்விரண்டை யும் ஒன்றுசேர்த்து மனிதனின் ஆளுமையை வெளிப்படுத்து கின்றது தன் முனைப்பை அல்லது ஆளுமையைத் தொகுப்பது எளிதன்று. ஏனெனில் சுற்றுப்புறச் சூழ்நிலையிலுள்ள பல தன்மை கள் குறுக்கிடுகின்றன. ஒரு மனிதனுக்குச் சுற்றுப்புறச் சூழ்நிலை சரியான முறையில் அமையாவிடின், அந்நிலையை ஓரளவு தவிர்த் தோ பயன்படுத்தியோ வாழ நேரிடும். ஆளுமையை உருவாக்கு வது கீழ்வருவன. 1. உயிருடனிருத்தல், 2. நினைவாற்றல், 3. முடிவு, 4. கோட்பாடுகள், 5. தகுதிகள்.

**உயிருடனிருத்தல்** உடல், உள்ளம் ஆகிய இரண்டிற்கும் வலிமையளித்து ஆளுமையை உண்டாக்குகின்றது. **நினைவு** மனிதனின் இறந்த கால, நிகழ்கால, எதிர்கால வாழ்க்கைகளை ஆளுமையுடன் ஒப்பிட்டு விளக்குகின்றது. பொதுவாக மனிதனின் நினைவு தன்னைத் தானே பாதிக்கப்படுவதுமன்றி குழப்பத்தி லிருந்து வெளியேற வழிப்படுத்துகின்றது. ஒரு தனி மனிதனின் எண்ணங்கள், இயல்பூக்கங்கள் அவன் வாழ்ந்த காலத்தை மட்டுமே குறிப்பதுமல்லாமல் நிகழ் காலத்தையும் குறிக்கின்றது. அவன் எடுக்கும் சிற்சில முடிவுகள் நிகழ் காலத்தில் பயன் தருமாயின் அவன் அதைப் பற்றோடு பின்பற்றுவான். கோட் பாடுகள் அவன் எதிர்நோக்கும் முடிவுகளை எடுத்துக்காட்டுகின்றன. சிற்சில கோட்பாடுகள் பயனற்றவையாய் விளங்குமாயின் அவற்றைப் புறக்கணிப்பான். ஒருவன் ஆளுமை அவனுடைய சமுதாயத் தகுதிக் கேற்ப மாற்றம் பெறுகின்றது. சான்ருக ஒருவன் பல்கலைக் கழகத் துணை வேந்தராகத் தேர்ந்தெடுக்கப் படுவனுயின் அவன் தன் ஆளுமையை அதற்கேற்ப மாற்றிக் கொள்ள வேண்டிய நிலை ஏற்படும். ஒருவனின் ஆளுமை அவன் தகுதி, அறிவுக் கூர்மை, உடல் தோற்றம் மற்றும் பல தன்மைகளைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது.

## சமுதாயத்தில் தனிமனிதனின் தகுநிலையும் வாழ்க்கைப் பங்கும்
## (Status and role of Individual in Society)

மனித சமுதாயத்தில் தகுநிலை (Status) முக்கிய பங்கேற்றுள்ளது. தகுதி அல்லது தகுநிலை என்பதை ஒருவன் ஏற்று வாழ்க்கையில் பங்கு (Role) பெற்று இயங்குகின்றான். தகுதி என்பது ஒரு தனி மனிதனுக்குச் சமுதாயத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தைக் கொடுக்கின்றது. சான்று: ஆசிரியர் மாணவர் என்பன. தகுதியை ஏற்காமலும் தகுதி இல்லாமலும் ஒரு மனிதன் வாழ வியலாது.

தகுதி இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1. இயற்கையாக அமைந்த தகுதி (Acquired Status). 2. செயற்கையால் கொடுக்கப்பட்ட தகுதி (Ascribed Status). சான்று ஒருபெண் ஒரு குடும்பத்தில் மூத்த பெண்ணாக இருப்பது இயற்கையாக அமைந்த தகுதி. அப்பெண் மணம் புரிந்து மற்றொரு குடும்பத்தினரால் மருமகளாக ஏற்றுக்கொள்ளப்படுவது செயற்கையால் நல்கப்பட்ட தகுதி. ஒரு மனிதன் வாழ்க்கையில் தகுநிலையை ஏற்று பல துறைகளிலும் பங்கு கொள்கின்றான். பொதுவாகத் தகுநிலையை உயர்ந்த, தாழ்ந்த என்ற சொற்களால் விளக்குகின்றோம். சமுதாயம், சமுதாய நட்பு, உறவு, ஊடாட்டம் இவற்றைக் கொண்டுள்ளதால் தகுநிலை பெரும்பாலும் மனிதனின் செயல்முறை ஊடாட்டம் ஆகிய இவற்றைப் பொருத்துள்ளது. ஒரு வகுப்பைச் சார்ந்த மக்கள் மேல்தகுதி நிலை (High Social Status) கொண்டுள்ளவர் என்றும் கீழ்ச் சாதியினர் கீழ்த் தகுநிலை கொண்டவர் (Low Social Status) என்றும் கூறப்பட்டு அதற்கேற்பச் சமுதாய மதிப்பைப் பெறுகின்றனர். சமுதாயத் தகுநிலை மதிப்புக்குரிய சில சின்னங்களையும் செயல்படும் வகைகளையும் மேற்கொண்டுள்ளது. சான்று: ஒரு கல்லூரி முதல்வரின் தகுநிலை அக் கல்லூரியின் ஆசிரியர்கள் மாணவர்கள் ஆகியோரை வேறுபடுத்திக் காட்டுகின்றது. இத் தகுநிலையை விளக்குவது ஆசிரியர் மாணவர்கள் மதிப்புடனும் மரியாதையுடனும் நடப்பதாகும். தனிமனிதனின் மதிப்பு, பெருமை போன்றவை தான் செயல்படும் முறையினால் சமுதாயத்தில் அளவிடப்படுகின்றது.

> ' பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
> கருமமே கட்டளைக் கல் " என்னும் வள்ளுவரது

கூற்று இதனை மிகத் தெளிவாக விளக்குகின்றது. மேலும் ஒரு குடும்பத்தில் கணவன் மனைவி தகுநிலை ஏற்கப்பட்டு நம்

சமுதாயத்தில் எல்லாக் குடும்பங்களிலும் செயல்முறையில் இருந்து வருகின்றது. இத்தகைய தகுதியை குடும்பத் தகுதியென்றும் சமுதாயத்தினரால் கொடுக்கப்பட்ட தகுதியை ஏற்றுக்கொண்ட தகுதியென்றும் கூறலாம். பாழ்பட்டு நின்ற தாமோர்,பாரத தேசந் தன்னை, வாழ்விக்க வந்த மகாத்மா என்று பாரதியாரால் போற்றப் படுகின்ற காந்தியடிகளுக்கு 'மகாத்மா' என்ற பட்டம் அவருடைய வாய்மை, அன்பு, கருணை ஆகிய பண்புகளைப் போற்றி பாரத மக்களால் வழங்கப்பட்டதாகும். இதேபோல ஒரு ஏழைச் சிறுவன் தன் விடா முயற்சியினால் கல்வியில் உயர்ந்து சமுதாய மதிப்பைப் பெற்றால் அத் தகுநிலை அவனையும் அக் குடும்பத்தினரையும் சாரும். பொதுவாகத் தகுநிலை ஒரு தனிமனிதனின் பொருளாதாரம் அல்லது இயற்கையாக அமைந்த தகுதியைக் குறிப்பதுமன்றி அம் மனிதனின் சமூகத் தகுநிலையையும் குறிப்பதாகும். ஒருவனுடைய தகுநிலை அவன் நடத்தைக்கேற்ப மாறக்கூடும். சமுதாயத்தில் பலதரப்பட்ட தகுநிலைகள் இருப்பது சமுதாய மக்களை அவர்தம் தொழில்களுக்கேற்பப் பிரித்தலாலாகும். கிங்ஸ்லி டேவிஸ் (Kingsley Davis) சமுதாய வேறுபாடுகள் தகுதி, தரமுற்ற மக்களுக்கு வேலைவாய்ப்பளித்தற்காகவே தோற்றுவிக்கப்பட்ட தென்று கூறுகின்றார். ஒவ்வொரு சமுதாயத்திலும் மதிப்பு தகுதி போன்றவற்றின் மூலம் மக்கள் வேறுபடுத்தப்படுகின்றனர். ஓரளவிற்குச் சமுதாயச் சட்ட திட்டங்களும் இவை போன்ற வற்றிற்கு இடமளிக்கின்றன. ஆதலால், ஒரு தனி மனிதன் தன் தகுநிலையால் பல தன்மைகளைப் பெற்று சமுதாய அமைப்பிற்குள் வாழ்கின்றான்.

# 6. சமூகக் குழுக்கள்

(SOCIAL GROUPS)

## 1. முதற்குழுவும் இரண்டாங் குழுவும்
## (Primary and Secondary Groups)

மனிதன் பலதரப்பட்ட குழுக்களில் உட்பட்டு வாழ்கின்றன். அவை மனிதக் குழுக்கள் எனக் கூறப்பட்டு இரண்டு பெரும் பிரிவு களாகப் பிரிக்கப்படும். 1. நெருங்கிய தொடர்பு கொண்ட சிறு குழுக்கள், நெருங்கிய தொடர்பற்ற பெருங்குழுக்கள். கூலி (C. H. Cooley) என்பவர் அவர்தம் சமுதாய அமைப்பு (Social organization) என்னும் நூலில் நெருங்கிய தொடர்புற்ற குழுக்கள், நெருங்கிய தொடர்பற்ற உறவு கொண்ட குழுக்கள் எனப் பகுத் துள்ளார். பொதுவாக, இவ்விரு பிரிவுகளை முதற்குழு இரண்டாங் குழு எனக் கூறுகின்றோம். முதற்குழு நேருக்கு நேர் உறவு, ஊடாட்டம், ஒத்துழைப்பு ஆகிய இவற்றின் மூலம் விளக்கப் படுகின்றது. மேற்கூறிய தன்மைகள், ஒரு தனிமனிதனின் சமுதாயத் தன்மையை எடுத்துக்காட்டி அவனுடைய சமுதாய வாழ்க்கைக்கு இன்றியமையாதவை என்பதையும் புலப்படுத்து கின்றன. முதற்குழுவை 'நாம்' (we) என்ற சொல்லின் மூலம் அதன் முழுமைத் தன்மையை விளக்கலாம். முதற்குழு கருணை, ஒருவரை ஒருவர் சார்ந்துள்ள தன்மை முதலியவற்றை எடுத்துக்காட்டு கின்றது. குடும்பம் விளையாட்டுக்குழு, அண்மைக்குழு (Neighbour-hood) ஆகிய இவை 'நேருக்குநேர் உறவாடும்' (face to face association) போக்கை மேற்கொண்டு கருணை, ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளுதல் போன்றவற்றை வெளிப்படுத்துகின்றது. மேற்கூறிய இவை முதற் குழுவை மட்டுமல்லாமல் இரண்டாம் குழுவையும் சார்ந்தவையாகும். சான்றாக இரண்டு ஆசிரியர்கள் தொடர்பின்றி வெவ்வேறு நாட்டில் வாழ்ந்த போதிலும் அவர்க ளிடத்து ஒரே தன்மையவாகிய எண்ணம், நோக்கம் முதலியவை

இருக்கக்கூடும். மேலும், தமிழ் இலக்கியங்களில் மிக உயர்வாகப் பேசப்படும் பிசிராந்தையார் கோப்பெருஞ் சோழனின் நட்பையும் கூறலாம். முதற்குழுவின் தன்மையை விளக்க கீழ்வரும் குறிப்புக்கள் துணைபுரிகின்றன. 1. முதன்மை வாய்ந்த உறவு முறை. 2. அத்தகைய உறவு முறை பல உள்ளுறவுத் தன்மைகளைக் கொண்டுள்ளது. 3. இத்தகைய உறவுகள் சிற்சில குழுக்களிலேயே காணப்படும். 4. மேற்கூறிய தன்மைகளடங்கிய தனிக் குழுக்களில் இயல்பாகவே நெருங்கிய உறவுகள் இருக்கக்கூடும்.

முதன்மை வாய்ந்த உறவாவது சில இன்றியமையாத தன்மைகளைத் தன்னுள் கொண்டுள்ளது. 1. இவ்வுறுப்பினர்களிடையே உள்ள மிகநெருங்கியநெருக்கம் (Face to face physical proximity). 2. குழுவின் சிறு தோற்றம் (Smallness of the group). 3. நீடித்த ஒப்பந்தம் (Durability of the Bond) ஆகியவை. மேற்கூறிய விதிகளை நெருங்கிய தொடர்பு, சிறிய தோற்றம், தொடர்ச்சி ஆகிய இவை சுருக்கமாக விளக்குகின்றன. மக்கள் நேருக்குநேர் பார்த்துப் பழகி உறவாடும் தன்மை நெருங்கிய உறவுடைய தன்மை என்று கூறப்படுகின்றது. இவ்வுறவு உறுப்பினர்களிடையே உள்ள எண்ணங்கள், நோக்கங்கள், உணர்ச்சிக் கருத்து போன்றவற்றை ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொள்ளப் பயன்படுகின்றது. நெருங்கிய தொடர்பு உறுப்பினர்களிடையே உள்ள நல்லெண்ணம், அவரிடையே உள்ள அறிமுகம் போன்றவற்றை விளக்குகின்றது. நெருங்கிய கூட்டுறவின் புறச் சின்னங்கள் முத்தமிடுதல், விளையாடுதல், நெருங்கிய பயணம், இணைந்து படித்தல், சேர்ந்துண்ணல், ஒன்றாகக் கூடிவாழ்தல், ஆண் பெண் சேர்க்கை என்பன. இயல்பாக இட வ்கையில் அண்மை, முதற் குழுவைப் பெருக்க பலவகையில் துணைபுரிகின்றது. அவ்வுறவை வலிமைப்படுத்த சூழ்நிலை வழி வகுக்கின்றது. சான்றாக குடும்பத்தில் அவ்வுறவு நீடித்து மேன்மையடைந்துள்ளது. ஆனால், அலுவலகத்தில் அத் தன்மையைக் காணவியலாது. சுருங்கக் கூறின் நெருங்கிய தொடர்பு எல்லாக் குழுமங்களிலும் இருத்தல் இயலாது.

முதன்மைக் குழு ஒரு சிறிய குழுவாக இருத்தல் மிக அவசியம். ஏனெனில் அதனுள் இருக்கும் உறுப்பினர்கள் நெருங்கிய தொடர்புடையவர்கள். எந்த அளவுக்குக் குழு சிறியதாக அமைகின்றதோ அந்த அளவுக்கு நெருங்கிய தொடர்பு இருக்கும். ஒரு குழு விரிவடையுமாயின் தொடர்பு குறைய நேரிடும். சான்றாக, ஒரு குழுவில் அல்லது குடும்பத்தில் உள்ள உறுப்பினர்கள் தம்மிடையே உள்ள உறவை எடுத்துக்காட்ட வியலும். அதற்கு மாறாகப் பல

குடும்பங்கள் ஒன்றுசேர்ந்து இயங்குமாயின் முதற் குழுவின் தன்மைகள் விடுபட்டு இரண்டாங் குழுவின் தன்மைகள் செயல் படத் தொடங்கும்.

மிக நெருங்கிய தொடர்பு, மன்றத்திலுள்ள உறுப்பினர்களின் நீடித்த உறவு, அவர்தம் மிடையே உள்ள அடிக்கடி கூடிப் பழகும் தன்மை, அத் தன்மையின் தீவிரம் முதலியவற்றைச் சார்ந்துள்ளது. அவரிடையே உள்ள சமுதாய நட்பு போன்றவை பின்னிப் பிணைந்துள்ள பழக்க வழக்கங்களின் விரிவுறுதலாகும். மேற்கூறிய அனைத்தும் மக்களின் வாழ்க்கையின் வழிமுறைகளாகும். சான்ருக ஒரு கணவன் மனைவி பத்து ஆண்டுகள் மாறுபாடுற்று வாழ்ந்த போதிலும் ஒருவரை ஒருவர் விட்டு விலக இயலாது.

மேற்கூறிய விதிகளிலிருந்து நெருங்கிய தொடர்பு, சிறிய தோற்றம், மேலும் நீடித்த காலம் ஆகிய இவை முதற் குழுவின் இன்றியமையாத் தன்மைகளை விளக்குகின்றன. முதற் குழுவின் தன்மைகள் அக் குழுவின் நோக்கத்தை எடுத்து விளக்குகின்றன. முதன்மையாக குழுவிலுள்ள உறுப்பினர்களின் உறவு முடிவிற்கு ஒரு வழியாகக் கொண்டு ஏற்கப்படுவதில்லை (Means to an end). அவை, இயற்கையாகவே ஏற்றுக்கொள்ளப்பட்டவை முதற் குழுவின் உறவு ஒப்பந்தப்படுத்தப்பட்டதன்று (Non-Contractual), பொருளாதாரத் தொடர்புற்றதன்று (Non-Economic), அரசியல் சார்புடையதன்று (Non-Political), மேலும், குறிப்பாகப் பயிலப் பட்டது மன்று. இவற்றிற்கு மாருக முதற்குழு தனிப்பட்ட (Personal) தும் தாமாகவே தோன்றிய (Spontaneous) தும் ஆர்வம் மேலிட்ட (Sentimental) தும் உள்ளடங்கிய (Inclusive) தும் ஆகும். முதற்குழுவிலுள்ள உறுப்பினர்கள் ஒரே மனப்பான்மையை மேற் கொண்டு ஒரே முடிவைப் பெற முயல்வதாகும். அஃதாவது அக் குழுவினர் உலகை ஒருவித கண்ணோட்டத்தில் பார்வையிடுவர். அக் குழுவிலுள்ள ஒவ்வொருவரும் மற்றவர்களுடைய நலனையும் மேற்கொள்வர். சுருங்கக் கூறின் குழுவின் நலமே உறுப்பினர் களின் நலமாகும். ஒரு உறுப்பினன் மற்ருெரு உறுப்பினனின் நலனைப் பேணுதல் குழு நலத்திற்குப் பாடுபடுவதாகக் கருதப்படும். சான்ருக, ஒரு தாய் தன் குழந்தையின் உடல்நலத்திற்காகத் தன் உடல்நலத்தைப் பொருட்படுத்தாமல் இருத்தல். மேற்கூறிய சான்று தாயின் பெருந்தன்மையாகிய விட்டுக் கொடுக்கும் மனப் பான்மை, குழந்தையைக் கருணையுடன் புரிந்துகொண்டு செயல் படுதல், அவையாவும் அவளுக்கு ஒருவித மகிழ்ச்சியைக் கொடுத்தல் போன்றவற்றை எடுத்து விளக்குகின்றது.

"பால் நினைந்தூட்டும் தாய்" என்று மாணிக்கவாசகரும் தாயை உயர்த்துகின்றுர். முதற் குழுவிலுள்ள உறுப்பினர்களின் இணைந்த ஆளுமையை இது வெளிப்படுத்துகின்றது

முதற்குழு உறவு, அக்குழு உறுப்பினர்களின் உள்ளார்ந்த மகிழ்ச்சியைத் தாமாகவே வெளிப்படுத்துகின்றது சான்ருக, ஒரு அன்புள்ள கணவன் மனைவியர் தங்களிடையே கவர்ச்சியுற்று மையல் கொண்டு, சிக்கல்பட்டு இருப்பராயின் மற்றவர்களுடைய கண்ணேட்டங்கட்கு அஞ்சுவதில்லை. ஏனெனில், அவரிடையே உள்ள உறவு (அ) தொடர்பு, தாமாகவே உண்டானதுமன்றி மற்றவர்களால் புகுத்தப்படாததுமாகும்.

முதன்மைக்குழு உறவு, குழுவில் உள்ளவரைதான் நீடித்து நிற்கும். ஏனெனில் குழு உறுப்பினர்களின் உறவு மாற்ற வியலாது. மேலும், அதை இரட்டிக்கவும் இயலாது. சான்ருக, ஒரு வணிக நிலையத்திலிருந்து ஒரு பொருளைப் பெறுவது பொருளாதார உறவன்றிச் சமூக உறவாகாது. முதற் குழுவின் உறவு அக் குழுவின் உறுப்பினர்களால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. அக் குழு உறுப்பினர்கள் அக் குழுவிற்கு உண்மை ஊழியர்களாக இருத்தல் வேண்டும்.

முதன்மைக் குழுவின் உறுப்பினர்கள் அக் குழுவின் விதிகளால் கட்டுப்படுத்தப்படுகின்றனர். சான்று குடும்பம், அண்மையில் வாழுநர். அவர்கட்குத் தகுதி யளிக்கப்பட்டு ஓரளவிற்கு அவர் தம் உரிமைகளும் கட்டுப்படுத்தப்படுகின்றன. எனினும், கட்டுப் படுத்தப்பட்ட உரிமைகள் அவர்களால் தாமாகவே ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. சான்ருக, திருமண உறவு.

முதன்மைக் குழுவின் முக்கிய தன்மைகளையும் இயல்புகளையும் ஓரளவிற்கு உறுதியானவையாகக் கருத வியலாது. சிற்சில சமயங்களில் முதற் குழுவின் பிணைப்பு நீடித்து நிற்காமல் பகை, முரண்பாடு முதலியவற்றை வெளிப்படுத்தக்கூடும். முதற் குழுவின் எல்லா தன்மைகளையும் ஒருங்கே ஏற்கக்கூடிய ஒரு குழு இருப்பின் அக் குழு சமுதாய அமைப்பில் இடம் பெற வியலாது. சான்று : இரு நண்பர்களிடையே அமைந்த உறவு. முதற் குழுவின் அமைப்பு—நெருங்கிய தொடர்பு, நீடித்த காலம், சிறிய தோற்றம் இவை அக் குழுவின் அடிப்படைத் தத்துவங்களை வெளிப்படுத்து கின்றன. மேலும், சமூக வரலாறு மனிதன் ஓரளவிற்கு முதற் குழுவில்தான் இருந்து வந்தான் என்று விளக்குகின்றது. பெரும் பாலும் தற்காலச் சமுதாயத்தில்தான் இரண்டாங் குழுவின்

(Secondary group) தொடர்பு சமுதாயத்தில் பரவியுள்ளதைக் காண்கின்றோம்.

இரண்டாங் குழு முதற் குழுவிற்கு முரணானது. அக்குழுவைத் தோற்றுவித்தற்குரிய காரணங்கள் முதற் குழுவின் முரணான காரணங்களே. இரண்டாங் குழு பரந்த நிலப்பரப்பை அடிப்படையாகக் கொண்டு பலதரப்பட்ட மக்களை உள்ளடக்கிச் செயல் புரிகின்றது. அக் குழுவில் உள்ள மக்கள் ஒருவரை ஒருவர் நேரடியாக அறிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை. இரண்டாங் குழு, பல காலம் (Long duration) நீடித்திருக்கக் கூடும். எனினும் அக் குழுவிலுள்ள உறுப்பினர்களின் தொடர்பு மிகக் குறுகிய காலத்தில் மறையக் கூடும். குழு உறுப்பினர்களின் தொடர்பு, உறவு இவை ஒரு பொது நோக்கு ஆகாது. இவ் வகையில் இரண்டாங்குழுவை விளக்குவதும் ஓரளவிற்குப் பொருந்தாது. ஏனெனில், ஒரு குழு செயல்பட அக் குழுவிற்கு அமைப்பு, செயல்முறை ஆகிய இவை இரண்டும் மிக அவசியம். ஓரளவிற்கு உறுப்பினர்கள் ஒருவரை ஒருவர் புரிந்து, உணர்ந்து கொண்டு செயல்பட முற்பட வேண்டும். சான்று : உலகிலுள்ள ஆயிரக்கணக்கான மக்கள் முதற் குழுவின் தன்மைகளைக் கொண்டுள்ள போதிலும் அவர்தம் உறவு இரண்டாங் குழுவைச் சார்ந்துள்ளது இவ்வுண்மையை இராணுவம், அறிவியல் மன்றம், தொழிலாளர் சங்கம் ஆகியவை உலகின் பல நாடுகளில் இருப்பதன் மூலம் காணுகின்றோம். ஆதலால், இரண்டாம் குழுவிற்கும் முதற் குழுவின் ஒரு சில தன்மைகள் இன்றியமையாதவை.

முதற்குழு, இரண்டாங்குழு ஆகிய இவற்றின் வேறுபாடு குழுக்களைச் சார்ந்ததாகா. குழுவிலுள்ள உறுப்பினர்களின் நட்பு, உறவைக் கொண்டு அமைக்கப் பட்டுள்ளது. சான்றாக இந்திய நாட்டு மக்கள் இரண்டாங் குழுவைச் சார்ந்தவர்கள். ஏனெனில் எல்லா மக்களிடையேயும் நெருங்கிய, நேருக்கு நேரான ஊடாட்டம் இருப்பதில்லை. ஒவ்வொரு மாநிலத்திலுள்ள மக்களும் குடும்பம், சிற்றூர், நகரம் போன்றவற்றை முதன்மையாகக் கருதி நாட்டுக் குடிமகன் 'என்ற கொள்கையை மேற்கொண்டுள்ளனர். இரண்டாங்குழு, நாட்டுப் பற்று என்ற பண்பை எடுத்துக் காட்டுகின்றது. நாட்டின் உறுப்பினராக இருந்து அதன் நலனிற்காகப் பாடுபட்டுத் தியாகம் செய்து செயல்பட வேண்டும். குடும்பம் முதற்குழுவின் தன்மைகளைக் கொண்டு விளங்குவது போல் இரண்டாங்குழு அரசியல் தலைவர்கள், அதிகாரிகள் இவர்களின் மூலம் குழுத் தன்மையை எடுத்துக் காட்டுகின்றது. ஒரு பரந்த நாட்டின் குடிமகன் தன் உரிமை, எண்ணம் ஆகியவற்றை

மறைமுகமாக செய்தித்தாள், வானொலி, வாக்களிப்பு, தலைவர்களை முழுமையாகப் பின்பற்றுதல் ஆகியவற்றின் மூலம் வெளிப்படுத்துகின்றான். இத்தகு குழுக்கள், தற்கால மனித சமுதாய வரலாற்றின் ஒரு முக்கியக் கட்டமாகக் கருதக் கூடும். இரண்டாங் குழு மனிதனை எவ்வாறு கட்டுப்படுத்துகின்றது என்பதை இவ்வண்ணம் வெளிப்படுத்துகின்றது.

மேற்கூறிய விளக்கம் இரண்டாங்குழு உறுப்பினர்களின் தொடர்பை நன்கு வெளிப்படுத்துகின்றது. இரண்டாங்குழு உறுப்பினர்கள் நேருக்கு நேர் தொடர்பு கொண்டிருந்த போதும் அது தாமரை இலைத்தண்ணீர் போலத் தொட்டும் தொடாமலும் பட்டும் படாமலும் உள்ளது (Touch-and-go variety). சான்று, பயணிகளும் பேருந்து நடத்துநரும் (Conductor) வங்கியில் பணம் கொடுக்கும் பொருளாளரும் பொருளைப் பெறும் உறுப்பினரும். மேலும், இரண்டாங்குழுவின் தொடர்பும் நட்பும், போக்குவரத்துச் சாதனங்களாகிய தொலை பேசி, தந்தி மூலம் செயல்படுகின்றது. சான்று உயிர் ஒப்பந்த அலுவலரும் உயிர் ஒப்பந்தம் செய்து கொள்பவரும். பெரும்பாலும் தற்காலச் சமுதாயத்தில் நேரடித் தொடர்பற்ற முறையில் செயல்களைச் செய்து முடிக்கக் கூடும். இரண்டாங்குழு நேரடித் தொடர்பு, ஒப்பந்தம் ஆகிய இவற்றை வற்புறுத்துவதில்லை. பொதுவாக மக்களின் அறிவுத்திறன், நேர்மை, நன்னடத்தை இவற்றை மேற்கொண்டு செயல்படுகின்றது. இரண்டாங் குழுத் தொடர்பு மக்களின் அறிவுத்திறன், பகுத்தறிவின் தன்மை ஆகிய இவற்றை மேற்கொண்டு தொழில்துறை நுணுக்கம் (Technological), பொருளாதார அரசியல் தொடர்பான முடிவுகள் மேற்கொள்ளப்படுகின்றன. சான்று : ஒப்பந்தம். ஒப்பந்தத்தை ஏற்கும் இரு திறத்தாரும் ஒருவகைத் தொடர்பு, நட்பு ஆகிய இவையன்றிச் செயல்படக் கூடும். ஒப்பந்தத்தில் அவரவர் காணிக்கை, அவரவர்க்குக் கொடுக்க வேண்டிய பொருள் அவை எச்சமயத்தில் எந்த நிலையில் கொடுக்க வேண்டுமென்ற எல்லாவிதிகளும் இணைக்கப்பட்டிருக்கும். ஒப்பந்தத்தின் பொருட்டு பூசல் ஏற்படுமாயின் அதைச் சட்டமே முடிவு செய்யக் கூடும். ஒப்பந்தத்தில் காணப்படாத உள்ளெண்ணம் போன்றவைகட்கு பொருளில்லை. பொதுவாக ஒப்பந்தம் செய்து கொள்வோர் ஒருவருக்கொருவர் அறிமுகம் இல்லாமலும் ஒரே வகுப்பினர் அல்லாதவராகவும், ஒரே சமயக்கொள்கை அற்றவராகவும்,ஒருவருக்கொருவர் பகைவராகவும் இருக்கக் கூடும். சுருங்கக் கூறின் ஒப்பந்தம் செய்து கொள்வோர் அறிவுத்திறனையும் பகுத்தறிவையும் மட்டுமே பயன்படுத்த வேண்டும்.

அமைப்பு வாய்ந்த ஒரு குழு ஒப்பந்தத்தின் மூலம் நெடுங் காலம் இயங்க வியலாது. சான்று தொழிலாளர் சங்கம், பல்கலைக் கழகம் என்பன. இவற்றின் உறுப்பினர்கள் இக்குழுக்களின் அமைப்பை ஏற்றும் அதே வேளையில் அதை உயர்த்தும் வகையையும் வெளிப்படுத்த வேண்டும். சுருங்கக் கூறின் ஒருவன் எக் குழுவில் இருந்தாலும் ஓரளவு உண்மை ஊழியனாக இருத்தல் வேண்டும். உண்மை, நேர்மை, நாட்டுப்பற்று போன்றவை ஒருவரை ஒருவர் விரும்புவதாலும், நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதாலும் தோன்றுகின்றன. ஆதலால், முதற்குழு இரண்டாங் குழுவிற்கு அவசியம். ஒருவன் முதற்குழுவிலிருந்து செயல்புரிந்து இரண்டாங்குழுவின் தன்மையாகிய உரிமை, நீதி, அன்பு போன்றவற்றைப் பெறுகின்றான். பொதுவாக 'நாம்'(We) என்னும் சொல் முதற்குழு, இரண்டாங்குழு ஆகிய இரண்டையும் குறிப்பிடு கின்றது. குடும்பம் சமுதாயத்திற்கு அடிக்கல் நாட்டுகின்றது. விளையாட்டுக் குழு பள்ளி, அண்மைக்குழு முதலியவை எதிர்கால மக்களை உருவாக்குகின்றன. முதற் குழுவின்றி இரண்டாங்குழு வேரற்ற ஒரு மரத்தைப்போல் அதன் பளுவை தாங்க வியலாமல் அழியநேரிடும். முதற்குழு இரண்டாங்குழு இவை இரண்டும் ஒன்று பட்டுச் செயல்படுதல் வேண்டும். எனினும், முதற்குழுவின் தன்மை குறுகிய, நெருங்கிய எண்ணம், நோக்கங்களை மேற் கொண்டுள்ளது. இரண்டாங்குழு பரந்த விரிந்த எண்ணங்களை மேற்கொண்டுள்ளது. சான்று ஒரு நாட்டுத் தலைவனை நாம் நேரில் காணவும் பேசவும் முடியாவிட்டாலும் அத் தலைவனை வானொலி, தொலைக் காட்சி (Television) செய்தித்தாள் ஆகிய வற்றின் மூலம் தெரிந்துகொள்ளலாம். இரண்டாங்குழு இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகிய தற்காலத்தில் பரந்த சமுதாய ஒற்றுமை, அமைப்பு ஆகிய இரண்டிற்கும் வழி வகுத்துள்ளது.

மேற்கூறிய பெரும் பிரிவுகளை யன்றிக் குழுக்கள் மற்றும் பல்வேறுவகையில் பகுக்கப்பட்டுள்ளன. 1. உட்குழு (In group), 2. புறக்குழு (out group), 3. இயற்கைக்குழு (In voluntary group) 4. செயற்கைக் குழு (Voluntary group) 5. தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் குழு (Delegate group) என்பன.

உறுப்பினர்கள் ஒரு குழுவிலிருந்து தம் வாழ்நாளைக் கழிப்பது உட்குழு எனக் கூறப்படுகின்றது. சான்று பழங்குடி மக்கட்குழு. இக்குழு உறுப்பினர்கள் மற்ற குழுக்களிடையே ஒரு விதத் தொடர்புமின்றி வாழ்கின்றனர்.

## முதற் குழுவுக்கும் இரண்டாம் குழுவுக்கும் உள்ள தொடர்பு

| | இயற்கைத் தன்மைகள் | சமுதாயப் பண்புகள் | உறவுச் சான்றுகள் | சான்றுக் குழுக்கள் |
|---|---|---|---|---|
| முதற் குழு | 1. நெருங்கிய தொடர்புடைய விதிகள் | ஒரே நோக்கம், தொடர்பின் உள்ளார்ந்த தகுதி | நண்பர்களின் உறவு | விளையாட்டுக்குழு |
| | 2. குறைந்த எண்ணிக்கை | ஒருவர் மற்றவரின் உள்ளார்ந்த தகுதியை மதிப்பிடுதல், ஒருவர் மற்றவரை நன்கு அறிந்து தெளிதல் | கணவன் மனைவி | குடும்பம் |
| | 3. நீடித்த கால உறவு | உரிமை தாமாகவே ஏற்கப்பட்டு செயல்படுதல். அவ்வப்போது வாய்ப்பேற்படின் கட்டுப்பாட்டைக் கைக்கொள்வது | ஆசிரியர், மாணவர் | அலுவல் குழு |
| இரண்டாங் குழு | 1. விரிந்து பரந்த நிலப் பரப்பு | மாறுபட்ட நோக்கம் புறத் தொடர்பை மதிப்பிடுதல் | வணிகர்-வாங்குவோர் | நாடு |
| | 2. பரந்த எண்ணிக்கை | மற்ற மக்களை புற மதிப்பிடுதல். மற்ற மக்களைப்பற்றிய அளவிட்ட தெளிவு | அறிவிப்பாளரும் கேட்போரும். நிகழ்ச்சியில் நடிப்பவரும் ரசிப்போரும் | பயிற்சி பெற்ற மன்றம் |
| | 3. குறுகிய கால உறவு | புற எண்ணத்தடை, முறையான கட்டுப்பாட்டுச் செயல்பாடு | மேலாளர்-கீழ்அலுவலர் எழுத்தாளர்- சுவைஞர் (Reader) | பலரடங்கிய இணைக்கழகம் |

புறக் குழுவிலுள்ளார் இரண்டாங் குழுவைப் போன்று பல குழுக்களிலிருந்து செயலாற்றுவர் அவர்கள் ஒரு குழுவிலும் நிலைத்திருக்க வேண்டிய அவசியமில்லை.

இயற்கைக் குழு உறுப்பினர்கள் இக்குழுவை விட்டு ஒரு போதும் விலகி இருத்தல் இயலாது. சான்று : சாதி, இத்தகைய குழுக்கள் உறுப்பினர்கட்கு பிறந்தது முதல் இறுதிவரை பாது காப்பளித்துச் செயல்படுகின்றது.

செயற்கைக் குழு உறுப்பினர்கள் அக்குழுவில் இயல்பாகத் தோன்றிய உறுப்பினர்கள் அல்லர். இத்தகைய குழுக்கள் அவ்வப் போது உறுப்பினர்களோடு உண்டாக்கப்படுகின்றன. சான்று : விளையாட்டுக்குழு வணிக குழு, இசைக்குழு என்பன

தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் குழு உறுப்பினர்களைத் தூதுவராக அனுப்புவது. சான்று : ஒரு பண்பாட்டுக் குழுவினர் மற்ற நாடுகட்குச் சென்று தங்கள் பண்பாட்டைப் பரப்புதல், ஒரு அறிவியல் துறை ஆசிரியர் தம் நாட்டிலிருந்து மற்ற நாடுகளுக்குச் சென்று கல்வி போன்றவற்றைப் பரப்புதல்.

மேற் குறிப்பிட்ட குழுக்கள் மக்களிடையே உள்ள உறவு, தொடர்பு போன்றவற்றை எடுத்துக் காட்டுகின்றன. கிரேக்கத் தத்துவ ஞானியாகிய அரிஸ்டாட்டில் என்பவரின் கூற்றுக் கேற்ப மனிதன் இன்று வரை குழுவில்தான் வாழ்ந்து வந்துள்ளான்.

81ஆம் பக்கம் காணும் அட்டவணை முதற்குழு இரண்டாங் குழு ஆகிய இவற்றின் தொடர்பை எடுத்துக் காட்டுகின்றது.

## 2. சாதி
## (Caste)

இந்தியாவில் சாதி என்பது தொன்றுதொட்டு வந்த ஒரு சமூக அமைப்பாகும். சாதியின் அமைப்பைப்பற்றி வேதங்களும் சாத்திரங்களும் மிக உயர்த்திக் கூறியுள்ளன. சாதியின் அமைப்பு நம் நாட்டிலுள்ள எல்லாப் பகுதிகளிலும் ஆழமாக வேரூன்றியுள்ள ஒரு இன்றியமையாத நிறுவனமாகக் கருதப்பட்டுள்ளது. இந் நிறுவனம் பெரும்பாலும் இந்திய நாட்டு மக்களாகிய இந்துக் களுக்குப் பல்வேறு வகையிலும் பயன் பட்டுள்ளது. மேல் நாட்டறிஞர்கள் சாதி என்னும் பழமைவாய்ந்த சிக்கலான

நிறுவனத்தை பல்வேறு கோணங்களிலிருந்தும் முழு மூச்சுடன் ஆய்ந்து அறிந்துள்ளனர். சான்றாக ஹட்டன் (C. H. Hutton), ரிஸ்லி (R. H. Risley), கூலி (Coley) ஆகியோராவர். சாதி மனிதனின் நிறம், இடம், இயற்கையமைப்பு முதலியவற்றைக் கொண்டு இந்தியாவிலுள்ள மக்களைப் பல பிரிவுகளாகப் பிரித்துள்ள நிறுவனம் என்று ஹட்டன் கூறியுள்ளார். உலகிலுள்ள மக்கள் அனைவரும் இயற்கைத் தோற்றத்தை அடிப்படையாகக் கொண்டு பல இனங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளனர் என்று ரெஸ்லி கூறியுள்ளார். பாரதத்தின் சாதிப் பிரிவை இருக்கு வேதம், புருவி சூத்தம் போன்றவை விரிவாக விளக்கியுள்ளன. சாதி என்னும் சொல்லுக்குப் பல அறிஞர்கள் பலவகையாக விளக்கம் தந்துள்ளனர். அவை

1. ரிஸ்லி என்னும் அறிஞர் சாதி பல குடும்பங்கள் அல்லது பல குடும்பக் குழுக்கள் ஒன்று சேர்ந்து ஒரு பொதுப் பெயர், பொது மரபு வழி, வருகை (descent), தெய்வத் தன்மை வாய்ந்த முன்னோர் (Mythical) வழி, பரம்பரைத் தொழில் முதலியவற்றை மேற்கொண்டு ஒரு தரப்பட்ட பொதுக்குடி வாழும் குழுமம் என்று கூறியுள்ளார்.

2. சாதி இரண்டு தன்மைகளைக் கொண்ட ஒரு சமூகக் குழுவென்று கெட்ஹர் (Ketkar) என்னும் அறிஞர் கூறியுள்ளார். (அ) சாதிக்குழுவில் உள்ள உறுப்பினர்கள் அக்குழுவில் உள்ள மக்களுக்குப் பிறந்தும் பிறக்கூடியவர்களாயும் இருத்தல் வேண்டும். (ஆ) உறுப்பினர்கள் வெளிக் குழுவிலிருந்து மணமக்களைத் தேர்ந்தெடுத்தல் கூடாது. இவ்விதியைப் புறக்கணித்தவர் அக்குழுவின் கண்டனத்துக்கு உள்ளாவர்.

3. சாதி நிறுவனம் அதனுள் அடங்கிய உறுப்பினர்களுக்குப் பிறந்தது முதல் இறுதிவரை தன் விதிகளால் பாதுகாப்பளிக்கின்றது. மேலும், உறுப்பினர்கள் சாதிவிதிகளை முற்றிலும் புறக்கணித்தால் அவர்கள் சாதியிலிருந்து விலக்கப்படுவர் என்று ஹட்டன் என்னும் பேரறிஞர் விளக்கியுள்ளார்.

4. குரியே (Ghurye) என்னும் அறிஞர் தம் வாழ்நாட்கள் முழுவதையும் சாதியைப் புரிந்து கொள்ளப் பயன்படுத்தினார். அவர்தம் "சாதியும் இன வகுப்பும் (Race caste)" என்னும் நூலில் சாதி ஆறு அடிப்படைத் தத்துவங்களைக் கொண்டுள்ளது என்று விளக்கியுள்ளார். (அ) ஒவ்வொரு சாதியின் உறுப்பினரும் அச்சாதியினுள் பிறந்து அதன் விதிகளைப் பின்பற்றி வாழ்கின்றனர். (ஆ) நம் நாடு முழுமையும் சாதி வகைத் திட்டம் அந்தணர்கள் முதல் கீழ்ச்சாதி வரை முறைப்படுத்தப்பட்டுள்ளது. (இ) கீழ்ச்

சாதியினரிடமிருந்து உணவு, தண்ணீர் முதலியவற்றைப் பெறக் கூடாதென்றும் அவர்களுடன் நெருங்கிப் பழகக் கூடாதென்றும் கடைப்பிடிக்கப்பட்ட எண்ணங்கள் மேலோங்கி வளரலாயின. (ஈ) கிராமங்களிலுள்ள தனிப்பட்ட சாதிகளுக்குச் சமுதாய உரிமை கொடுக்கப்படாமல் இருந்து வந்தது. (உ) தொன்று தொட்டு வரும் பரம்பரைத் தொழிலைப் பின்பற்றிய சாதியினர், மற்ற சாதியினருடைய எத் தொழிலையும் ஏற்க இயலாத நிலையில் இருந்தனர். (ஊ) திருமணக் கட்டுப்பாடுகள் மேலோங்கி அவன் தன் உட்குழுவிலிருந்தே (Endogamy) மணமக்களைத் தேர்ந் தெடுக்க வேண்டுமென்ற கொள்கை மேலோங்கியது.

5. சாதி, ஒரு தனி மனிதன் பிறந்தது முதல் இறுதி வரை தான் பிறந்த சாதியின் மணம், வாழ்வு, பிறப்பு, இறப்பு, பாவம், புண்ணியம் ஆகிய சடங்குகள் எவ்வெவ்வகையில் செயல் படுத்தப்படவேண்டும் என்பதற்கு வழிகாட்டி, மக்களை ஒன்று திரட்டி அச்சாதியினுள் இருப்பதற்கு வகை செய்தது என்று வில்சன் (Wilson) கூறியுள்ளார்.

மேற்கண்ட அறிஞர்களின் கூற்றுக்களால் சாதி, பற்பல விதிகளால் பகுக்கப்பட்டு அவ்விதிகள் பற்பல நுணுக்கங்களை உள்ளடக்கி செயல்படுத்தப்பட்டதாலும் அவை இவ்விருபதாம் நூற்றுண்டில் முறையாகப் பின்பற்றப்பட இயலாததாலும் ஒரு வளர்ச்சியுருத நிறுவனமாயிற்று. 1949 ஆம் ஆண்டு தோற்று விக்கப்பட்ட அரசியல் அமைப்புத் திட்டங்கள் நம் நாட்டில் பண்டைக் கால முதல் வேரூன்றியுள்ள சாதியைச் சிதைத்து அழிக்க முழு மூச்சுடன் செயல்பட்டு வருகின்றன.

மேற்கூறிய கூற்றுகளைத் தவிர மற்றும் மேலும், இரு கொள்கைகள் சாதிப் பிரிவுகளுக்கு விளக்கம் கூறுகின்றன. அவை 1. புராணக் கதைக் கொள்கை (Mythological concept) . பொருளாதாரக் கொள்கை (Economic concept). முதற் கொள்கை இறைவன் மக்களை அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என நான்கு பிரிவுகளாகப் பிரித்து அவர்கள் முறையே இறைவனின் வாய், வயிறு, கைகால், பாதம் முதலியவற்றிலிருந்து தோன்றிய தாகவும் அவர்கள் மக்களுக்குக் கற்பித்தல், அறிவுரை கூறுதல், நாட்டைக் காத்தல், உணவு உற்பத்தி செய்தல், மற்றவர்க்குத் தொண்டு புரிதல் ஆகிய பணிகளை அளிக்கப்பட்டனர் என்றும் கூறப்படுகின்றது. பொருளாதாரக் கொள்கை மனிதன் தன் தேவைக்கேற்ப மக்களை நான்கு பிரிவுகளாகப் பிரித்துள்ளது இவ்விரு கொள்கைகளும் இந்தியக் குடிமக்களால் ஏற்கப்பட்டு காலப் போக்கில் சாதிப் பிரிவுகள் அவற்றின் பண்புகளை இழந்து

தற்போது நாட்டுக்கு இடையூறு பயக்கும் நிறுவனமாக இயங்கு கின்றது

### சாதி வினைச் செயல்கள் (cast functions)

நம் இந்திய நாட்டில் சாதி என்னும் சமுதாய நிறுவனம் மூன்று அடிப்படைத் தத்துவங்களை மேற்கொண்டு ஒரு அசைக்க முடியாத நிறுவனமாக விளங்கியது. 1. மணமக்களைத் தத்தம் பிரிவிற் குள்ளேயே தேர்ந்தெடுத்தல் (Endogamy), 2. பரம்பரைத் தொழிலை மேற்கொள்ளுதல் (Hereditary Occupation). 3. சாதிச் சடங்குகளை முறைப்படி ஏற்றல் (Tradition and customs) என்பன. மேற்கூறிய கட்டுப்பாடுகள் சாதி மக்களைப் பாதுகாத்தும் வழிப் படுத்தியும் ஒழுங்கு படுத்தியது. விரிவாகக் கூறினால் புறமணத் தடை முறை அல்லது குலப் பிரிவில் அகமண உறவுக் கட்டு (Endogamy), அச்சாதியிலுள்ள மனிதனுக்குப் பாதுகாப்பு, இடரிலா நிலை, உரிமைகள் இவற்றை நல்கியது. மேலும், முன்னோர் தொழிலைப் பின்பற்றி மேன்மையடையச் சாதி ஒரு கருவியாக இருந்தது. மற்றும் மனிதனின் பிறப்பு, இறப்பு, மணம் மற்ற சடங்குகளை மேற்கொள்ள சாதி இன்றியமையாததாக இருந் தது. புறமணத் தடை முறை முன்னோர் தொழில், சாதிச் சடங்குகள் ஆகியவை சிற்சில சாதிப் பிரிவுகளால் மற்ற சாதிகளின் வளர்ச்சிக்கு இடையூருகப் பின்பற்றப்பட்டதால் சாதியின் பெருமையும் மேன்மையும் குறையலாயின. சான்ருக இடைக் காலத்தில் மேற்சாதி மக்கள் கீழ்ச்சாதி மக்களை மணக்க மறுத்தல்; கீழ்ச்சாதி மக்களிடமிருந்து தண்ணீர், சமைக்கப்பட்ட உணவு முதலியவற்றைப் பெற மறுத்தல்; மேலும், அவர்களைத் தீண்டுதல் தவறு என்று கருதுதல் ஆகியவை. தற்போது சாதி வேறுபாடு, குலவிச்சை (குலத் தொழில்) இவை முரணாகக் கருதப்படுகின்றன. குறிப்பாக இருபதாம் நூற்ருண்டில் சாதி மக்களின் முன்னேற்றத் திற்கும் பொருளாதாரப் போக்கிற்கும் ஒரு தடையாகக் கருதப் படுகின்றது. எனவே, சாதி ஒழிப்பு அல்லது விலக்குதல் நம் நாட்டில் ஒரு பெருஞ் சிக்கலாக மேற்கொள்ளப்பட்டுள்ளது. இன்றைய சமுதாயத்திற்கும் நாகரிகத்திற்கும் பழங்காலச் சாதிப் பிரிவுகள் ஏற்கப்படமாட்டா. மனிதன் தன் எண்ணத்திலும் முயற்சியிலும் செய்கையிலும் பல்வேறு துறைகளில் முன்னேற்ற மடைந்துள்ளான். சாதி பண்டைக் கால மக்களுக்கு நன்மை அளித்திருக்கலாம். எனினும், இருபதாம் நூற்ருண்டின் பிற்பகுதி யாகிய இன்று சாதியின் கொள்கைகளைக் கொண்டு மக்கள் ஒரு போதும் முன்னேற்றம் அடையமுடியாது. அறிவியலும் அறிவியல் முறைகளும் நம்மிடையே இரண்டறக் கலந்துள்ளன. ஆதலால், சாதியின் பயன்கள் வலிமையற்று உறங்குகின்றன.

நம் நாட்டின் சட்டதிட்டங்கள் மக்களின் முன்னேற்றத்திற் கேற்ப அமைந்து பயன்படுத்தப் படுகின்றன. சான்ருக, கலப்பு மணம் (Inter caste marriage), கீழ்ச் சாதி மேற்சாதி என்னும் வேறுபாடு இல்லாமல் ஒரு தொழிலே ஏற்றல் என்பன. இன்றைய நாகரிகத்திற்கு பொருந்தாததால் சாதிப் பிரிவுகளும் கொள்கை களும் விரைவாக வலிமை குன்றி மறையலாயின.

இப்பரந்த பாரத நாடு உலகின் ஐந்தில் ஒரு பங்கு மக்களைக் கொண்டு பல பொது விதிகளையும் கட்டுப்பாடுகளையும் மேற்கொண்டு திகழ்கின்றது. அதேவேளையில் நம் நாட்டில், பல சமயப் போக்குகள், பலதரப்பட்ட பாரம்பரியங்கள், பல இன வகுப்புகள் உள்ளடங்கியிருப்பதையும் காண்கின்ருேம். இவை யனைத்தும் ஒருங்கே நிலைபெற்று பல முனைகள் கொண்டு பெருக்கப்பட்ட ஒரு சமுதாய நிறுவனத்தைச் சாதி தோற்று வித்துள்ளது. நிலவியல் நிலைகள் மக்களைச் சில விதிகளுக்குக் கட்டுப்படுத்தியுள்ளது. எனினும், மக்களின் இன, பாரம்பரிய வேறுபாடுகள் சமுதாயத்திடையே காணப்படுகின்றன. இப்பரந்த சாதி நிறுவனம், அவ்வப்போது குடியேறுபவர்களால் அசைக்கவோ மாற்றவோ முடியாத அளவுக்கு இந் நாட்டில் வேரூன்றி நிலை பெற்றதென்று வரலாற்றின் வாயிலாக உணர்வ தாக ஹட்டன் கூறுகின்ருர். ஒவ்வொரு சாதிப் பிரிவும் சில விதிகளை மேற்கொண்டு மற்றைய சாதிகளை ஓரளவிற்கு வேறு படுத்திக் காட்டி இயங்குகின்றது. பொதுவாக எல்லாச் சாதிகளும் புறமணத் தடை முறையை (Endogamy) ஏற்று விளங்குகிறது. மேலும், ஒவ்வொரு சாதியிலும் அச்சாதியினர் எவற்றைப் பின் பற்றலாம் எவற்றைப் பின்பற்றக் கூடாது என்ற ஏட்டில் எழுதப் பெருத (Unwritten laws) விதிகளால் கட்டுப்படுத்தப்பட்டனர். இந்தியாவில் மூவாயிரத்திற்கு மேற்பட்ட சாதிப் பிரிவுகள் இருப்ப தாகக் கூறப்படுகின்றது. அவையனைத்தும் இனவேறுபாடு, தொழில் வேறுபாடு, இடவேறுபாடு, சமய வேறுபாடு போன்ற வற்றைச் சார்ந்துள்ளன என்று கூறப்படுகின்றது. மேலும், முப்பது மாறுபட்ட மொழிகள் இப்பரந்த நாட்டில் இன்றும் வழக்கில் இருப்பதாகக் கூறப்படுகின்றது. ஒவ்வொரு மொழியும் அதனிடையே ஐந்துக்கு மேற்பட்ட சிறு பிரிவுகளைக் கொண்டுள்ள தாகக் கூறப்படுகின்றது. ஆஸ்டரிக் (Austric) இனத்தைச் சார்ந்தவர்கள் மற்ற இனத்தவரிடையே தொடர்பின்றி அவர்தம் மொழியைப் பயன்படுத்துகின்றனர். ஆஸ்ட்ரிக் மொழியை இரு பிரிவுகளாகப் பிரித்துப் பேசுவது இரு இனத்தவர் நம் நாட்டிற்குள் புகுந்து இவ்விரு மொழிகளையும் பரப்பியுள்ளதாகக் கருதப் படுகின்றது. கொலோரியன் மொழி (Kolarian anguage) பேசும்

மக்கள் இந்தியாவில் குறைந்த அளவு என்றும் அவர்கள் சிற்சில இடங்களில் மட்டுமே குடியேறியுள்ளார் என்றும் கூறப்படுகின்றது. மான்கெமர் (Monkhmer) என்னும் மொழி திராவிட இனத்தைச் சார்ந்ததென்றும் அம்மொழி தொடர்ந்து பல இடங்களில் மக்களால் பேசப்படுகின்றதெனவும் கூறப்படுகின்றது. மற்றும், இதற்குப் பின்னர் நம் நாட்டில் குடியேறிய மக்கள் இந்தோ-ஆரியன் மொழிகளைப் புகுத்தியுள்ளதாகக் கூறப் படுகின்றது. இந்திய வரலாற்றில் முதன்முதலாக நம் நாட்டில் குடியேறியவர்கள் ஆரியரே என்றும் அவர் ஐரோப்பிய மொழிகளைப் பரப்பியதாகவும் கூறப்படுகின்றது. அவர்கள் பெரும் பாலும் பஞ்சாப், வடமேற்குப் பகுதி, கீழைப்பகுதி, தென்பகுதி ஆகிய இடங்களில் குடியேறியதாகக் கூறப்படுகின்றது. இவர் கட்குப் பின்னர் பர்சியன் (Persian), கிரேக்கர் (Greeks), சாக்காஸ் (Sakas), குவின்ஸ் (Kushans), கன்ஸ் (Huns), இஸ்லாமியர், மற்றும் போர்ச்சுக்கீசியர் ஆகியோர் முறையே இந்தியாவிற்குள் நுழைந்ததாகக் கூறப்படுகின்றது. இத்தகைய மக்கள் கலப்பிலிருந்து இந்தியமக்கள் உருவாக்கப்பட்டுள்ளனர். சாதி நிறுவனம் இத்திய மக்களை நிலை நிறுத்தி பல குடும்பங்களை உள்ளடக்கி முழுமைபெற்ற அல்லது வரம்புக் குட்பட்ட பிரிவு களாகப் பிரிக்கப்பட்டது. இவ்வரையறுக்கப்பட்ட சாதிப் பிரிவுகளைத் தென்னிந்தியாவில் தெளிவாகக் காணலாம். சாதிப் பிரிவின் நன்மை தீமைகளை அதிக அளவிற்குப் பயன்படுத்திய தென்னிந்திய மக்கள் இன்று சாதிப் பிரிவின் பலதரப்பட்ட தீமை களால் இன்னலுற்று சாதியை அறவே ஒழிக்க பெரிதும் முயல் கின்றனர்.

“ சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே
சாத்திர சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித் தலைகின்ற வுலகீர் ”— என

இராமலிங்க அடிகள் சாதியால் மக்கள் இன்னலுறுதலைச் சுட்டிக் காட்டுகின்றார். இன்றும் சாதியும் சாதிப் பிரிவுகளும் தென்னிந்தியப் பகுதிகளில் பிற பகுதிகளைக் காட்டிலும் மிகையாகக் காணப் படுகின்றன. காட்டில் வாழும் பழங்குடி மக்களேயன்றி மற்றைய திராவிட இன மக்கள் மாநிலம் வாரியாக நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளனர். 1. ஆந்திரப் பகுதியைச் சார்ந்த இன மக்கள் 2. தமிழ் நாட்டைச் சார்ந்த சாதிகள். 3. கர்நாடக அல்லது மைசூர் இனத்தோர். 4. கேரளத்தைச் சார்ந்த பிரிவினர். மேற்கூறிய நான்கு பிரிவுகளும் வெவ்வேறு மொழிகளைக் கொண்டுள்ளதால் அவர்களைத் தெலுங்கர், தமிழர், கன்னட மக்கள், மலையாளத்தவர் எனக் கூறுகின்றோம்.

மேற்கூறிய நான்கு மொழிகளும் திராவிட இன மொழியைச் சார்ந்தவை. ஒவ்வொரு மொழி இனப் பரப்பும் பல்வேறு சாதிகளை தன் சமுதாயத்திற்குள் ஏற்றுள்ளது. தெலுங்கு மொழி பேசும் “ காப்பு ” (Kapu) என்னும் இனத்தவராகிய ‘ரெட்டி’ என்போர் தென்னாட்டிலேயே பல உட்பிரிவுகளைக் கொண்ட மிகப் பெரிய இனமாவர். அவர்கள் பெரும்பாலும் நிலக் கிழார்களாகவும் வேளாளர்களாகவும் விளங்குகின்றனர். இச்சாதியினர் பிராமணர் களுக்கு அடுத்த மதிப்புடையவர்களாகவும் மேலும், இராஜஸ்தானத்திலுள்ள இராஜபுத்திர இனத்தைச் சார்ந்தவர்கள் என்றும் கருதப்படுகின்றனர். இச்சாதியினர் தாய் வழிக் குடும்ப முறைகளைப் பின்பற்றுவர். மேலும், ஆந்திர மாநிலத்திலுள்ள இப்பிரிவினர் உணர்ச்சிவயப்பட்டு அவ்வப்போது அவர் தம்மிடையே கிளர்ச்சிகள் எழக் காரணமாவர் என்றும் கூறுவர்.

தமிழ் மொழியை மேற்கொண்டுள்ள தமிழர், தெலுங்கரைக் காட்டிலும் அனுபவப் பயிற்சி (Practical experience) உள்ளவர் களாகக் கருதப்படுகின்றனர். இவர்தம்மிடையே பௌதிகத்திற்கும் கணிதத்திற்கும் ஒரு தனி ஆர்வம் உள்ளதாகக் கருதப்படுகின்றது. இத்தமிழ்நாடு பௌதிகத்தில் வல்லுநர்களைத் தோற்றுவித்துத் தம் பேரும் புகழும் ஐரோப்பிய நாடுகளிலும் பரவும் பெருமை பெற்றுள்ளது. இப்பகுதி பலதரப்பட்ட மேல்சாதி கீழ்சாதி மக்களைக் கொண்டுள்ளது. சான்று : கள்ளர், மறவர் போன்றோர் மற்றும் ‘கோட்டை வெள்ளாளர்’ (Kottai Vellalar) என்னும் சாதி விந்தையான பழக்க வழக்கங்களைக் கொண்டு நிலவுகின்றது. இச்சாதியினர் அவர்தம் பெண்களைக் கோட்டைக்கு வெளியே அனுப்பவும் மற்றசாதி ஆண்களைக் கோட்டைக்குள் வரவும் அனுமதிப்பதில்லை. மற்றும் கம்மாளன் என்னும் பிரிவு தச்சர், கொல்லர், தட்டார், கன்னார், கொத்தர் என்ற ஐந்து சாதிப் பிரிவு களைக் கொண்டு ‘விசுவகர்மா’ (Viswakarma) என்று அழைக்கப்படுவதுமன்றி அச்சாதியினர் பிராமண சாதியினரின் பழக்க வழக்கங்களை மேற்கொண்டு செயல்படுகின்றனர். செட்டி என்னும் சாதியினர் பல உட்பிரிவுகளைக் கொண்டு வங்கியாளர் (Banker), தரகாளர் (Broker), அங்காடியாளர் (Shop-keeper), வட்டிக்குப் பணம் கொடுப்போர் (Money-lender) வணிகர் (Traders) எனக் கூறப்படுகின்றனர். இப்பிரிவினர் பொதுவாகச் செல்வந்தர்களாகவும் வர்த்தக அனுபவமுடையவர்களாகவும் சமுதாயத்தில் கூடுதல் மதிப்புடையவர்களாகவும் விளங்குகின்றனர். இவர்கள், பழங்காலத்தில் நாட்டு வேந்தர்களுக்குப் பொருளாதாரத் துறையில் துணைபுரியக்கூடியவர்களாகவும் சமுதாயப் பணிகளில் ஈடுபாடுடையவர்களாகவும் விளங்கி

யுள்ளனர். தமிழ் நாட்டுக் கல்விப் பணியில் பெரும்பங்கேற்ற செட்டி நாட்டரசர் அண்ணாமலைச் செட்டியார், வள்ளல் அழகப்பச் செட்டியார் ஆகியோர் தமிழகத்தின் பெருமையை நிலைநாட்டி யுள்ளனர்.

கன்னட மாநிலத்தில் 'கொடகர்'(Kodagas), எருவாஸ் (Yeruvas) என்னும் இனப் பிரிவினர் பெருமளவில் நிறைந்துள்ளனர். இவ்வினத்தவர் துளு கன்னடம் ஆகிய இரு மொழிகளைத் தாய் மொழியாகக் கொண்டுள்ளனர்.

மலபார் என்று கூறப்படும் கேரள மாநிலத்தில் சாதி என்னும் நிறுவனம் மிக முக்கியத்துவம் பெற்று நன்மை தீமைகளை வெகுவாக எடுத்துக் காட்டியுள்ளது. இப்பிரிவில் நம்பூதிரி (Nambudri) என்னும் சிறப்பாகக் கருதப்படுகின்ற அந்தணர் முதல் தீயர் என்றழைக்கப்படும் கீழினத்தவர் வரை அடங்கியுள்ளனர். மிக முக்கியத்துவம் பெற்ற சாதி நாயர். இப்பிரிவினர் இராணுவ சேவையில் மிகுதியாக ஈடுபட்டுள்ளனர். இவர் கேரளத்தில் செல்வந்தர் எனக் கருதப்படுகின்றனர். நம்பூதிரி இனத்தவர் தந்தை வழிக்குடும்ப முறைகளைப் பின்பற்றிக் குடும்ப வாழ்க்கை நடத்துகின்றனர். ஒரு நம்பூதிரி குடும்பத்தின் முதல் மகன் நம்பூதிரி குடும்பத்துப் பெண்ணை மணந்து அவர்களுடைய சந்ததியினருக்கே சொத்துரிமை உண்டு என்று அம் மாநிலச் சட்டம் விளக்குகின்றது. மற்றைய சகோதரர்கள் நாயர் பெண்களை மணம் புரிந்து தாய்வழிக் குடும்ப முறைகளைப் பின்பற்றி வாழ்க்கை நடத்துகின்றனர் என்று சட்டத்தில் கூறப்பட்டுள்ளது. பொதுவாகக் கேரளத்தில் பெண்களுக்கு உரிமையும் வசதியும் ஓரளவிற்கு அதிகமாக உள்ளது. பெண் கல்வி இம் மாநிலத்தில் மற்றைய மாநிலத்தைக் காட்டிலும் அதிகமாகப் பரப்பப் பட்டுள்ளது.

மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தோற்றுவிக்கப்பட்டு வளர்ச்சியுற்ற சாதி நிறுவனம் இந்து சமுதாயத்தை ஒரு சிக்கலுற்ற நிறுவனமாக உருவாக்கியுள்ளது. மிகப் பழமை யானதும் அதிக ஆழமாக வேரூன்றியதுமாகிய இந்நிறுவனம் மிக எளிதில் அசைக்கமுடியாத ஒன்று. தொடக்கக் காலத்திலிருந்து இன்று வரை இந்நிறுவனத்தை வேருடன் களைந்து எறிவதற்கும் மாற்றுவதற்கும் முயற்சிகள் செய்யப்பட்டு வந்தன. எனினும், அவையனைத்தும் பயனற்றவையாகவும் அந்நிறுவனத்தால் ஏற்படும் தீமைகளைப் பெருக்கியதேயன்றி வேரோடு களைய முடியவில்லை. ஆங்கிலேயரின் ஆதிக்கமும் இஸ்லாமியரின்

எதிர்ப்புகளும் கிறிஸ்தவர்களின் இயக்கங்களும் கூட இந்நிறுவனத்தின் விதிகளையும் பழக்க வழக்கங்களையும் மாற்ற இயலாது தோற்றனர். ஏனெனில், இந்தியாவில் இந்து மக்கள் பெரும்பாலோராயும் பலதரப்பட்ட மொழி, இனம் ஆகியவற்றை மேற்கொண்டோராயும் விளங்குவதேயாகும். முற்கூறிய மூவாயிரத்திற்கு மேற்பட்ட சாதிப் பிரிவுகளும் உட்பிரிவுகளின் பல உட்பிரிவுகளாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. அனைத்துப் பிரிவினருக்கும் இடையே சமுதாய ஏற்றத்தாழ்வுகளைக் கொண்டு மண முறைகள், குடும்பப் பழக்க வழக்கங்கள் முதலியவை ஏற்படுத்தப்பட்டன. சான்று : ஒரு அந்தணன் மேலினத்தவன் என்றும் ஒரு தீண்டப்படாதவன் கீழ்ப்பிரிவினன் என்றும் மேலிருந்து கீழ்ப்பிரிவுவரை வகைப்படுத்தப்பட்டுள்ளது. இவ்வெல்லைகட்கிடையே ஏனைய சாதிப்பிரிவுகள் முறையாகத் தோன்றி ஒவ்வொரு சாதியும் ஒரு சமூக வரலாற்றைப் படைத்துள்ளது. சான்று : பதினைந்து அல்லது இருபது குடும்பங்களைக் கொண்ட சாதி இன்றும் காணப்படுகின்றது. ஒவ்வொரு சாதியினரும் சாதிப்பற்று (Caste patriotism) உடையவராய் விளங்குகின்றனர்.

இன்றைய சமுதாயத்தில் சாதி நிறுவனம் பல்வேறு மாற்றங்களைப் பெற்று விளங்குகின்றது. சாதி நிறுவனத்தை நிலைநாட்டிய மூன்று நிலையான விதிகளாகிய புறமணத்தடைமுறை, பரம்பரைத் தொழில், சாதிச்சடங்குகள் புறக்கணிக்கப்படுகின்றன. ஏனெனில் இன்றைய சமுதாயம் பரந்த நோக்கங்களை மேற்கொண்டு பல துறைகளிலும் முன்னேற்றமடைந்து வருகின்றது. குடும்பம் என்னும் இன்றியமையாத நிறுவனம் மாறுபட்டு வருகின்றது. கூட்டுக் குடும்பம் பெயரளவில் மட்டுமே நிலைத்துள்ளது. இந்திய நாட்டின் பொருளாதாரப் பெருக்கம், கல்விப் பரப்பு போன்றவை ஆண் பெண் இருவருக்கும் சமநிலைக் கொடுத்து வேலை வாய்ப்பு அளிக்கப்படுகின்றது. இந்தியக் குடியரசு சட்டம் சமுதாயப் பொருளாதார அரசியல் உரிமைகளை மக்களுக்கு நல்குகின்றது. இவையனைத்தும் ஒருங்கே பெற்ற இந்திய நாட்டு மக்கள் பண்டைக்கால நிறுவனமாகிய சாதியையும் சாதிப் பழக்க வழக்கங்களையும் ஏற்க இயலாது. நம் நாட்டுக் குடிமகனொருவன் இப்பரந்த உலகில் எங்கேனும் தன் கல்வியறிவு, திறன் போன்றவற்றை எடுத்துக்காட்டிச் செயல்படக்கூடும். பாரம்பரியத் தொழில் முறை ஓரளவிற்கு மறைந்து வருகின்றது. புறமணத் தடைமுறை விடுபட்டு நாட்டு மக்கள் உரிமையுடன் மணம் புரிந்து வாழக் கூடும். பண்டைக்காலச் சடங்குகள் இக்காலத்து மக்களால் புரிந்து கொள்ளவும் ஏற்கவும் இயலாத நிலையில் இருக்கின்றன. சாதி நிறுவனம் சமுதாயப் பொருளாதாரத்

துறைகளில் தேக்கத்தைத் தோற்றுவித்தது என்ற கொள்கை மாறுபட்டு மறைந்து வருகின்றது.

## 3. தீண்டாமை
## (Untouchability)

உரிமை பெற்ற இத்திரு நாட்டில் பற்பல மாற்றங்கள் தோன்றி யுள்ளன. அவற்றில் முக்கியத்துவம் பெற்று விளங்குபவை ஒரு சில. சான்று : கல்விப் பெருக்கம், பெண்ணுரிமை, தீண்டாமை ஒழிப்பு என்பன. சாதி நிறுவனத்தின் ஒரு பகுதியாகிய தாழ்த்தப் பட்ட சாதி நாளடைவில் பெருகிக் கொண்டு வந்து இருபதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் அதுவே ஒரு கிளர்ச்சியாக உரு வெடுத்தது. 1950 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட அரசியல் நிர்ணய சட்டம் தீண்டாமை ஒழிப்பை முக்கியமானதாக ஏற்றுக் கொண்டது. அச்சட்டத்தின்படி எவனெருவன் தீண்டாமையைப் பின்பற்றுகின்றுனே அவன் சட்டத்தின் தண்டனைக்குள்ளாவான் என்று வற்புறுத்தப்பட்டது. 1955 ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட தீண்டாமை ஒழிப்புச் சட்டம், 1956 ஆம் ஆண்டு உருவாக்கப் பட்ட இந்து மதச் சட்டம் (Hindu Code Bill) ஆகியவை சாதி உறவு, தொடர்பு போன்றவற்றை விரிவாகஎடுத்துக்காட்டியுள்ளன. சாதி ஒழிப்பிற்கும் தீண்டாமை ஒழிப்பிற்கும் நம் நாட்டுத் தந்தை யாகிய காந்தியடிகள் அடிக்கல் நாட்டினுர். அவர் கருத்துப்படி இந்தியக் குடிமக்கள் அனைவரும் ஒரே குலத்தவர் என்றும் சாதி வேறுபாடின்றி மக்கள் "ஒன்றே குலம் ; ஒருவனே தேவன்" எனச் செயல்படவேண்டும் என்றும் விளக்கியுள்ளார். நாட்டின் தொழில் முறைத் தேவைக் கேற்ப மக்கள் பிரிவு ஏற்பட்டதென்றும் அப்பிரிவுகளில் கீழின மக்களாகிய தோட்டி, வெட்டியான் போன்றவர்கள் மக்களின் நன்மைக்காகவே பணிபுரிந்தனர் என்றும் நாளடைவில் அவ்வகுப்பினர் காணத் தகாதவர் (un-seeable), தீண்டத்தகாதவர் (untouchable), ஒன்றும் அறியத் தகாதவர் (un knowable) என்று ஒதுக்கப்பட்டனர் என்றும் கூறியுள்ளார். இப்பிரிவினர்க்கு இன்று அரசு முழு உரிமை கொடுத்து உயர்த்துகின்றது.

இதன் விளைவாக இன்று நாம் அவர்கட்குக் கல்வி வாய்ப்பு, வேலை வாய்ப்பு, சமுதாயத்தில் சம உரிமை முதலியவை அளிப்பதைக் காணுகின்றோம்.

தாழ்த்தப்பட்ட மக்களுற்ற இன்னல்களை ஒரு சிறிது ஆய்வோம். அரசியல் நிர்ணய சட்டம் நடைமுறைக்கு வருமுன்

பலவித இன்னல்களுக்கிடையில் அவ்வினத்தவர் ஓரளவிற்கு விலங்குகள் போல் அடிமைகளாய் வாழ்ந்தனர். சான்று : கேரளத்தில் பிற்பட்ட இனத்தவர் பொது இடங்களுக்குச் செல்லுதல், அங்காடிகட்குச் சென்று பொருள்களை வாங்குதல், கல்வி நிலையங்களில் கல்வி பெறுதல், மேலினத்தவர் வாழும் பகுதிகளில் நடமாடுதல் போன்றவை முற்றும் தடுக்கப்பட்டன. சிற்சில பகுதிகளில் அவ்வினத்தவரைப் பார்ப்பதும், அவர்களின் நிழலைக் காண்பதும் தீயது என்று கருதப்பட்டது. பொதுவாக ஒரு தீண்டாதவன் மேலினத்தவருடன் ஒரு குறிப்பிட்ட அளவு தூரத்திலிருந்துதான் பேசிப் பழகலாம் என்ற கட்டுப்பாடும் நிலவியது. மேற்கூறிய விதிகள் பெரும்பாலும் உணவுப் பொருட்களைப் பெறுதலும் பழக்க வழக்கங்களை ஒட்டியே அமைக்கப்பட்டது. சான்று : சமைத்த உணவு தண்ணீர் முதலியவற்றை ஏற்கக் கூடாது.

இத்தகைய விதிகள் மற்றைய மாநிலங்களிலும் குறிப்பாகத் தமிழ்நாடு, ஆந்திர நிலப்பகுதி, மைசூர் போன்ற இடங்களிலும் ஓரளவிற்கு பின்பற்றப்பட்டன.

இத்தகைய நிலை முழுமையாக மாற நம் நாட்டு சமூக சீர்திருத்த வாதிகளும் அரசும் தீவிரமாகச் செயல்படுகின்றனர்.

## 4. வகுப்பு (Class) : பிரிவுகள், தன்மைகள்

இப்பரந்த உலகிலுள்ள எல்லாச் சமுதாயங்களிலும் பொதுவாக வகுப்புப் பிரிவுகளைக் காண்கின்றோம். மிகச் சாதாரண பிரிவுகள் வயது, பால் போன்றவை. தற்காலச் சமுதாயத்தில் வகுப்புப் பிரிவுகள் சமுதாயப் போக்கை மேற்கொண்டு உண்டாக்கப்பட்டுள்ளன. ஒரு வகுப்பு என்பது அதன் உள்ளடங்கிய உறுப்பினர்களின் சமுதாய மதிப்பு, தொழில் போன்றவை மேற்கொள்ளப்பட்டு பிரிக்கப்படுகின்றது. ஆதலால் ஒரு சமுதாய வகுப்பு என்பது ஒரே வகையான மதிப்பு, தகுதி ஆகிய இவற்றை மேற்கொண்டுள்ள உறுப்பினர்களைக் கொண்டுள்ளது. சான்று : பொறியியலாளர், மருத்துவர் (டாக்டர்), ஆசிரியர், வழக்கறிஞர் போன்றோர். மேற்கூறிய ஒவ்வொரு வகுப்பினரும் தத்தம் பொருளாதாரப் பண்பாட்டுத் தன்மைகளை மேற்கொண்டு சமுதாயத்தில் செயல்படுகின்றனர். வகுப்பு என்பது மக்கள் சமுதாயத்தில் தங்களிடையே நிலவும் ஊடாட்டத்தினால் தோற்றுவிக்கப்படுகின்றது. ஒவ்வொரு வகுப்பும் அதற்குத் தேவையான விதிகள், தன்மை, பண்பாடு ஆகிய இவற்றைத்

தோற்றுவித்துச் செயல்படுகின்றது. சமுதாய வகுப்பு (Social class) ஒரு சிக்கலான குழு. இத்தகைய குழுக்களை நாடு, மாநிலம் மற்றும் பெரிய குழுமங்களிலும் காணக்கூடும். வகுப்பின் மதிப்பு (Status) கல்வி, பெருமை, மேன்மை, தொழில் ஆகிய இவற்றைக் காரணிகளாகக் கொண்டு விளங்குகின்றது. ஆதலால் ஒரு வகுப்பின் வரம்பை எடுத்து விளக்குவது எளிதன்று. வகுப்பின் குறிக்கோள் எண்ணிக்கையை மேற்கொண்டு புறம்பாக இருக்கக் கூடும். அல்லது தரம் தன்மைகளை மேற்கொண்டு அகத் தோற்றத்தை வெளிப்படுத்தக் கூடும். மேற்கூறிய விதிகளைக் கொண்டு பலதரப்பட்ட வகுப்புகளை விளக்கலாம்.

1. வரையறுக்கப்பட்ட வகுப்பு (Defined class): இவ்வகுப்பின் உறுப்பினர்கள் புறம்பாகச் செல்லாது வகுப்பின் தன்மை, விதி ஆகிய இவற்றை ஏற்று செயலாற்றுதல். சான்று : சாதி வகுப்புப் பிரிவு; அந்தணர், வணிகர், வேளாளர். 2. பண்பாட்டு வகுப்பு (Cultural class) : இக்குழுவிலுள்ள உறுப்பினர்கள், ஒருவகைப் பண்பாட்டைத் தோற்றுவித்து அதற்கேற்பச் செயல்படுதல். சான்று : ஒரு சாதியினுள் நிலவும் பல பிரிவுகள். 3. பொருளாதார வகுப்பு (Economic class) இப் பிரிவு மக்கள் பலதரப்பட்ட தொழில்களை மேற்கொண்டு உற்பத்தியைப் பெருக்கும் தொடர்பை எடுத்து விளக்குகின்றது. காரல்மார்க்ஸ் (Karlmarx) என்னும் அறிஞர் இவ் வகுப்புப் பிரிவை மேற்கொண்டு தொழிலாளி முதலாளி தொடர்பை பெருமளவிற்கு விளக்கியுள்ளார். அவர் கருத்துப்படி தொழிலாளிகளிடம் தொழில் உண்டென்றும் முதலாளிகளிடத்தே பொருள் இருப்பதென்றும் எடுத்து விளக்கி யுள்ளார். இத்தகைய தொடர்பு இருபதாம் நூற்றுண்டில் பல நாடு களில் ஏற்கப்பட்டு பலதரப்பட்ட நன்மைகளையும் தீமைகளையும் மக்களுக்கு வாரி வழங்குகின்றது. 4. அரசியல் வகுப்பு (Political class) இவ்வகுப்பு அரசியல் வலிமை கொண்டு அரசியல் அலுவல்களைச் சீர்திருத்தி அமைத்தல். சான்று அரசியல் வாதி. 5. தற் புகழ்ச்சிக் குழு (Self identified class) இவ்வகுப்பின் உறுப்பினர்கள் அவர்தம் பெருமை, மதிப்பீடு, பொருள் போன்ற வற்றை அடிப்படையாகக் கொண்டு விளங்குவர். இவர்கள் தம் மதிப்பை அகவுணர்வின் மூலம் (Psychological) வெளிப்படுத்து கின்றனர். சான்று: செல்வந்தர், தொழிலாளி முதலியோர். 6. பங்கேற்கும் வகுப்பு (Participation class) : இப்பிரிவு மக்களிடையே சமுதாய ஒற்றுமையை (Social ties) மணம், குடும்பம், உறவு ஆகிய இவற்றின் மூலம் எடுத்து விளக்குகின்றது. மேற்கூறிய வகுப்புப் பிரிவுகள் ஒன்றையொன்று முற்றிலும் விலக்குவதாகா. ஏனெனில் ஓரளவிற்கு ஒன்றையொன்று சார்ந்

துள்ளது. தற்கால சுழற்சி (Dynamic) கொண்ட சமுதாயத்தில் வகுப்புப் பிரிவுகளை வகைப்படுத்துவது அரிது. சான்று: தொழிலாளி முதலாளி இருவருமே மகிழ்ந்து (Motor car), பெற்று வாழ்வது.

பெரும்பாலான சமுதாயங்களில் தொழில் வகுப்புப் பிரிவை எடுத்து விளக்குகின்றது. சான்று : வழக்கறிஞர், மருத்துவர், ஆசிரியர், தொழிலதிபர் மேலும், அவ் வகுப்புப் பிரிவின் செயல் முறைகள், நண்பர்களைத் தேர்ந்தெடுத்தல், வாழுமிடம் போன்றவை. மற்றும், சொத்து போன்றவை ஒரு வகுப்பின் சமுதாய மதிப்பை எடுத்துக் காட்டுகின்றன. இத்தகைய சுழற்சி யுற்ற (Dynamic) சூழ்நிலையில் ஒரு தனி மனிதன் பல பிரிவுகளில் உறுப்பினனாக விளங்குகின்றான். அவனிருக்கும் நிலையை வகுப்புப் பிரிவுகள் எடுத்து விளக்குகின்றன. சான்று : ஒருவன் கற்றறிந்தவனாகவும், ஒரு தொழிலை மேற்கொண்டவனாகவும், பொருள் படைத்தவனாகவும் இருப்பினும் சமுதாய மதிப்பற்றவனாக இருத்தல். மற்றும், ஒருவன் கல்வியறிவு, நன்னடத்தை போன்றவை இருந்தும் பொருளாதாரக் குறைவால் இன்னலுறுதல். பண்டைக்காலச் சமுதாயத்தில் இத்தகைய நிலை இன்மையால் மக்கள் ஒரே சமுதாயக் குழுவில் வாழ்ந்தனர். ஆனால், தற்காலச் சமுதாயப் போக்கும் சூழ்நிலையும் ஒரு மனிதன் பல சமுதாயப் பிரிவுகளில் உறுப்பினனாக இருக்கக் காரணமாகின்றன. தகுதி (Status) என்னும் சொல் மனிதன் எந்தெந்தப் பிரிவுகளில் உரிமை பெற்றுள்ளான் என்பதை எடுத்துக் காட்டுகின்றது. வகுப்புப் பிரிவு முறை மக்களின் தகுதி மதிப்பு போன்றவற்றை எடுத்து விளக்கியும் அவர்கள் எவ்வெவ்வகையில் தத்தம் வாழ்க்கையை ஒழுங்குபடுத்தவேண்டும் என்றும் விளக்குகின்றது. இதன் விளைவு மக்கள்தம்மிடையே உள்ள ஒத்த மதிப்பு (Equals), உயர்ந்தோர் (Superior), தாழ்ந்தோர் (Inferior) என்னும் வேறுபாடுகளை விளக்குவது.

அமெரிக்கா போன்ற மேலைநாடுகளில் சமுதாய வகுப்புப் பிரிவுகள் தொழிலை அடிப்படையாகக் கொண்டு வெளிப்படுத்தப் பட்டுள்ளன. உலகில் பெரும்பாலான நாடுகளில் முதலாளித்துவம் கொண்ட சமுதாயம் (Employers Society) மாறுபட்டு தொழிலாளித்துவ சமுதாயம் காணப்படுகின்றது. பலதரப்பட்ட நுண்ணியல் முறைகளை மேற்கொண்டு அமெரிக்க நாட்டில் மக்களைப் பல பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். சான்று : விற்பனை யாளர் (Sales man), மோட்டார்த் தொழிலாளி, விவசாயி ஆகியோர் தம் தகுதியை நிலைநாட்டிச் செயல்புரிகின்றனர். மேற்கூறிய பிரிவு, வகுப்பிலுள்ள மக்களின் செயல்பாட்டைக்

குறித்து அவர்கட்கேற்ப மதிப்பைப் பெறச் செய்கின்றது. இக் கோட்பாடு மார்க்சிஸ்ட் கோட்பாட்டைப் போன்றதன்று. கோட்பாடு எதுவாயினும் சமுதாயப் பிரிவுகள் எல்லாக் குழுக் களிலும் காணப்படுகின்றன.பொதுவாக வகுப்பு முறை யமைப்பு மூன்று பெருங்குழுக்களைக் கொண்டுள்ளது. 1. மேல் வகுப்பினர் (Upper class), 2. நடுத்தர வகுப்பினர் (Middle class), தொழிலாளி வகுப்பு (Working class) மேற்கூறிய ஒவ்வொரு வகுப்பின் பண்பாட்டு அமைப்பு மற்றவற்றிலிருந்து பிரித்து விளக்கப் பயன்படுகின்றது. குழுத்தன்மை வகுப்பினருக்கு ஆளுமை (Personality) தோன்றச்செய்கின்றது.

மேல் வகுப்பு, மற்றும் இரு பிரிவுகளாகப் பிரிக்கக் கூடும் 1. மேன்மை வாய்ந்த சமுதாய மக்கள் (Elite). இக்குழு பரப்பரைத் தொழிலை மேற்கொண்டு முன்னேற்றமடைந்த ஒரு அமைப்பாகும். இக்குழுவினர் சமுதாயத்தில் பெருமை பெற்று விளங்குகின்றனர் இக்குழுவின் உறுப்பினர்களின் மேன்மையைப் பற்றி அந்நாடு மட்டுமன்றி மற்ற நாடுகளும் தெரிந்து கொள்ளக் கூடும். அவர்களைப் பற்றிய செய்தி நாட்டின் இன்றியமையாதவர் களாகக் கருதப்படுதல், மற்றைய பிரிவு மேற்கூறிய மக்களைத் தவிர மற்றவர்களைப் பொதுவாக எடுத்துக் காட்டுகின்றது. சான்று : செல்வர்.

குடியரசின் அடிப்படைக் கொள்கை யாதெனில் உலகிலுள்ள மக்கள் அனைவரும் நடுத்தர வகுப்பைச் சார்ந்தவர்கள். ஆனல் ஒரு சில வாய்ப்பற்ற மக்களோ கீழ்த்தர மக்களாகக் கருதப்படு கின்றனர். அமெரிக்க சமுதாய வகுப்புப் பிரிவு மேல்தர வகுப் பினர் பல அடிப்படைச் சமுதாய இச்சைகளைச் செய்ய வேண்டிய தவசியம் என்று கூறுகின்றனர். 1. முக்கியமான வாழ்க்கைத் தேவைகளை ஓரளவு கட்டுப்படுத்துதல். 2. சமூகக் கட்டுப்பாட்டை (Social control) அடிப்படையாகக் கொண்டு மக்களின் பழக்க வழக்கம் பாரம்பரியம் ஆகிய இவற்றின் மூலம் சமூக அமைப்பை ஏற்படுத்துதல். 3. தன்னாட்சி உரிமை உடைய மக்கட் குழுக்களை (Autonomous group) சர்வாதிகாரக்குழுக்கள் நசுக்காமல் இருத்தல். 4. சமுதாயத் துறையில் முன்னேற்றமடையாத வருங் கால மக்களைச் சமுதாயமாக்குதல்.

மேற்கூறிய முறைகளில் முதலாவது, சமுதாயத்தைக் கட்டுப் படுத்தி உலகத் தொழில், வங்கிகள் போன்றவை செயல்படத் துணை புரிகின்றது. இவ்வகுப்பின் முக்கிய நோக்கம் வகுப்பினர்

கள் வகுப்பு விதிகளை மேற்கொண்டு நடத்தல். மேல் வகுப்பு உறுதி சமுதாயத்தை உறுதிப்படுத்தப் பயன்படுகின்றது. பொதுவாக, மேல் வகுப்பினர் அவர்தம் தகுதி நிலை போன்றவற்றை தக்க வைத்துக் கொள்வர். மேலும், வருங்கால மக்களைச் சமுதாய மாக்குவதில் வல்லமை பெற்றவர்கள். ஓரளவிற்குத் தொழில், வகுப்புப் பிரிவுகளை எடுத்து விளக்குகின்றது. பொதுவாக நடுத்தர வகுப்பு மக்களை எல்லாத் தொழில் துறைகளிலும் காணலாம். இத்தகைய மக்கள், தங்கள் தகுதியை ஏற்றுக் கொண்டு தத்தம் குழந்தைகளைப் பழக்குவர். இவ்வகுப்பினர், ஓரளவு பொருளைச் சேமிப்பதிலும் தத்தம் குழந்தைகளை மேல் வகுப்பிற்குள் புகுத்துவதிலும் முனைந்திருப்பர். இவரிடையே தம்மைத்தாமே ஒழுங்கு படுத்திக் (Self discipline) கொள்ளும் மனப்பான்மையைப் பெற்றுள்ளனர். நடுத்தர வகுப்பு மக்கள் பெரும்பாலும் 'இரண்டாங் குழுவில் செயல்படுவதைக் காணலாம். கீழ் வகுப்பு மக்கள் குடும்பம், தொழில் போன்ற வரையறுக்கப்பட்ட குழுக்களில் மட்டுமே காணக்கூடும். சமுதாய அமைப்பில் ஒரு தனிமனிதன் பல தகுதிகளை ஏற்று அதற்கேற்பச் செயல்படுகின்றான். சமூகப் பிரிவுகள் இன்று சமுதாய அரசியல், உளவியல் சார்ந்த நோக்கங்களையும் எண்ணங்களையும் கொண்டு இயங்குகின்றன.

மார்க்ஸிஸ்ட் கொள்கையாளர் ' பதவி ' மனிதனுடைய பொருளாதார நிலையைச் சார்ந்துள்ளதென்று கூறுகின்றனர். இத்தகைய நிலை முதலாளித்துவ சமூதாயத்தில் வெளிப்படையாகக் காணப்படுகின்றது. இக்கோட்பாடு முற்றிலும் சமூக இயல் வல்லுநர்களால் ஏற்க இயலாது. ஏனெனில் பொருளாதாரம் ஒரு மனிதனின் செல்வத்தைக் குறிக்குமேயன்றி அவன் பதவியைக் குறிப்பிடவியலாது. சான்று ஒரு செல்வந்தனுக்குச் சமுதாய மதிப்பு முற்றிலும் இருக்க வேண்டிய அவசியமில்லை. மேலும், நிலக்கிழார் (Landlords) ஒரு காலத்தில் மற்றைய சமுதாய வகுப்பினரைக் காட்டிலும் உயர்வாகக் கருதப்பட்டனர். இதற்குக் காரணம் அவர்தம் சொத்து அல்லது செல்வம் ஆகும். ஆனால், சமுதாய வகுப்புகள் வகுப்புணர்வைக் கொண்டு (Class consciousness) உருவாக்கப்பட்டுள்ளன. எனினும், பொருளாதார அடிப்படைகளை முற்றிலும் துறக்கவியலாது.

மேக்ஸ் வெபர் என்னும் செர்மானிய சமூக வல்லுநர் சமுதாயப் பொருளாதார நிலை முற்றிலும் ஒப்புமையற்றது என்கிறார். அவர்தம் கருத்துப்படி பொருளாதாரம் மக்களின் செயல் திறமையை எடுத்துக் காட்டுகின்றது. சமுதாய முறை ஓரளவிற்குப் பொருளாதார நிலையைச் சார்ந்திருக்கக் கூடும். பொருளாதாரக் குழுவை

மக்களுக்கு ஒரே தன்மையைக் கொண்ட தொழிலைக் கொடுக்கும் வசதி யென்று கூறியுள்ளார். பொருளாதாரத்தை மேற்கொண்ட வகுப்பை மற்ற வகுப்பிலிருந்து விளக்கக் கூடும்.

வகுப்புணர்வு சமுதாய உள நிலை எண்ணங்களையும் நோக்கங் களையும் கொண்டு மக்களைப் பல வகுப்புக்களாகப் பிரித்துள்ளது. வகுப்புப் பற்று மேல் வகுப்பினரை ஒன்றுகூட்டிக் கீழ் வகுப் பினரிடமிருந்து வேறுபடுத்துகின்றது. மேல்வகுப்பினரின் செயல் பாடு கீழ் வகுப்பினரிடம் அன்புடனும் கருணையுடனும் பழகுவ தாகும். கீழ்வகுப்பினர் மேல்வகுப்பினரிடத்து மரியாதை செலுத்திக் கீழ்ப்படிந்திருத்தல். "உடையார்முன் இல்லார்போல்" என்று வள்ளுவர் இந்நிலையைத் தெளிவாக ஒப்புமைப்படுத்து கின்றார். சிற்சில வேளை சமுதாய மாற்றம் வகுப்புச் சண்டையில் முடியக் கூடும் மேலின வகுப்பினர், தம் பதவியை விட்டுக் கொடாமை; கீழினத்தவர் மேலினத்தவரை முறியடித்தல். இத் தகைய நிலை மாற்றத்தை ஏற்றுக் கொண்டுள்ள சமுதாயத்தில் காணக்கூடும்.

வகுப்புணர்ச்சி (Class sentiment) சூழ்நிலைக்கேற்ப மாறக் கூடும். சான்று : போட்டியிடும் வகுப்பு (Competitive class) மற்ற வகுப்புகளைக் காட்டிலும் வேறாக இருக்கும். மாறாக மூடப்பட்ட (Closed class) வகுப்பு சமுதாய மாற்றங்களை ஏற்க முன்வராது. ஆதலால், வகுப்புணர்வு கொண்ட குழுக்கள் மற்றைய குழுக்களை அழுத்தி இன்றைய சமுதாயத்தில் ஓங்கியுள்ளன.

மார்க்ஸிசின் கொள்கையாளர் வகுப்புப் பிரிவுகளை வேருடன் களைந்து சொத்துரிமையற்ற தொழிலாளரை உருவாக்க முயல் கின்றனர். எனினும், தொழிலாளிகள் பொருளாதாரச் சமுதாயப் பண்பாடு போன்றவற்றின் அடிப்படையில் முதலாளிகளிடமிருந்து பிரிக்கப்பட்டுள்ளனர். தொழிலாளர், பெரும்பாலும் முதலாளி களால் தங்கள் நலத்திற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளனர். பொதுவாகத் தொழிலாளிகள் ஒன்றுகூடி அவர்தம் இன்னல்களை அவ்வப்போது எடுத்து விளக்குகின்றனர். கம்யூனிசக் கொள்கைப் பேரேட்டில் (Communist Manifesto), "உலகிலுள்ள தொழி லாளர் அனைவரும் தங்கள் கொள்கைகளையும் தேவைகளையும் நிறைவு செய்து கொள்ளுதற்கு ஒருங்கிணைந்து செயல்பட வேண்டும்" என்று கூறப்பட்டுள்ளது. மார்க்ஸின் கொள்கை பெரும்பாலும் பொருளாதார நிலையையே குறிக்கின்றது. லெனின் மார்க்ஸின் கொள்கையைப் பின்பற்றி ரஷ்ய சமுதாயத்தை மாற்றி அமைத்துள்ளார். மார்க்ஸிசம், அரசியல் துறையில் ஓரளவிற்கு

முழுமை பெற்றிருப்பினும் சமுதாயத் துறையில் மக்களின் எல்லாத் தேவைகளையும் நிறைவேற்றும் ஆற்றலுடையதன்று. மேலும், இக் கொள்கை நடுத்தர வகுப்பினரின் குழு மனப்பான்மை, குழுவின் முக்கியத்துவம் ஆகிய இவை இரண்டையும் புறக்கணிக்கின்றது. மற்றும், முதலாளித்துவம் சிதைக்கப்படும் நோக்கில் நடுத்தர வகுப் பினராகிய வணிகர், தச்சர், கொல்லர் போன்ற சிறு தொழிலாளர் கள், விவசாயிகள் போன்றோர் தொழிலாளருமின்றி முதலாளியு மின்றி இடைப்பட்டு இன்னலுறுகின்றனர். அன்றியும் எழுத்தர், தொழில் நுண்ணறிவாளர், ஆசிரியர், மருத்துவர் போன்றோர் தற் காலச் சிக்கலான சமுதாயத்தில் ஊதியம் பெற்று வாழ்வோர் என்று கூறப்படுகின்றது. மேற்கூறிய எல்லா வகுப்பினரும் பொதுவாக தொழிலாளி என்னும் தலைப்பில் கொண்டு வரப்பட்டுள் ளனர். இத்தகைய வகுப்பினர்க்கு பொருளாதார வசதியுற்ற நீடித்த வாழ்க்கை இருக்கவியலாது. பொதுவாக நடுத்தர மக்கள் பொருளாதார வரிசையில் ஒரே பணியைக் குறிப்பாக ஏற்றுச் செயல்பட இயலாது. இத்தகைய மக்கள் வாழ்க்கை நடத்த அவர்தம் ஏழ்மை அவரைத் துன்புறுத்துகின்றது. இத்தகைய வகுப்பினர் குடியாட்சி மக்களாகவோ, ஆற்றலுடைய மக்களா கவோ கருதப்படார். ஏனெனில், குறைந்த அரசியல் ஈடுபாடு, பொருளாதாரப் பாதுகாப்பின்மை, ஆதிக்கம் செலுத்தும் குடும்ப முறைகள் போன்றவை. இத்தகைய இன்னலுற்ற தன்மைகளை அவர்தம்மிடையே உள்ள சமுதாயப் பொருளாதார நிலை வெளிப் படுத்துகின்றது

1947 ஆம் ஆண்டில் இந்தியா சுதந்திரம் அடைந்தது. அன்று முதல் இந்தியா பல துறைகளிலும் முன்னேற்றம் அடைய வழி வகுத்துள்ளது. இந்தியாவைத் தொழிற்கூடமாக்குதல் (Industria-lization) என்ற முக்கிய குறிக்கோளில் செயல்படத் தொடங்கிற்று. அக்குறிக்கோள் நாட்டின் பொருளாதார அமைப்பினை மட்டுமன்றி சமூக அமைப்பினையும் மாற்றி வருகின்றது. தொழில் மயமாக்கும் பிரச்சனை தொழிலாளர்களை மட்டுமன்றி முதலாளிகளையும் அரசையும் சார்ந்துள்ளது. முதலாளி, தொழிலாளி ஆகிய இரு பிரிவினர்க்கும் பொதுவான நோக்கங்கள் மிக இன்றியமை யாதவை. இந்தியக் குடியரசுக் கொள்கையைப் பின்பற்றத் தொடங்கியது முதல் பல இயக்கங்களைத் தோற்றுவித்து நாட்டின் தேவைகளைத் தாமே நிறைவேற்றிக் கொள்ள வழிவகுத்துள்ளது. சான்று, ஜமீன்தார் ஒழிப்புமுறை, உழுபவனுக்கே நிலம் சொந்தம், நிலமற்ற விவசாயிகளுக்கு விளைநிலங்களைப் பங்கிட்டுக் கொடுத்தல்-பூதான இயக்கம். கிராமத் தொழில் (Village Indus-tries), குடிசைத் தொழில் (Cottage Industries), கைத்தொழில்

(Handicraft Industries), தனியார் தொழில் (Private Industries) அதிக உற்பத்தித் தொழில் (Large Scale Industries) மற்றும் அடிப் படைக் கனரகத் தொழில் (Basic and Heavy Industries) போன்றவை ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் செயல்படுத்தப் படுகின்றன. இவை பெரும்பாலும் நம்நாட்டு மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிப்பதற்கும் நாட்டினை ஒரு பொருளாதார நாடாக உயர்த்தி தொழில் மயமாக்கவும் முயல்கின்றன. இன்றைய சமுதாயத்தில் நம் நாட்டு மக்கள் சுதந்திரம் பெற்று உரிமைகளை ஏற்று வாழ்கின்றனர்.

## 5. கூட்டம், பொதுமக்கள், பிரச்சாரம் (Crowd, Public, Propaganda)

சமூக அமைப்பு பலதரப்பட்ட குழுக்களையும் அவை செயல் படும் முறையையும் மாறுதல்களைப் புகுத்துவதையும் எடுத்துக் காட்டுகின்றது. பொதுவாக தோழமைக் குழுமம் அல்லது இனம் சங்கம் அல்லது மன்றம் வகுப்பு, இனக்குழுக்கள் ஆகியவை சமூக அமைப்பைப் பல்வேறு வகையில் எடுத்துக்காட்டுகின்றது. மேற்கூறிய குழுக்கள் பெரும்பாலும் நிலையானவை. இவற்றிற்கு மாறாகப் பொதுமக்கள் கூட்டம் (Public), கேட்போர் கூட்டம் (Audience), கூட்டம் (crowd) போன்றவை நிலையற்ற இயக்கங்கள். இவற்றை விளக்குதல் மிகவும் கடினம். எனினும் சமூக வல்லுநர்கள் இவ்வகையான நிலையற்ற இயக்கங்கள் மனிதனின் எண்ணங்களையும் நோக்கங்களையும் நடத்தைகளையும் எடுத்துக் காட்ட இன்றியமையாதவையாய் இலங்குகின்றன என்று கூறு கின்றனர். கூட்டம், கேட்போர் கூட்டம், பொதுமக்கள் ஆகிய இவை மனிதனுடைய தன்மை, அவன் வாழும் சூழ்நிலை, பழக்க வழக்கங்கள், இடம், சந்தர்ப்பம் முதலியவற்றை ஏற்றுக் கொண்டு விளக்குவதாம். சமூக உளவியல் வல்லுநர்கள், அரசியல் அறிஞர்கள் கூட்டம் என்ற நிலையற்ற குழுவை சமூக உளவியல் தன்மைகளின் மூலம் விளக்கியுள்ளனர். கூட்ட ஆராய்ச்சி யாளர்கள் தற்காலச் சமூக அறிவியலின் மூலம் ஒருங்கிணைந்த நடத்தை (Collective behaviour) பற்றிப் பல கருத்துக்களை வெளிப் படுத்தியுள்ளனர். சமுதாயத்தின் தனிப்பட்ட ஒரு பிரிவு, சமுதாயத்தின் மாற்றம் (Social change), மாற்றத்தின் இன்றியமை யாமை ஆகியவற்றை எடுத்துக் காட்டி விளக்குகின்றது. சமுதாயம் இருக்குமிடமெல்லாம் மனிதன் ஒன்றுகூடி வாழ் கின்றான். இதற்குக் காரணம் ஒருங்கிணைந்த பழக்க வழக்கங்கள், கொள்கைகள், சமூக அமைப்பு என்பன. மேற்கூறியவை

மனிதனின் கூடி வாழும் எண்ணத்தை (Herd instinct) வெளிப் படுத்துகின்றன. இம் மனப்பான்மை விலங்குகட்கே இன்றி யமையாத தென்று கூறப்பட்டபோதிலும் இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர், கூடி வாழும் தன்மை மக்களுக்கும் இன்றி யமையாதது என்ற கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

கூட்டு வாழ்க்கை மனித சமுதாயத்திற்கு மிக அவசியம். ஆனால், நிலையற்ற கூட்டம் அவசியமன்று. ஒரு கூட்டத்திற்குக் காரணம் ஒரு நிகழ்ச்சி அல்லது சமூகத்தின் மாறுதல் அல்லது தற்செயலாக ஏற்படும் விபத்து என்பவையாகும். மக்கள் எதிர் பாராமல் கூடி அவர்களது எண்ணங்களையும் அனுதாபங்களையும் தெரிவித்தல் ஒருங்கிணைந்த எண்ணம் என்று கூறப்படுகின்றது. கூட்டம் நிலையற்றதாயினும் ஓரளவிற்கு ஒற்றுமை பெறுகின்றது. எவ்வாறெனில், சமூக நிறுவனத்திற்குள்தான் கூட்டம் ஏற்படு கின்றது. கூட்டத்திற்குள் இருக்கும் மக்களுக்கு எழுச்சி (Emotion) கலந்து கொள்ளும் மனப்பான்மையை உறுதிப்படுத்துகின்றது. கூட்டத்தின் நடத்தை சிற்சில சமயங்களில் எல்லை மீறியும் போகக் கூடும். அதேநேரத்தில், சுவையற்று பலனற்றும் இருத்தல் கூடும். இதற்குக் காரணம் எல்லா மக்களுக்கும் ஒரே அளவில் புலனுணர்வு எழுந்து தனிப் புலனுணர்வை அழுத்துதலாகும். இக்கருத்து உள ஒற்றுமைச் சட்டம் (Mental unity) என்று கூறப் படுகின்றது. ப்ராய்டு (Freud) என்னும் உளநூல் வல்லுநர் கூட்டத்தில் பங்கேற்கும் மக்கள் ஆழ்ந்து கிடக்கும் தத்தம் இச்சைகளை வெளிப்படுத்துதல் என்று கூறுகின்றார். இவர்தம் கொள்கை கூட்டத்தின் சிற்சில செயல்களைத்தான் விளக்குகின்றது. பொதுவாகக் கூட்டத்திலுள்ள மக்கள் ஒரு தலைவனின் கருத்துக்களை ஏற்றுச் செயல்படுகின்றனர். ஆதலால் ஒரு கூட்டத்தில் குறிப்பிட்ட அந்நேரத்தில் ஒருவனைத் தலைவனாக ஏற்று அவன் கட்டளைக்கு இணங்கி நடப்பதாகும். கூட்டத்திற்குரிய இன்றி யமையாத பண்புகள்— ஒன்றுசேர்ந்து கோஷமிடுதல் ; பாடுதல் அல்லது ஆடுதல் என்பன. இச்செயல்கள் அவர்தம் ஒற்றுமையை வெளிப்படுத்துவதற்குரியவையாகும். மேலும், கூட்டு நடத்தை தனிமனிதனுக்கு ஓரளவு தன்னம்பிக்கை பாதுகாப்பு முதலிய வற்றை அளிக்கின்றது. ஒரு மனிதன் உறுதியான பழக்க வழக்கங்கள், தனி மனப்பான்மை இவற்றைக் கொண்டுள்ளவனா யின் அவன் கூட்டத்தில் கலந்து கொள்ள இயலாதவனாகின்றான். கூட்டம் முறைப்படுத்தப்படாத (அல்லது) கட்டுப்படாத ஒரு குழு. இதில் கூடுபவர்களைப்பற்றிய அறிமுகமோ, பழக்கமோ, ஒருவருக் கொருவரிடத்து இருக்க வேண்டிய தொடர்போ இருக்க முடியாது. அவர் தம்முள் காணப்படும் ஊடாட்டம் (Interaction) பொது

எழுச்சியைக் கொண்டு செயல்படுகின்றது. சிற்சில சமயங்களில் இவர்கள் அளவு மீறிய தவருன உணர்ச்சி ஆர்வம் மிகுந்தவர் (Fanatic) ஆகின்றனர். மேலும் தத்தம் ஆளுமை (Separate personality) யை இழந்து ஒரு சாதாரண மனிதஞக இயங்கு கின்றனர். அவர் தம்மிடையே காணப்படும் பாதுகாப்பு, வலிமை (அ) ஆற்றல் எல்லோரும் ஒன்று கூடிச் செய்வதால் ஏற்படுவ தாகும். கூட்டத்திலுள்ள அனைவரும் ஒரே நோக்கத்துடன் முறையான அல்லது முறையற்ற செயலைச் செய்வர். இப்போக்கு அஃதாவது கூக்குரல், மெய்ப்பாட்டசைவு (Gesture), தோற்ற அமைவு (Posture) போன்றவை விலங்குகள் இயல்பூக்கங்களைக் (Instincts) கொண்டு தாமாகவே செயல்படுவதை ஒத்ததாகும். அவ்வேளைகளில் மக்களுடைய பகுத்தறிவு (Rationality), சிந்தித்து முடிவு செய்தல் (thoughtful), முன்னறிவு (Forethought), முன்னேக்கு (Foresight) ஆகியவை செயல்படுவதில்லை. பெரும்பாலான எதிர் வினைவு (Reaction), போலச் செய்தல் (Imitative) என்று கூறப்படுகின்றது. மேற்கூறிய காரணங்கள் கூட்டத்திலுள்ள மக்கள் தாங்கள் எதிர்பார்த்த முடிவைப் பெற்று களைப்புற்று விட்டால் கூட்டம் கலைய நேரிடும். பொதுவாகக் கூட்டத்திலுள்ள ஒவ்வொரு மனிதனும் தன் செயல்களைச் சீர் தூக்காது செயல்படுவான். சான்ருகக் கிளர்ச்சி (Riot), வெறி (Fad), மன மாருட்டம் (Craze), பீதி (Panic), மிரள் திறளோட்டம் (Stampede) முதலியவை கூட்டங்களின் பண்புகள்; இத்தகைய பண்புகள் மற்றைய குழுக்களில் காண வியலாது. கூட்டத்தில் மக்களின் சிலிர்ப்பு (thrill), இதயத்துடிப்பு மிகுதல், பூரிப்பு (Exhilaration) போன்றவை பெருகிக்கொண்டு உச்சநிலையை அடையும். ஒரு கூட்டம் செயல்படத் தொடங்கி அதன் முடிவு காணும் வரை அதனைக் கலைக்க முடியாது. அதைக் கலைக்க விரும்பினுல் செயல்படும் கூட்டத்தின் கவனத்தை முற்றிலும் மாற்றியமைக்க வேண்டும். அதைச் செயல்படுத்துவதும் எளிதன்று.

கூட்டத்திலுள்ள மக்கள் தற்செயலாகக் (Accident) கூடிய மக்களாவர். எனினும் அவர்கள் ஒன்று சேர்வதற்கு ஏதாவதொரு காரணம் இருத்தல் வேண்டும். இவர்கள் ஒரே வகையான பணி, பருவம், எண்ணம், இனம் (ஆண் அல்லது பெண்) ஆகிய இவற்றைச் சார்ந்தவர்களாக இருக்கமாட்டார்கள். சான்ருக இலக்கியச் சொற்பொழிவாற்றப்படும் இடத்தில் பலதரப்பட்ட மக்கள் கூடிய கூட்டத்தைக் காணலாம். மேலும், எதிர்பாராத வகையில் ஓரிடத்தில் தீப்பற்றுமாயின் அங்கு பலதரப்பட்ட மக்கள் விரைவாகக் கூடுவதைக் காணக்கூடும். இவ்வண்ணம்

சமுதாயத்தில் அவ்வப்போது பரபரப்பான சூழலோ நிகழ்ச்சியோ ஏற்படுமாயின் மக்கள் கூட்டம் விரைவாகத் தோன்றுகின்றது.

கூட்டங்கள் பலவகைப்படும். விரைவாகத் தோன்றிக் கலையும் கூட்டம். இது சமுதாயத்தின் மற்ற பகுதிகளைப் பாதிப்பதில்லை. அத்தகைய கூட்டத்திற்கு வரைமுறையோ பண்பாடோ இருக்க முடியாது. இது தற்காலிகமானது. மற்றுமொன்று சூழ்நிலைக் கேற்பக் கூட்டப்படுவதாகும். இது பொதுவாக மக்களின் பாரம்பரிய நோக்கங்களையும் பழக்கவழக்கங்களையும் செயல்படுத்தி அக்குழுமம் நிலைபெறப் பயன்படுகின்றது. சான்றாகச் சமயச் சார்பான பொதுக் கூட்டங்களைக் கூறலாம். மேலும், அரசியல் கூட்டங்களும் மேற்கூறிய காரணிகளைக் கொண்டு செயல்படுகின்றன. திரைப்பட ரசிகர்கள், விளையாட்டைக் கண்டு களிப்போர் ஆகியோர் காட்சியையோ விளையாட்டையோ ஓரிடத்தில் அமர்ந்து கொண்டுதான் ரசிக்க முடியும். இதைக் கேட்போர் பார்ப்போர் கூட்டம் என்று கூறுவர். விருந்துக் கூட்டம், நடனக் கூட்டம் போன்றவை ஒரு முறையை மேற்கொண்டு விளங்குகின்றது. இத்தகைய கூட்டங்கள் அன்றாட வாழ்க்கையின் சலிப்பு, சோர்வு, இவற்றைப் போக்குகின்றன. சிற்சில சமயங்களில் மக்கள் ஒரு பொது நன்மையைப் பெறக் கூட்டத்தில் பங்கு கொள்ள நேரிடும். சான்றாக, ரயில் நிலையத்தில் பயணச் சீட்டு பெறுதல், பேருந்தில் ஏறுவதற்கு வரிசையில் நிற்றல் போன்றவற்றைக் கூறலாம். இத்தகைய கூட்டத்தில் ஒருவர் மற்றவரைப் பாதிக்கக் காரணமாகின்றனர். எவ்வாறெனில் ஒருவன் அடைய விரும்பும் வெற்றியை மற்றவர்கள் தடுக்கக் கூடும். இத்தகைய கூட்டங்கள் மக்களின் எளிய வாழ்க்கைக்குத் தடையாக இருக்கின்றன. மக்கள் வெள்ளம், தீ, போர் முதலிய சூழ்நிலைகளிலிருந்து வெளியேறுவராயின் இவர்களைக் கிலி பிடித்த கூட்டம் என்று கூறுவர் சிற்சில சமயங்களில் மக்கள் பொதுக் காட்சியாளர் (spectator) கூட்டத்தில் சேர்ந்து கொள்வர். கொள்ளைக் கூட்டம் (Acting mobs) கிளர்ச்சிக் கூட்டம் போன்றவற்றைச் செயல்படும் பெருங்கூட்டம் என்று கூறுவர். இவை பெரும்பாலும் பொதுச்சட்ட விதிகளைப் புறக்கணித்து அவர் தாம் அடையவேண்டிய முடிவுக்கு ஏற்பச் செயல்படுவதாகும். மது மயக்கத்தில் குழப்பம் விளைவிக்கும் கூட்டம், ஒழுக்கமின்றி நடக்கும் கூட்டங்களை மறக் கூட்டம் (Immoral crowd) என்று கூறுவர்.

மேற்கூறிய பலதரப்பட்ட கூட்டங்களை மூன்று பெரும் பிரிவாகப் பிரிக்கலாம். 1. சமுதாய அமைப்பைச் சார்ந்து

செயல்படும் கூட்டங்கள் (Crowds leased on social structure). 2. தற்செயலாகத் தோன்றும் கூட்டங்கள் (Casual crowds), 3. தடை மீறும் கூட்டங்கள் அல்லது சட்டப் புறக்கணிப்புக் கூட்டங்கள் (Lawless crowds). கூட்டங்களில் பல பிரிவுகள் ஏற்கப்படினும் அவற்றிடையே முரண்பாடு வெகுவாக எழுவதில்லை. மக்கள் நெருங்கி இருத்தல், ஒருவரை ஒருவர் தூண்டுதல், குறைந்த காலமே நீடித்தல், முறையற்ற ஊடாட்டம், ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்ளாமை போன்றவை—மனித சமுதாயத்தின் கூட்டங்களில் மக்களைச் செயல்படுத்தத் துணை செய்கின்றன.

குறைந்த எண்ணிக்கையுள்ள மக்களின் குழுவைப் பொது மக்கள் கூட்டம் என்று கூறலாம். இத்தகைய கூட்டம் பொதுவாக ஒன்று சேர்வதில்லை. கூட்டத்திலுள்ள மக்களின் ஊடாட்டம் மறை முகமாகப் புரளி (Rumour), வம்பு (Gossip), வானொலி, செய்திப் படம், தொலைக் காட்சிக் கருவி ஆகிய இவற்றின் மூலம் பரப்பப் படுகின்றது. பொதுமக்களின் இத்தகைய தன்மை ஒரு சாதாரணக் கூட்டத்தைக் காட்டிலும் உறுப்பினர்களை உள்ளடக்க முடிகின்றது. சான்றாக, இந்திய நாட்டுப் பொதுமக்கள். பொதுமக்கள் கூட்டம் சிந்தனை, உணர்ச்சி போன்றவற்றைப் பொதுமக்களின் நோக்கம் எண்ணம் ஆகிய இவற்றின் மூலம் பரப்புகின்றது. சான்றாகப் பொதுமக்களின் வாக்களிப்பு. பொதுக் கூட்டத்திற்கு மாறாகப் பொதுமக்களின் குழு பகுத்தறிவு, முன்னறிவு முதலியவற்றை மேற்கொண்டு முடிவெடுக்கின்றது. பொதுவாக ஒவ்வொரு தனி மனிதனும் அவன் தன் அறிவுத் திறத்தைப் பயன்படுத்துகின்றான். பொதுப் பண்பாடு, அறிவியல் வாய்ப்புகள் பொதுமக்களுக்குப் பெருமளவில் பயன்படுகின்றன.

பொதுமக்களின் பொதுக் கருத்துக்கள் ஒரே முறையில் முடிவு செய்யப்பட்டாலும் அவற்றில் பிழை இருக்க நேரிடும். சான்றாக ஒரு தொழிற்சாலையை உண்டாக்க ஒருதரப்பட்ட பொதுமக்களின் கருத்து வேறுபட்ட பொதுக் கருத்துக்கு முரணாக இருக்க நேரிடும். ஆதலால் பொதுக்கருத்து முடிவுகளும் எதிர்பாராத வகையில் உருவாக்கக் கூடும். சான்றாக மக்கள் வாக்களிப்பு முறை (Election).

பொதுக்கருத்துத் தொகுக்கப்பட்ட விளைவு. ஆதலால், அது ஒரு தனிமனிதன் அல்லது ஒரு குழுவின் குறிக்கோள் ஆகா. பல எண்ணங்களையும் நோக்கங்களையும் ஒன்றுகூட்டி முடிவெடுத்த தாகவும் பொதுவாகப் பொதுக் கருத்து பொதுமக்களின் எண்ண ங்களையும் நோக்கங்களையும் வெளிப்படுத்துகின்றது. சான்றாக ம

விலக்கு, கட்டுப்பாடற்ற வணிகம் போன்றவை. மேற்கூறிய முடிவு ஏற்றுக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. எடுத்த முடிவு ஏற்கப்படுமா? படாதா? என்ற முடிவைப் பெற ஆதரவாளர். ஆதரவற்றவர் (For against) என்று பொதுமக்களைப் பிரித்து எண்ணிக்கையில் இட்டு முடிவுச் செய்யப்படுகின்றது. எல்லாப் பொதுமக்களும் ஒரு நிகழ்ச்சியில் ஈடுபட வேண்டிய அவசிய மில்லை. பொதுமக்களை ஒரு முறைக்கு அல்லது வழிக்குப் பிரசாரத் தின் (Propaganda) மூலம் வழிக்குக் கொண்டு வருகின்றது. பிரச் சாரம் மக்கள் ஒரு முடிவை ஏற்றுக்கொள்ளப் பயன்படுகின்றது. பிரச்சாரம் செய்யும் ஒரு தனி மனிதனை செய்யப்படும் பிரசாரத்தை தான் ஏற்று விளக்குவானுயின் அதைக் கல்வியின் மூலம் புகட்டும் விதம் என்று கூறுவர். எந்த ஒரு நாட்டின் சமுதாயத்திலும் பிரச்சாரம், அரசியல், வணிகம் போன்ற துறைகளில் பெருமள விற்குச் செயல்படுகின்றது. அரசியல் துறையில் பெருமளவு பிரச்சாரம். அரசியல் துறையின் ஆற்றலை எடுத்துக்காட்ட மிக அவசியம். வணிகத் துறை பிரச்சாரத்தைப் பயன்படுத்திப் பெருமளவிற்கு வளர்ச்சியடைந்துள்ளது. எனினும் பிரசாரத்தைக் கட்டுப்படுத்தவும் அரசியல் வழி வகுக்கின்றது. இத்தகைய முறையைத் தணிக்கை (Censorship) செய்தல் என்று கூறலாம்.

நவீன நுண்ணியல் (Modern Technology) மேன்மையடைந்த இந்நாளில், பொதுமக்கள், பிரச்சாரம் ஆகியவை முக்கியத்துவம் பெற்றுள்ளன. பிரச்சாரம் ஆயிரக்கணக்கான மக்களுக்கு நன்மை பயக்கின்றது. பொதுமக்களின் அறிவைப் பெருக்க பிரசாரம் முன் வந்துள்ளது. பிரச்சாரத்தை வெளியிடப் பொதுக்கல்வி, பொது மேடையில் சொல்லாடல், பொதுப் பிரச்சாரம், பொது விளம்பரம் இவற்றின் மூலம் பொது மக்களுக்குத் தெரிவிப்பதாகும். தற்காலச் சமுதாயம் பொதுமக்களின் கருத்து, நடத்தை இவற்றைச் சார்ந் துள்ளது. தற்கால நாகரிகச் சமுதாயத்திற்குப் பொதுக் கருத்து விசையியக் காற்ற (Dynamic)லைக் கொடுக்கின்றது.

# 7. நிறுவனங்கள்

(INSTITUTION)

## 1. பொருளாதார நிறுவனம்

## (Economic Institution)

பொருளாதாரம் மிகவும் அடிப்படையான ஒரு நிறுவனம். அது மனிதனின் பொருளாதாரச் செயல்களைக் கடைப்பிடித்து நிறுவப்பட்டுள்ளது. பொருளாதாரச் செயல்கள் மனிதன் தன் தேவைகளாகிய உணவு, உடை உறையுள் விருப்பம், நலம் முதலிய பலவகை தேவைகளைத் தானே தேடிக்கொள்ளும் முறைகள் என்று கூறப்படுகின்றன. அவை மனிதனுடைய தேவைகளை ஓரளவிற்கு எடுத்துக்காட்டுகின்றன. மேலும் பொருளாதாரம் பொருள் உற்பத்தி, தேவை முதலியவற்றின் தரத்தை எடுத்துக்காட்டுகின்றது. பொருளாதாரத்தின் வாயிலாக அடைந்த நன்மைகளைப் பொருளாதாரச் சொத்து என்று கூறலாம். மனிதனுக்குப் பொருள்கள் எப்படிப் பயன்படுகின்றன என்பதை நாம் பயன் (Utility) என்று கூறுகிறோம். ஒருவனிடம் செலாவணிக்குப் பொருளோ அல்லது தொழிலாற்றலோ இருக்குமாயின் அதுவே அவனது சொத்து என்று கருதப்படுகின்றது. சிற்சில பொருள்கள் மனிதனுக்கு மிக இன்றியமையாதவையாகும். காற்று, ஒளி, நீர் போன்றவை. இவற்றிற்கு எதிராகப் பொருளாதாரப் பொருள்கள் ஓரளவிற்கு மனிதனுடைய கட்டுப்பாட்டிற்கு உட்பட்டதும் எளிதில் கிடைக்கப் பெறாத பொருளுமாகும்.

பொருளாதாரப் பொருள்களை இருவகைப் பிரிக்கலாம். அவை 1. மூலதனப் பொருள், 2. நுகர்வோரின் பொருள் என்பன. மூலதனப் பொருள்கள் மனிதனால் படைக்கப்படாதவை என்றாலும் அவனுக்குத் தேவையான நுகர்பொருள்களாகிய உணவு, உடை, உறையுள் முதலியவற்றைத் தோற்றுவிப்பதற்குத் துணைபுரிவன வாகும். அவை நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் என்பன. விலை

என்பது ஈடான தொகையைக் கொடுத்து ஒரு பொருளை பெறுவ தாகும். மேலும் ஒரு பொருளை உண்டாக்குவதற்குத் தேவை யான பொருள்கள், கூலி முதலியவையாகும். இலாபம் என்பது பொருளின் விலை போக எஞ்சியதாகும்.

மனிதன் பல விதங்களில் தன் சூழ்நிலையைப் பொருளாதார நிறுவனங்களைக் கொண்டு தன்னுடைய தேவையைப் பூர்த்தி செய்ய முயல்கின்றான். பொதுவாகப் பொருளாதார நிறுவனத்தை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 1. உணவைத் தேடிச் சேமிக்கும் நிறுவனம் (Collecting Economy). 2. எளிய மாற்றம் ஏற்பட்ட பொருளாதாரமாகும் (Simple Transformative Economy). 3. தொழில் நிறுவனம் (Industrialization). 4. பல மாற்றங்கள் உள்ள சிக்கலான நிறுவனம் (Complex Transformative Economy).

உணவைத் தேடும் பொருளாதாரம் பண்டைக்கால மக்களால் பயன்படுத்தப்பட்டது. அவர்கள் காய் கனி, கிழங்கு, மீன் முதலியவற்றைச் சேமித்தும் உண்டும் மரம், குகைகளில் பதுங்கி யிருந்தும் காலத்தைக் கழித்து வாழ்ந்தனர். இவர்கள் நாகரிக மற்றவர்கள். இக்காலம் போல கருவிகளைப் பயன்படுத்த அறி யாது இயற்கை அன்னை கொடுத்தவற்றையே உண்டு வாழ்ந்து வந்தான். எனினும் மனிதன் பண்டைக்கால முதல் கருவிகள் செய்தும் அவற்றைப் பயன்படுத்தியும் இருந்தான் என்பதைத் தொல் பொருள் (Archeology) ஆராய்ச்சியிலிருந்து தெரிந்து கொள் கின்றோம். மனிதன் பண்டைக்காலம் முதல் இக்காலம் வரை பயன்படுத்திய கருவிகளிலிருந்து அவன் மூன்று முக்கியக் கட்டத்தைக் கடந்துள்ளான் என்பது நன்கு விளங்குகின்றது. அவையாவன 1. பழைய கற்காலம் (Old stone age), 2. மத்திய கற்காலம் (Middle stone age), 3. புதிய கற்காலம் (Neolithic age or Metal age).

இன்றும் சிற்சில பழங்குடி மக்கள் [உ-ம் காடர் (Kaddar)] காய், கனி முதலியவற்றை உண்டு பழைய கற்கால மக்களைப் போலவே வாழ்கின்றனர்.

மத்திய கற்காலத்தில் மனிதன் உழுதும் ஆடு மாடுகளை மேய்த்தும் பழக்கியும் அவற்றின் உதவியால் உணவுப் பொருள் களை உற்பத்தி செய்தான். இவர்களிடத்து ஆடுமாடு மேய்த்தல், வேட்டையாடுதல் போன்றவை மிகுதியாகக் காணப்பட்டாலும் இவை மாறி உழவுத் தொழிலைப் பெருக்கி ஒரு பரந்த இடத்தில் குடியேறி மண்பாண்டம் செய்தல், நெசவுத் தொழில் முதலிய வற்றை மேற்கொண்டும் தமக்குரிய உறைவிடத்தை அமைத்துக்

கொண்டும் வாழத் தொடங்கினர். இக்காலத்தில்தான் உழவுத் தொழிலும் கலப்படப்பொருளாதாரமும் (Mixed Economy)தோன்ற லாயின. இன்றும் பழங்குடி மக்களாகிய முண்டா (Munda), சண்டால் (Santhal), ஓரான் (Oran) முதலியோரிடத்து இப்பழக்கங் கள் காணப்படுகின்றன.

மாற்றம் ஏற்பட்ட பொருளாதாரக் கட்டத்தில் மனிதன் தன் பொருள்களை விற்றும் தனக்குத் தேவையான பொருள்களை பெற்றும் வாழ்ந்து வந்தான். இத்தகைய பொருளாதாரக் கொடுக்கல் வாங்கல் என்னும் கருத்து சமயம், சமுதாய எண்ணம், மன நிறைவு முதலிய இவற்றை அளித்தது. சில வேளைகளில் ஒரு பொருளைக் கொடுத்து மற்றொன்றைப் பெறுதல் ஒரு விழாவாகவும் கொண்டாடப்பட்டது.

தொடக்கத் தொழில் நிறுவனத்திற்கும் எளிய மாற்றம் ஏற்பட்ட பொருளாதாரத்திற்கும் அடிப்படை வேறுபாடுகள் அதிகம் காணப்படுவதில்லை. எனினும் பழங்காலப் பொருளாதார விதிகள் பழங்குடி மக்களால் மேற்கொள்ளப்பட்டு வந்தன. ஆரம்பத் தொழில் நிறுவனம் சரித்திரத்தில் நாகரிகம் தொடங்கிய காலத்தைக் குறிக்கிறது பல மாற்றங்கள் கொண்ட பொருளா தாரத்தை இருவகையாகப் பிரிக்கலாம் 1. தொழில் நிறுவனம், 2. தற்காலத் தொழில் நிறுவனம்.

தற்காலத் தொழில் நிறுவனம் 18ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் தொழிற் புரட்சி தொடங்கியது முதல் ஏற்பட்டது எனக் கூறலாம். இதுமுதல் நெசவாளர், தச்சர் முதலியோர் தத்தம் தொழில்களை ஏற்றுக்கொண்டு தொழில் வளர்ச்சி வாணிபம் முதலியவற்றை நடைமுறைக்குக் கொண்டு வந்தனர். எனவே, பொருளாதார நிறுவனம் பல கிளைகளை மேற்கொண்டு வளரத் தொடங்கியது. அதனுள் பலதரப்பட்ட சமூக நிறுவனங்கள் தோன்றலாயின. அவை 1. படை மானியத் திட்டம் (Feudal System), 2. கில்டு முறை, (Guild System) 3. இல்லத் தொழில் முறை (Domestic System) எனப்படும்.

படைமானியத் திட்டம் அல்லது மேனர் பண்ணை முறை (Manorial System) இங்கிலாந்து ஐரோப்பா முதலிய நாடுகளில் 9 ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை கையாளப் பட்டது. ஜமீன்தார்கள் பண்ணை யாட்களை வாடகைக்கு அமர்த்தி உற்பத்தியைப் பெருக்கி வந்தார்கள். இம்முறை நம்நாட்டு ஜமீன்தாரி நிறுவனத்தை ஒத்தது. ஒவ்வொரு பண்ணையும்

எல்லா வகையிலும் தகுதியுடையதாக விளங்கியது. தொழிலாளர் செய்த வேலைக்கேற்ற ஊதியம், பாதுகாப்பு உணவு, உடை போன்றவையாகும். இத்தகைய முறை நாளடைவில் குறைய லாயிற்று.

தொழில் முறை கில்டு முறையை அழுத்தி 19-20 ஆம் நூற்றுண்டு களில் மேல்நோக்கி வளர்ந்தது. கில்டு முறை என்பது ஒருதரப் பட்ட தொழிலை மேற்கொண்ட பல மக்களை உள்ளடக்கிய நிறுவன மாகும். இந் நிறுவனம் நகர்ப்புறத் தொழில்கள் வளரவும் அவற்றில் ஏற்பட்ட சிக்கல்கள் நீங்கவும் துணை நின்றது. இத்தகைய கில்டு முறை இரண்டாகப் பகுக்கப்பட்டு வர்த்தகக் கில்டு (Merchant guild), தொழில் (Craft guild) கில்டு என வளர்ந்தன. வர்த்தகக் கில்டு வர்த்தகர்களின் பொருளாதார ஊக்கத்தை மேம்படுத்தவும் சமூக அரசியல் நோக்கத்தைப் பயன்படுத்தவும் அவரவர் தத்தம் தொழில் உரிமையைத் தாமே வைத்துக் கொள்ளவும் பல தொழிற் சங்கங்களை ஒன்று கூட்டவும் பயன் பட்டது. தொழில் கில்டு பலதரப்பட்டது. தொழில் முறைகளுக் கேற்ப பலதரப்பட்ட தொழில் கில்டுகள் உருவாயின. தச்சர், தட்டார், நெசவாளி என்பன. இத்தகைய கில்டுகள் அவரவர் உற்பத்தி செய்த பொருள்களை அங்காடிக்கு எடுத்துச்சென்று, விலையை உறுதி செய்து அவற்றை விற்று தொழிலை நீடிக்கச் செய்வதை முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளன. கில்டுகளின் செயல்கள் பொருளாதார நோக்கத்தையே அடிப்படையாகக் கொண்டது மல்லாமல் மத சார்ப்பற்ற நோக்கங்களிலும் ஈடுபட்டு வந்தன. எனினும் அமெரிக்காவைக் கண்டுபிடித்த பின்னர் இங்கிலாந்தில் எட்டாம் ஹென்றி மன்னர் கில்டுகளின் சொத்துரிமையைப் பறித்துக் கொண்டதாலும் கிழக்கிந்திய வாணிகம் வளரத் தொடங்கியதாலும் பொருளாதார மாறுதல்கள் ஏற்பட்டு கில்டுகள் வளராததுமன்றி அடியோடு புறக்கணிக்கப் பட்டன.

கில்டு முறைகள் சிதைந்ததுமுதல் ஒரு வகையான முதலாளித்துவம் தொடங்க ஆரம்பித்தது இந்நிறுவனம் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையே ஒரு உடன்பாட்டை ஏற்படுத்தி அதன்மூலம் வாணிகத்தைப் பெருக்க முயன்றது. இதுமுதல் முதலாளித்துவம் வளர்ச்சியடைந்து தொழிற் புரட்சி, பிரான்சுப் புரட்சி முதலியவற்றை முன்னேற்ற மடையச் செய்தது.

**தற்காலத் தொழில் நிறுவனம்** (Modern Industrialism)

ஆர்னல்டு டாயன்பி (Arnold Toyenbe) என்னும் அறிஞர் தொழிற்புரட்சி என்னும் தீவிர முற்போக்குடைய பொருளாதார

நுட்பத் தொழில் வளர்ச்சி 1770 முதல் 1840 வரை இங்கிலாந்தில் ஏற்பட்டதால் நாம் இப்போது இருக்கும் காலமாகிய தொழில் நிறுவனம் என்னும் கட்டத்தைக் காண்கின்றோம். இக்கட்டத்தில் மிகவும் மேம்பட்டது இயந்திர சக்தியைக் கொண்டு இயந்திரத்தைப் பயன்படுத்துவதாகும். எடுத்துக் காட்டாக நீரின் மூலம் மின் சக்தியை உண்டாக்குதல். உற்பத்தி வாணிபம் இவை முற்போக்கடைந்ததுமுதல் முதலாளித்துவம் பெருகியது. புதிய தொழிற் சங்கங்கள் தோன்றியது முதல் பொருளாதார முறை மாற்றப்பெற்று மனிதனுக்கு பல நன்மைகளைத் தோற்றுவித்ததுமன்றி சமூகத்தில் பல சிக்கல்களையும் புகுத்தியுள்ளது. பொருளாதார முடிவுகள் உற்பத்திப் பெருக்கம் (Greater Production) பகுத்துக் கொடுத்தல் (Distribution) முதலியவற்றை விளக்கிக் காட்டுகின்றன. மேலும் தொழில் முறைகள் கலையின் பெருக்கம், அறிவியலின் வளர்ச்சி, பொதுக் கல்வி முதலியவற்றை எடுத்துக் காட்டி மனிதனின் முன்னேற்றத்தைத் தெளிவு படுத்தியுள்ளது.

### (அ) தொழிற், சங்கம் (Trade Union)

வணிகர் குழுக் கொள்கை, தொழிலாளர்களை ஒன்று சேர்த்து அவர்களது முக்கியத் தேவைகளை ஒரே மனப்பான்மையுடன் கேட்பதாகும். இத்தகைய குழுக்கள் பிரிட்டன், அயர்லாந்து போன்ற நாடுகளில் 1729ஆம் ஆண்டு முதல் புறக்கணிக்கப்பட்டு வேறு எந்த விதத்திலும் தொழிலாளிகளுக்கு நன்மையைக் கொடுக்க மறுத்தது. மேலும் 1799ஆம் ஆண்டு பிரிட்டிஷ் சட்டத்தின்படி எல்லாத் தொழிற்குழுவும் முதலாளி தொழிலாளிகட்கு இடையேயுள்ள ஒற்றுமையைக் குலைக்க ஏற்பட்டதாகக் கருதப்பட்டது. எனினும் நாளடைவில் தொழிலாளர் சங்கங்கள் ஏற்கப்பட்டுப் பொருளாதார அமைப்பிற்கும் முற்போக்கடைந்த நாடுகளுக்கும் இன்றியமையாதன என்ற கொள்கை பரவலாயிற்று.

**அரசு முதலாளித்துவம்** (State Capitalism) என்னும் கொள்கை மார்க்ஸிஸ்ட் (Marxists) கொள்கைகளை மேற்கொண்ட நாடுகளில் பரவலாயிற்று. இக் கொள்கை முதலாளித்துவத்திற்கு முரணாக இருந்தபோதிலும் பெரும்பாலும் அதை ஒத்துள்ளது. கார்ல் மார்க்ஸ் (Karl Marx) என்னும் பொருளாதார நிபுணர் தொன்மைப் பொருளாதாரிகளைக் குறை கூறியபோதும் அவர்களது கருத்துகளை மேற்கொண்டு தாம் வாழ்ந்து வந்த தொழிற் சமுதாயத்தின் நன்மைகளை ஆதரித்தும் மற்றும் பழங்காலப் பொருளாதாரக் கொள்கைகளைப் புறக்கணித்தும் ரிக்கார்டோ என்னும் அறிஞர் ஏற்படுத்திய தனி முதலாளித்துவம் என்னும் கொள்கையை வலியுறுத்தினர். இவ்விரு கொள்கை

யாளருக்கும் தொழிலே பொருளாதார மதிப்பு. மேலும் பொருளாதார ஒற்றுமையே சமூகத்தைக் கட்டுப்படுத்தும் சிறந்த ஆதாரம். அரசு முதலாளித்துவம் தனிமுதலாளித்துவம் இரண்டும் தனிமனிதனின் தேவைகளை முற்றும் புறக்கணிக்கின்றன. தனிமுதலாளித்துவம் சமுதாயத்தை மதிப்பதில்லை. அரசு முதலாளித்துவம் தனிமனிதனைப் பொருட்படுத்துவதில்லை. முதற்கொள்கை இலாபத்தையே மேற்கொண்டு சொத்து உரிமை முதலியவற்றைக் கையாள்கின்றது. இரண்டாவது கொள்கை சொத்து உரிமை முதலியவை அரசின் கீழ் இருப்பதால் அவற்றைப் பற்றி கவலைப் படுவதில்லை. முதற் கொள்கையின்படி எல்லாத் தனிமனிதனும் அரசு முதலீட்டில் பங்குகொள்ள உரிமை உண்டு என்றும் இரண்டாவது கொள்கையின்படி அரசுக்கும் உரிமை உண்டு என்றும் கருதப்பட்டது. மேலும், முதலாளித்துவம் தனிமனிதனுக்கு கொடுக்கப்பட்டால் அது ஒரு கொடுமை தரக்கூடிய ஆயுதமாக மாறக் கூடும் என்றும் அஞ்சப்பட்டது. சமூகம் தனிமுதலாளித்துவத்தை ஒருபோதும் ஏற்பதில்லை. அரசு முதலாளித்துவம் ஓரளவிற்குத் தனிமனிதனை மதிப்பதில்லை. ஏனெனில் அவன் தன் தனித் தன்மையைக் கொண்டு பொருள், உரிமை முதலியவற்றை அடிமைப்படுத்த முயல்கின்றான். அரசு உரிமை, பொருள் முதலியவற்றை ஓரளவிற்குப் பொருட்படுத்துவதில்லை. ஏனெனில் இவை அரசின் ஆளுகையில்தான் உள்ளன. சுருங்கக் கூறின் தனி முதலாளித்துவம் மேலோங்கி இருந்த காலத்திலும் முதலாளிகள் முழு அரசியல் உரிமையை ஏற்றுச் செயல் புரிந்ததாகத் தெரியவில்லை.

இவ்விரு முதலாளித்துவத்திற்கும் பல வேற்றுமைகள் உள்ளன. அரசு அதன் கரை காணா உரிமையின் மூலம் மனிதனுக்குப் பாதுகாப்புக் கொடுக்கவல்லது. எனினும், உரிமையின்றிப் பாதுகாப்பு இருந்தால் அது அரசின் வல்லமையைத்தான் எடுத்துக் காட்டுகின்றது. இத்தகைய சமுதாயத்தில் மக்கள் அவர்தம் எண்ணங்களையும் குறைகளையும் எடுத்துக் காட்டவோ தங்களை வலிமைப்படுத்திக் கொள்ளவோ ஓரளவிற்கு இயலாதவர் ஆகின்றனர்

தலையிடாக் கொள்கை (Leissey Fair Theory) வணிகர் குழுவிற்கு எதிர்ப்பாகச் சமுதாயத்தில் இருந்தும் அடிமைத் தன்மை, தொழிலாளிகளைச் சுரண்டல் முதலியவை பெரும்பாலும் பெருகி வந்தன. தொழிலாளர் சங்கம் நம் நாட்டில் பல வகையிலும் முன்னேற்ற மடைந்துள்ளது. அவை பெரும்பாலும் தொழிலாளர்களின் குறைகளைத் தீர்க்கவும் ஓரளவிற்கு முதலாளிகளின் உரிமைகளைப் பாதுகாக்கவும் தோற்றுவிக்கப்பட்டுள்ளன.

தொழிலாளர் சங்கங்கள் பத்தொன்பதாம் நூற்றுண்டிலிருந்து ஆக்கநிலை சக்தியை (Gained Momentum) மேற்கொண்டு முன்னேற்ற மடைந்துள்ளன. முதலாளிகள் தங்களுடைய மிகுதியான உழைப்பைப் பெற்றுக்கொண்டு மிகக்குறைந்த ஊதியத்தையே அளிக்கிருர்கள் என்ற எண்ணம் தொழிலாள ரிடையே நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்து தற் போது உச்ச நிலையை அடைந்துள்ளது. இவ்வெண்ணத்தை நம் நாட்டில் ஒவ்வொரு தொழிலுக்கும் தொழிலாளர் சங்கம் இருப்பதைக் கொண்டு அறிகிறோம். எடுத்துக்காட்டாக நெசவுத் தொழிலாளர் சங்கம் காரோட்டிகள் சங்கம் என்பன. இக் காலத் தொழிலாளர்களின் முக்கியக் கோரிக்கை என்னவென்ருல் அவர் கட்குப் போதுமான வீடு, மருத்துவம், பள்ளி போன்ற வசதிகள் இல்லை என்பது தான்.

### (ஆ) தொழிலாளிகளின் கோரிக்கைகள்

இவ் வசதிகளைப் பெறத் தொழிலாளர்கள் பல முறைகளை வகுத்துள்ளார்கள். அவர்தம் கோரிக்கைகள் மூன்று வகைப் படும். 1 குறைந்த மணிநேர வேலை. 2. வேலைக்குத் தகுந்த ஊதியம். 3. மிதமான வசதிகள் என்பன. இவற்றைப் பெறுவதற்குத்தான் தொழிலாளர் சங்கங்கள் ஏற்படுத்தப் பட்டுள்ளன. இவற்றைப் பெறத் தொழிலாளர்கள் ஒரு சக்தி வாய்ந்த கருவியாகிய வேலை நிறுத்தத்தை (Strike)ப் பயன் படுத்துகின்ருர்கள்.

வேலை நிறுத்தம் என்பது தொழிலாளிகள் செய்யும் வேலையை நிறுத்தி முதலாளிகட்கு லாபம் வராமல் செய்வதாகும். இப்படிச் செய்வதால் முதலாளிகட்கு இழப்பு ஏற்படுகின்றது. வேலை நிறுத்தம் பல வகைப்படும். 1. தொழில் செய்யும் இடத்திலேயே அமர்ந்து வேலை செய்யாதிருத்தல் (Sit down Strike). 2 வழி மறித்தல் அல்லது கதவடைப்பு (Lock out). 3. தொழில் செய்யும் இடத்திலேயே அமர்ந்து வேலையை நிறுத்தல் (Stay in Strike). 4. கருவிகளை உபயோகப்படுத்தாமல் இருத்தல் (Pen down Strike) 5. தொழிலை மிகவும் நிதானமாகச் செய்து உற்பத்தியைக் குறைத்து அதன் விளைவால் முதலாளிக்கு இழப்பினை உண்டாக்குதல் (Cessation of work). 6. உண்ணு விரதம் இருத்தல் (Hunger Strike). 7. தொழில் நிறுத்தத்தை ஊர்வலம் மூலமாக மற்றவர்கட்குத் தெரிவித்தல் (Strike procession). இவ்வண்ணம் தொழிலாளிகள் தங்கள் மனக் குறைவைத் தெரிவித்து உரிமைகளைப் பெற முற்பட்டுள்ளார்கள்.

ஆனால் உரிமைகளைப் பெறுவதும் இழப்பதும் தொழிலாளி-முதலாளிக்கிடையே உள்ள தொடர்பையும் நட்பையும் பொறுத்தது. தொழிலாளிகளின் கை ஓங்கத் தொடங்கினால் நாளடைவில் நாடு சீர்குலைந்து போகக் கூடும்; அதேசமயத்தில் முதலாளிகளின் ஆதிக்கம் ஓங்கினால் தொழிலாளிக்கும் முதலாளிக்கும் இடையே ஒற்றுமையின்றி நாட்டின் வளம், தொழிற் பெருக்கம் முதலியவை குன்றிப்போக நேரிடும். எந்த நாட்டிலும் இவ்விரண்டும் முழுமையாக நிலைத்திருக்க முடியாது. நம் நாட்டில் இவை இரண்டும் குடியரசுத் திட்டங்களின் மூலம் நடைமுறைக்குக் கொண்டுவரப்படுகிறது. நம் நாட்டில் தனியார் துறை (Private Sector), பொதுத் துறை (Public Sector) இவை இரண்டும் ஒன்றி நாட்டின் வளத்தை மேலோங்கச் செய்துள்ளது. பொதுநல அரசு (welfare State), பொதுவுடைமைக் கொள்கை (Socialist pattern of Society) இவை இரண்டும் குடியரசுக் கொள்கையின் கீழ் ஒரு பெரிய செய்முறை (அ) பரிசோதனையாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இப் பரிசோதனையின் முடிவு மக்களின் ஒற்றுமை, பொறுப்புணர்ச்சி, ஒத்துழைப்பு, அரசின் திறன் முதலியவற்றைச் சார்ந்துள்ளது. மேலும் காலப்போக்கில்தான் இதன் முடிவைக் காணலாம். ஏனெனில் நம் நாடு பலதரப்பட்ட மக்கள் கலாச்சாரம், பண்பாடு மொழி, கல்வி என்ற பல வேறுபாடுகளை ஒருங்கே மேற்கொண்டுள்ளது.

## 2. அரசியல் நிறுவனம் (Political Institution)

அரசியல் நிறுவனம் சமுதாயத்தின் வலிமையைப் பரப்புவதில் முயற்சி எடுத்துக்கொண்டு விளங்குகின்றது. சமுதாயத்தின் சட்ட ரீதியான இயற்கைச் சக்தியை ஒரு குறிப்பிட்ட நிலப் பரப்பில் (Territory), நாடு பரப்புதலாகும் என்று மேக்ஸ் வெவர் (Max Wuver) கூறியுள்ளார். நாடு ஒரு முக்கியமான சமுதாயக் கட்டுப்பாட்டு முறையை ஏற்று விளங்குகின்றது. சமுதாயத்தின் முக்கிய நோக்கம் சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வருவதாகும். அரசியல் சமுதாயத்தின் ஒரு பகுதி. எனவே அது முழுமைச் சமுதாயமாகாது. சமுதாயத்தின் முக்கியத்தன்மை அரசியல் முறையாகும். சமுதாயத்தை ஒரு சமூக இயலாகக் கருதுவதற்கு சமூகம், சமுதாயம், அரசியல் இவற்றை வேறுபடுத்திக் காட்ட வேண்டும். முதன் முதலாகத் தோன்றிய சமூக வல்லுநர்கள் சமுதாயத்திற்கும் அரசியலுக்கும் உள்ள வேறுபாடுகளை எடுத்துக் காட்டியுள்ளனர். நாடு என்பது ஒரு சமுதாயத்தின் சங்கம்

என்பதும் அதன் பிரிவுக்குள் வளரும் மக்கட் தொகை, பழங்குடி மக்கள், அவர்களின் சமுதாயம் முதலியவற்றைப் புரிந்தும் படித்தும் அவற்றின் தொடக்கத்தை ஆராய்ந்தும் சரித்திரத்தின் வாயிலாக நாடு எவ்வண்ணம் முன்னேற்றம் அடையக் கூடும் என்பதையும் எடுத்துக் காட்டியுள்ளனர். வரலாறு பற்பல மேலை நாடுகளின் வரலாற்று நிகழ்ச்சிகளைக் கொண்டு நிரூபித்துள்ளது. 19ஆம் நூற்றுண்டு எழுத்தாளர்கள் பல உண்மைகளின் மூலமாக அரசியல் நிறுவனங்கள், சமூக இயலை மேற்கொண்டு பரிணமக் கொள்கையைக் கடைப்பிடித்து எவ்வெவ் வகையில் அரசியல் நிறுவனங்களை ஒழுங்கு படுத்த முடியும் என்பதை வெளிப்படுத்தி யுள்ளனர்.

முதன்முதலாகப் பலதரப்பட்ட அரசு முறைகளைக் காண்போம். அதன் பின்னர் விரிந்த அளவில் அரசு நிறுவனங் களைப் பற்றி ஆராய்வோம். இறுதியாகத் தற்காலச் சமுதாயத்தில் சமூக இயல் வல்லுநர்கள், மானிட இயல் வல்லுநர்கள் மனிதனின் அரசியல் நடைமுறையை இலக்கியத்தின் மூலம் விளக்கியுள்ளதை நோக்குவோம்.

குடும்பம் மனிதனின் வாழ்க்கைக்கே அடிப்படையாகவும் அவசியமாகவும் இருந்தாலும் அது அவனுடைய எல்லாத் தேவை களையும் நிறைவு செய்ய இயலாது. ஆதலால் குடும்பத்தைத் தவிர வேறு பல நிறுவனங்கள் மனிதனிடையே உள்ளதைக் காண் கின்றோம். பலவகையான நிறுவனங்களுள் நாடு (Nation) முக்கியத்துவம் பெற்றுள்ளது. நாடு பலதரப்பட்ட மக்களைக் கொண்ட சமுதாயம் என்று கார்னர் (Garner) என்னும் அறிஞர் கூறியுள்ளார். ஒரு பெரிய நாட்டின் ஒரு பகுதியை ஏற்றுக் கொண்டும் ஓரளவு மற்றவர்களின், மற்ற நாட்டவர்களின் புறக் கட்டுப்பாடின்றி, ஒழுங்குபெற்ற ஒரு அரசாங்கத்தை நிறுவி அதற்கு அப்பகுதியிலுள்ள மக்கள் கட்டுப்பட்டு வாழ்தல் அரசியல் சமுதாயம் எனப்படும். இவ்வண்ணம் குறிப்பிட்ட பகுதியில் இரண்டு தன்மைகளைக் காணலாம். 1. சமுதாயத் தன்மை (Sociability), 2. அரசியல் தன்மை (Patriotism). நாடு என்பது சமூகம் அதனோடு இணைந்த தன்மைகளை மேற்கொண்டு நாட்டின் வரம்பு எல்லை இவற்றை எடுத்துக் காட்டுகின்றது. சான்றுகப் பொருளாதார மதச் சார்பற்ற குழுக்கள் பெருமையடைந்து விளங்கிய போதிலும் அது நாடில்லாத சமூகம் என்று கருதப்படும். ஆதலால் ஒரு சமுதாயத்தின் மக்கள் வெவ்வேறு கொள்கைகளை மேற்கொண்டுள்ள போதிலும் அவர்களை ஒழுங்கு பெறச் செய்து ஒரு அரசின் கீழ் உட்படுத்துதல் வேண்டும். இத்தகைய

அமைப்பைக் கொண்டுவர நாடும் நாட்டிற்கு அரசும் தேவை. மேலும், நாட்டின் அரசு தலைசிறந்து நல்லமைப்புடனும் நீதி நெறிகளுடனும் தகுந்த முடிவுகளை எடுக்கும் ஆற்றலுடைய ஒரு நிறுவனமாக இருத்தல் வேண்டும். அஃதாவது நாடும் அரசும் மேன்மையுற்ற சமுதாயத்தை உருவாக்கி மக்களை உயர்த்துதல் வேண்டும். சில எழுத்தாளர்கள் நாட்டின் அமைப்பைக் காட்டிலும் அதன் சக்தியே முக்கியம் என்று கருதுகின்றனர். இக்கொள்கையைத் தவருகப் புரிந்து கொள்ளக் கூடும். ஏனெனில், சக்தியை இயற்கைச் சக்தியென்றும் அது நாட்டைக் காப்பதற்கும் வளத்திற்கும் அமைப்பிற்கும் அடிப்படையாக உள்ளதென்று கொண்டு மக்களின் சக்தியைப் புறக்கணிக்கக் கூடும். எனினும் ஒரு நாட்டிற்கு இயற்கைச் சக்தியும் மக்கட் சக்தியும் தேவை யானவையே!

அரசியல் நிறுவனங்கள் பலதரப்பட்ட அரசு கோட்பாடுகளை ஏற்றும், மறுத்தும், முன்னேறியும், அழிந்தும் இவ்வாறு பற்பல மாறுதல்களைப் பெற்று வந்ததை வரலாற்றின் வாயிலாகக் காண் கின்ருேம். எ-க முடியரசு இருபதாம் நூற்ருண்டில் இந்தியாவில் முற்றிலும் சிதைந்து போயிற்று. மேலும் ஒரு தனிமனிதன் ஆளுதல் (Dictatorship) என்னும் அரசுக் கொள்கையும் இந் நூற்ருண்டில் சிதைந்து போயிற்று. பெரும்பாலும் குடியரசுக் கொள்கை முன்னேற்றமடைந்துள்ளது. குடியரசு நிறுவனத்தைப் புரிந்து கொள்ள மற்றும் சில அரசியல் நிறுவனங்களை ஒப்பிட்டு நோக்குதல் வேண்டும். அவையாவன 1. உடைமை பொதுமை அல்லது சமதர்மக் கோட்பாடு (Socialism). இக் கொள்கை கூட்டுக் கொள்கையினை மேற்கொண்டு மனிதனின் தனித் தன்மையைப் பெருக்குகின்றது. இக் கொள்கை நாட்டின் உரிமையை உறுதிப்படுத்தித் தொழில் வளர்ச்சியை அதன் அடிப்படையில் கொண்டுவர முயல்கின்றது. தீவிரக் கொள்கை யாளர்கள் (Communists) எல்லாப் பொருளாதார நிறுவனங்களும் உற்பத்தி செய்யும் கருவிகளும் தேசீய உடைமையாக்க வேண்டு மென்று வற்புறுத்துகின்றனர். சமதர்மக் கொள்கை, சில முக்கியத் தொழில் நிறுவனங்கள் மட்டும் தேசீய உடைமையாக்குதல் வேண்டுமென்றும் மற்றவை தனி முதலாளிகளிடத்தில் இருத்தல் நலம் என்றும் வற்புறுத்துகின்றது. எனினும் தேசீய உடைமை மனிதனுக்குத் தனி உரிமையை விட மிகவும் இன்றியமையாதது. இதற்குக் காரணம் தனிமனிதனின் தொழில் உற்பத்தி இவை ஒரு சிலரின் உரிமையாக ஏற்கப்பட்டு அவர்கள் பொதுமக்களைச் சுரண்டக் (Exploit) கூடும். முதலாளித்துவம் சிறிய தொழிலாளி களை வதைத்தும் அவர்களைக் கொண்டு உற்பத்தியைப் பெருக்கியும்

மேலும் தொழிற் போட்டியை விளைவித்தும் தீமை பயக்கக் கூடும். ஆதலால், சமுதாயம் தொழில்களை அதன் அடியில் (அரசுடைமை யின்கீழ்) கொண்டு வந்தால் மக்கள் பல துறைகளிலும் நன்மை யடையக் கூடும். மேலும் தனிச் சொத்துரிமை என்னும் கொள்கையை முற்றிலும் ஏற்க முடியாத நிலை தோன்றலாம்.

பொது உடைமைக் கொள்கை பல சமூக இயக்கங்களைக் கொண்ட சமூகமாகும். பொதுவுடைமைக் கொள்கையின் எதிர்ப்பு என்னவென்றால் அது நாட்டின் உரிமையையும் தரத்தை யும் மிக அதிக அளவில் எடுத்துக் காட்டுகின்றது. தனித் தொழில் அல்லது தனியுரிமை எவ்வளவு தவறுகளை மேற் காண்டுள்ளதோ அவையனைத்தும் நாட்டு மக்களைச் சாரக்கூடும் என்று நம்பப்படுகிறது. சான்றாக அரசுத் தொழிற்சாலைகள் நன்கு வளரலாம். இதேபோல் தனித் தொழில்களும் வளரக் கூடும் எனினும் இவை ஒன்றை ஒன்று கட்டுப்படுத்த அரசு, தனித்துறை ஆகிய இரண்டும் உள்ளன. தனித் தொழில்கள் அரசின் கண் காணிப்பிற்குள் அடங்கவேண்டும். அரசுத் தொழிற்சாலைகளை அரசின் எதிர்க் கொள்கையினர் கண்காணித்து வருகின்றனர். நன்முறையில் எதிர்க்கட்சி இயங்காவிடின் அரசு முழு ஆட்சியை ஏற்று தரத்திலும் வளர்ச்சியிலும் குறைந்து போகக் கூடும். சில தொழிற்சாலைகளை அரசு நன்முறையில் செயல்படுத்துகின்றது என்ற எண்ணத்திலிருந்து எல்லாத் தொழிற்சாலைகளும் நன்கு பணிபுரியும் என்ற கொள்கை தவறானது. மேலும் பொது உடைமைக் கொள்கை தனிச் சொத்து என்னும் எண்ணம் தகுதி யானதென்றும் பொருளாதாரத்தின் அடிப்படையில் தவறு என்றும் மேற்கொள்ளப்பட்டது. பொதுவுடைமைக் கொள்கையின் முக்கியத்துவம் தரமுள்ள மனிதன், தரமற்ற மனிதனின் உழைப் பையும் ஏற்று முன்னுக்கு வர வேண்டும் என்பதாகும். அரசு அதன் உரிமையை மட்டும் ஏற்றுக்கொள்ள வேண்டுமே தவிர தொழிலாளரின் உரிமையைப் பறித்தல் கூடாது.

### (அ) பொதுவுடைமைக் கொள்கை (Communism)

பல சிறந்த நன்மைகளை எடுத்துக் காட்டுகின்றது. சமூக நிறுவனங்கள் தொழிலாளிகளை அரசியல் மூலம் மேன்மையடையச் செய்வதைத் தொழிற்சங்கங்களின் வாயிலாகச் செயல்படுத்து கின்றன. நாட்டின் சிறப்பையும் பொறுப்பையும் பொருளாதாரத் தின் வாயிலாக எடுத்துக் காட்டுகின்றது. தனித் தொழிலாளிகள் அவர்தம் தொழிற்சாலைகள் முன்னேறப் பயன்படுகின்றது (துணை நிற்கின்றது). தனி மனிதன் மற்றும் பல சங்கங்கள் சரியான முறையில் வளர்ச்சியடைய நாட்டின் மேற்பார்வையின் கீழ்

இருத்தல் வேண்டும். அவ்வாறிருந்தாலும் நாடு ஆணையிடும் அதிகாரியாக இராமல் துணைபுரியும் துணைவனாக இருந்து தொழிலை மேன்மேலும் வளரச் செய்து பொது மனிதனுக்கு நன்மை அல்லது பயன்தரக் கூடியதாக இருத்தல் வேண்டும்.

தற்காலத்தில் சமதர்மக் கொள்கை வரம்புக்கு மீறினால் பொது உடைமைக் கொள்கையாக மாறும். பொது உடைமைக் கொள்கை பத்தொன்பதாம் நூற்றுண்டிலிருந்து எவ்வகை வேறுபாடுமின்றி ஐரோப்பிய நாடுகளில் இயங்கிவந்தது. நாளடைவில் அதற்குப் பல கிளைகள் தோன்றி ஒன்றுக்கொன்று முரண்படலாயிற்று. பொதுவாகப் பொது உடைமைக் கொள்கை மாக்ஸ் (Max) என்பவரின் அடிப்படைத் தத்துவத்தின் மேல் லெனின், ஸ்டாலின் என்பவர்களால் சோவியத் உருஷ்யாவில் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு கொள்கையாகும். அக் கொள்கை தொழிலாளர் களுக்கே நாட்டின் உரிமை அனைத்தும் உண்டு என்பதாகும். இவ் வுரிமையை அவர்களால் சட்டத்தின்கீழ் நடைமுறைக்குக் கொண்டுவர இயலவில்லை. ஏனெனில் நாடு முதலாளிகளைச் சார்ந்துள்ளது. மேலும், அவர்கள் தொழிலாளி வகுப்புக்கள் முன்னுக்கு வராமல் இருப்பதற்கு பல முயற்சிகளைக் கையாண் டனர். இதன் விளைவாக தொழிலாளி வகுப்புகள் முதலாளிகளை அடியோடு நீக்கல் வேண்டும் என்றும் மேலும் தொழிலாளிகளின் ஆதிக்கம் ஓங்க வேண்டும் என்றும் பல இயக்கங்களைத் தோற்று வித்தனர். அவர்கள் எதிர்பார்த்த முடிவு தொழிலாளி வகுப்பு ஒன்றுதான் நிலைத்து ஏற்றத் தாழ்வு வேறுபாடு இருத்தல் அடியோடு ஒழிய வேண்டும் என்பது. இத்தகைய நாட்டை வகுப்பு வேறுபட்ட நாடு என்றும் தனி வேறுபாடு இல்லாத சமூகம் என்றும் கருதக்கூடும். இத்தகைய நாட்டில் சமூகக் கட்டுப்பாடு உற்பத்தி செய்யும் பொருள்களை உபயோகிக்கும் மக்களிடம் தான் விளங்க முடியும். " அவரவர் தேவைக்கேற்ப அவரவர் திறத்திற்கு ஏற்றவாறு பொருள்கள் வழங்கப்படும் " என்னும் கொள்கை எடுத்துக்காட்டாக உள்ளது. இத்தகைய கொள்கைகள் இருந்த போதிலும் பொதுவுடைமைக் கொள்கை நாடுகளில் பல பிரிவுகள் இருக்கின்றன. சிற்சில நாடுகள் புது விதிகளை மேற்கொண்டுள்ள போதிலும் கூலி (wages) என்பது முதலாளித்துவம் உள்ள நாடுகளைவிட வேறுபாடுகளைக் கொண்டுள்ளது. இதற்கு எதிராக அஞ்சத்தக்க பொது உடைமைக் கட்சி, அஃதாவது வேலையாட் களைக் கட்டாயமாகப் புகுத்தும் ஒரு நிறுவனமாகப் பல விதி களுடன் தோன்றியுள்ளது. சோவியத்துச் சட்டம் ஒரு தற்காலச் சட்டமாக இருந்தபோதிலும் பொது உடைமைக் கொள்கை ஒரு சிறப்பு வாய்ந்த உரிமையை நாட்டிலுள்ள மக்களுக்கு கொடுப்ப

தாகக் கருதப்படுகின்றது. எனினும் இக்கொள்கை மனிதனுக்கு உரிமை தருவதில்லை. பொதுவுடைமைக் கொள்கைக்கு எவன் ஆதரவு, வளர்ச்சி முதலியவற்றைக் கொடுக்கின்றானோ அவனுக்கு வேலைவாய்ப்பு உண்டு.

**ஆ. ஆக்க நல அரசு** (Welfare State)

நம் நாடு 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம் நாள் சுதந்திர நாடாகியது. அதுமுதல் நம் நாட்டில் பல மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. நம் நாட்டிலுள்ள சுதந்திரப் போராட்ட வீரர்களால் நாட்டை எவ்வாறு ஆளவேண்டும் என்ற சிக்கலைத் தீவிரமாகச் சிந்தித்து நம்நாடு ஒரு குடியரசு நாடாக விளங்கி முன்னேற வேண்டுமென்று திட்டம் வகுத்துள்ளனர். அதன்பொருட்டு அரசியல் நிர்ணயச் சட்டம் (Indian Constitution) ஒன்றை வகுத்தனர். அச்சட்டம், இந்தியா ஒரு தனிக் குடியரசு நாடாக இயங்கி மக்களால் அதன் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று வற்புறுத்துகிறது.

குடியரசு நாடு, அந்நாட்டு மக்களால் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு மக்களின் நலனுக்காக மக்கள் உறுப்பினர்களால் ஆளப்படும் அரசு. நம் நாட்டு அரசியல் திட்டம் புத்தகம் உலகிலுள்ள எல்லா நாட்டுத் திட்டப் புத்தகங்களைவிடப் பன்மடங்குப் பெரியது. ஏனெனில் நம் நாட்டில் உள்ள பலதரப்பட்ட மக்களின் கொள்கை, பண்பாடு, சாதி, சமயம், மொழி முதலியவற்றை மேற்கொண்டு தேவைக்கேற்ப ஏற்படுத்தப்பட்டுள்ளது. நம் நாட்டு அரசியல் திட்டப் புத்தகம் 396 பிரிவுகளைக் (Articles) கொண்டுள்ளது. அரசியல் சட்டத்தை வகுக்க பல மேல்நாட்டுச் சட்டதிட்டங்களை மேற்கொண்டு உருவாக்கியுள்ளனர். எ-டு டெல்லியிலுள்ள அரசு மக்கள் அவை (Lok Sabha), மாநில அவை (Rajya Sabha) என்று இரு பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இது இங்கிலாந்திலுள்ள மக்கள் சபையைப் பின்பற்றி இவ்வாறு பிரிக்கப்பட்டுள்ளது. நம் நாட்டு மக்களுக்குக் கொடுத்துள்ள உரிமைகள் அமெரிக்க நாட்டு மக்கள் உரிமைகளை (Human rights) ஓரளவிற்கு முன்னோடியாகக் கொண்டுள்ளது. பஞ்சாயத்து அல்லது ஊராட்சி மன்றம் என்று நம்நாட்டில் விளங்கிய சிறிய குழுவை மேற்கொண்டு குடியரசு சட்டம் அமைக்கப்பட்டுள்ளது. ஊராட்சி மன்றத்தை ஒரு சிறிய குடியரசு என்று கூறலாம். ஏனெனில் பெரும்பாலான நம் நாட்டு மக்கள் கிராமங்களில்தான் வசிக்கின்றனர். தற்பொழுது குடியரசு ஆட்சி பஞ்சாயத்தின் மூலம் நம்நாடு முழுதும் பரவி நாட்டு மக்களுக்குப் பல நன்மைகளை அள்ளிக் கொடுக்கின்றது. எ-டு போக்குவரத்து வசதி, கல்வி, மருத்துவம் முதலியன.

நம் நாட்டுக் குடியரசு சட்டங்களை உருவாக்கியவர்கள் பல மேன்மை தங்கிய சுதந்திர வீரர்களும் சட்ட நிபுணர்களும் ஆவர். தீண்டாமை ஒழிய நம்நாட்டுத் தந்தையாகிய காந்தியடிகள் பல விதிகளைத் தந்துள்ளார். தாழ்த்தப்பட்ட மக்களை முன்னுக்குக் கொண்டுவர பல விதிகள் மேற்கொள்ளப்படுகின்றன. குடியரசு சட்டத்தை முழுமையாக்கி ஒரு புனித புத்தகமாக வெளியிடும் பொருட்டு டாக்டர் அம்பேத்கார் என்னும் வழக்காளரிடம் ஒப் படைக்கப்பட்டது. 1950ஆம் ஆண்டு ஜனவரி 26ஆம் நாள் இந்தியக் குடியரசு பிறந்து இந்தியாவை குடியரசு சட்ட திட்டங் களுக்குள்ளாக்கியது.

தொடக்கத்திலிருந்து இந்தியா ஒரு ஆக்க நல அரசாகவும் (Welfare state) சாதியின்மை, வகுப்பின்மை (Casteless, Classless) என்னும் சமூகமாகவும் இருத்தல் வேண்டுமென்ற கொள்கை மேற் கொள்ளப்பட்டுள்ளது. இதன் விளைவாகப் பல சட்டங்கள் விதிகள் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டுள்ளது. எ-க ஐந்தாண்டுத் திட்டம் (Five-Year Plan) திருத்தப்பட்ட ஊராட்சி மன்றம் (Village Panchayat) என்பன.

ஆக்க நல அரசின் கொள்கை மக்களுக்குப் போதிய அளவு நலத்தைப் பெறச் செய்து மனநிறைவுடன் வாழச் செய்வதாகும். அரசு முழு உரிமையையும் ஏற்றுக் கொண்டால் அது பொதுவுடை மை அரசு (Communism) என்று கூறப்படும். ஆதலால் ஒரு சில பகுதிகள் மட்டுமே அரசு உடைமையாகக் கருதப்பட்டு மற்றவை தனி முதலாளிகளால் ஏற்று நடத்தப்படவேண்டும். அரசு உடைமையாக்கப்பட்ட பகுதிகள் (Public Sector) தனிமனிதனின் உடைமைகள் (Private Sector) இவ்விரண்டும் நன்மை பயக்கத் தக்க குடியரசுக்கு இன்றிமையாதவை யாகும். நம் நாட்டில் இவ்விரண்டு பிரிவுகளும் ஒன்று சேர்ந்து இயங்குவதைக் காண்கின்றோம். எ-க இரயில்வே, தபால்-தந்தி, வங்கிகள் முதலியவை அரசுடைமையாக்கப்பட்டுள்ளன. இதற்கெதிராக நெசவுத் தொழில், உணவு உற்பத்தி மற்றும் பல தேவைகள் தனிவுடைமையில் இயங்கி வருகின்றன. ஆக்க நல அரசுக் கொள்கைகள் ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டுள்ளன. ஆக்க நல அரசின் கொள்கைகள் கீழ் வருவன. 1. நாட்டின் உற்பத்தியைப் பெருக்கி மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல். 2. இந்தியாவின் அடிப்படைத் தொழில் தரத்தைப் பெருக்கி நாட்டை முன்னேற்ற மடையச் செய்தல். 3. பெருமளவிற்கு வேலை வாய்ப்புகளை ஏற்படுத்துதல். 4. பல சமூக நன்மைகளை அளித்தல்.

ஆக்க நலஅரசு எல்லையற்ற பொதுவுடைமைக் கொள்கைக்கும் (Communism) கட்டுக் கடங்காத தனியுடைமைக்கும் (Capitalism) இடையில் இருந்து மக்களுக்கு நன்மை பயக்கின்றது. பொது வுடைமைக் கொள்கை இல்லாவிடினும் ஆக்க நல அரசு நீடித்து நிலைக்கக்கூடும். எவ்வாறெனில் அது தரத்துடன் நடைமுறைக்கு கொண்டுவரக்கூடிய ஒரு கொள்கையாகும். பொதுவாக இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் உலகில் பல நாடுகளில் இக்கொள்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஆக்க நல அரசின் கொள்கைகள் இங்கிலாந்திலும் பரவியுள்ளது. சான்றுகத் தொழிலாளர்க்குப் பொருளாதாரப் பாதுகாப்பு, ஓய்வுக் கால நிதி, மருத்துவ வசதி இவை கொடுக்கப்பட்டுள்ளன. இங்கிலாந்தி லுள்ள மக்கள் உணவு, உடை இவை இரண்டாம் உலகப் போருக்கு முன் இருந்ததை விட அதிக அளவில் தற்போது இருப்பதாக வாட்கின் (Watkin) என்னும் அறிஞர் கூறியுள்ளார். ஆக்க நல அரசு இரண்டு எதிர்ப்புகளை சமாளிக்க வேண்டி யுள்ளது. 1. நேர்முக எதிர்ப்பு. 2. மறைமுக எதிர்ப்பு. நேர்முக எதிர்ப்பு அரசு தனிமனிதனின் சுயமுயற்சியை அடியோடு சிதைக்கின்றது என்பதை வெளிப்படுத்துகின்றது. மேலும் ஆக்க நல அரசு மக்களின் ஊக்கம், பொறுப்பு, உரிமை ஆகியவற்றைக் குறைத்து விடுகின்றது என்று கருதப்படுகின்றது. இந்திய சமூகத் தலைவராகிய ஜெயப்பிரகாஷ் நாராயணன் என்பவர் ஆக்க நல அரசு எல்லையை மீறி சக்தியற்றதாக மாறிவிடக் கூடாது என்று கூறுகின்றார். மேலும், ஆக்க நல அரசு அளவிடா உரிமையை மேற்கொண்டு மனிதனை அடிமையாக்கக் கூடாது. இந்நிலை ஏற்படாதிருக்க மக்கள் தடுத்து நிறுத்த வேண்டாம். ஏனெனில் குடியரசுத் தேர்தல் வருங்கால மக்களாகிய சிறுவர் சிறுமியருடைய நலத்தை முற்றிலும் பேணுதல் இயலாது. மற்றும் அவர்களை தேர்தலில் உட்படுத்துவதும் இல்லை. ஆதலால் அவர் ஆக்க நல அரசுக்கு சில குறிக்கோள்களை வகுத்துள்ளார். 1. தேசீயமய மாக்குதல் ஒரு வரம்பிற்குள் இருத்தல் வேண்டும். 2. சிற்சில தொழிற்சாலைகட்கு மட்டுமே தேசீய உரிமை கொடுக்கவேண்டும். 3. தொழிற்சாலைகள் மக்கட்குப் பயன் தரக்கூடியதாக இருத்தல் வேண்டும். 4. இயன்ற வரையில் ஒரு மையத்தைக் கொண்டு பரவுதல் இன்றியமையாதது அரசுடைமை யாக்குதல். மக்களுக்கு முழு வேலை வாய்ப்பு அளிப்பதனால் உற்பத்தித் தேக்கம் விளை வதற்கு வழியாகின்றது.

மறைமுக எதிர்ப்பு ஜெர்மனி, பெல்ஜியம், அமெரிக்கா போன்ற நாடுகளில் ஆக்க நல அரசு இல்லாவிடினும் மேன்மை

யடைந்துள்ளது என்று கூறப்படுகின்றது. இதற்குக் காரணம் பொருள் வள உதவி.

இருபதாம் நூற்றுண்டில் ஆக்க நல அரசு தொடக்க நிலையிலிருப்பதால் அதன் பயனை வெகு எளிதில் அறிந்து கொள்ள முடியாது. ஒரு நாட்டில் சில வகுப்பினருக்குத் துணைபுரிய ஆக்க நல அரசு அவசியமாக உள்ளது. குறிப்பாக இந்தியாவில் கிராமத் தொழில் வளர்ச்சி கூட்டுறவுச் சங்கம், அராட்சி மன்றம் இவைகள் ஆக்க நல அரசின் கொள்கைகள் மூலம் முன்னேறியுள்ளது. ஆதலால் ஆக்க நல அரசின் தரம், பயன், உபயோகம் முதலியவற்றை நாம் நாளடைவில்தான் அறிந்து கொள்ள முடியும்.

**(இ) சமதர்மக் கொள்கை சார்ந்த சமுதாயம் (Socialistic Pattern of Society)**

சமுதாயம் மக்களால்தான் நிலைபெறுகிறது மக்களின் வாழ்க்கைத் தரமே ஒரு சமுதாயத்தின் அளவு கோள் என்றுலும் சமுதாயம் இன்றி மனிதன் வாழ இயலாது. சமுதாயம் பல விதிகளை மேற்கொண்டுள்ளது. இவ்விதிகளை மேற்கொண்டு மனிதன் சமுதாயத்திற்குப் பணி செய்கின்றுன். குடியரசுக் கொள்கைகள் இந்திய நாட்டின் அரசியல் நிர்ணய சட்டங்களின் மூலம் விளக்கப்பட்டுள்ளன. இந்தியக் குடியரசு உலகிலேயே இளமை வாய்ந்த குடியரசு. அக்குடியரசில் ஏற்றுக் கொள்ளப் பட்ட விதிகள் கீழ் வருவன. 1949 ஆம் ஆண்டு நவம்பர் 24 ஆம் நாள் நம் நாட்டு அரசியல் நிர்ணய சட்டம் ஏற்றுக் கொள்ளப் பட்டது. இந்திய நாடு மக்களுக்குச் சமூக உரிமை, பொருளாதார உரிமை, அரசியல் உரிமை, சிந்தனை உரிமை, அதை வெளிப் படுத்தும் உரிமை, கொள்கை உரிமை, மதவழிபாட்டுரிமை, வாய்ப்பு, தகுதி இவைகளில் வேறுபாடின்மை, மனிதத்தன்மையை உணர்ந்து சகோதரத்துவத்தை மேற்கொண்டு நாட்டின் ஒற்றுமைக்கு வழிவகுக்கும் முழுமை வாய்ந்த குடியரசாகும்.

நம் நாட்டிலுள்ள வேற்றுமைகளை அடியோடு அகற்ற சமதர்மக் கொள்கை முன்வந்துள்ளது. வகுப்புப் பிரிவு, இனப் பிரிவு இவ்விரண்டும் நம் நாட்டில் பல நூற்றுண்டுகளாக வேரூன்றி இருந்தன. சான்றுக முதலாளித்துவம், பண்ணையார் என்னும் பிரிவு, மேல்சாதி, கீழ்சாதி என்னும் வேற்றுமை நாட்டின் பொருளாதார முற்போக்கிற்கு இடையூருக இருந்து வந்தன. சமதர்மக் கொள்கையின் கருத்து இப்பிரிவுகளை அப்புறப்படுத்துதல் மேல்சாதி கீழ்சாதி என்னும் கொள்கை, தீண்டாமைச் சாதிகள்

என்னும் கட்டத்திற்கு வந்ததால் சமதர்மக் கொள்கையின் கீழ் பல சட்டங்கள் ஏற்பட வழி வகுத்தன. சான்ருகக் கலப்பு மணம், பிற்பட்ட மக்களுக்குக் கல்வி வசதி முதலியன. வகுப்புப் பிரிவுகளை அகற்ற முதலாளித்துவம் ஓரளவிற்கு ஒழிக்கப்பட்டு (Zamindari system) தொழிலாளித்துவம் (Working class) என்னும் அமைப்புத் தோன்றியுள்ளது. இதன்பொருட்டு விவசாயிகளுக்கு நிலம் வழங்கி பயிர் செய்யும் வசதிகள் கொடுக்கப்பட்டுள்ளன. இப் புனிதமான பணியை பூதான் இயக்கத் தலைவர் வினோபா பாவே மேற்கொண்டார். இவ்வியக்கம் அளவுக்கு மேல் நிலம் வைத்துள்ள நில உரிமையாளரிடமிருந்து நிலத்தை அரசு பெற்று நிலமற்றவர்களுக்குக் கொடுத்து உதவியுள்ளது. இவ்வாறு சமதர்மக் கொள்கை சார்ந்த சமுதாயம் நம்நாட்டின் முன்னேற்றத்திற்குத் தொண்டு புரிகின்றது.

## 3. சமயச் சார்பான நிறுவனம்
## (Religious Institution)

மனிதன் தன் அன்ருட வாழ்க்கைக்கு அறிவியலால் பெற்ற சில கருவிகளைப் பயன்படுத்துகின்ருன். இவற்றை மேற்கொண்டு பொருளாதாரத் துறை தொழில் துறை நுணுக்கம் இவை மூலம் முன்னேறியுள்ளான். சூழ்நிலையைத் தனக்குச் சாதகமாக்கி உயிர் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை தேடிக் கொள்ளவும் முற்பட்டான். தான் தன் உயிரினங்களுடன் கூடி வாழ மொழி, கல்வி, சமுதாயம், அரசியல் இவற்றை வகுத்துக் கொண்டான். சமயமும் இவற்றுடன் சேர்க்கப்பட்டது. சமயம் பொதுவாக மனிதத்தன்மைக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியைக் குறிக்கின்றது. பண்டைக்காலத்தில் சமயம் நாகரிகத்திற்குத் துணைபுரிவதாகக் கருதப்பட்டு வந்தது. இ.பி. டெய்லர் (Tylor) என்னும் அறிஞர் பழங்குடி மக்களும் நாகரிக மக்களைப் போன்று சமயக் கொள்கைகட்கு இடமளித்தனர்.

சமயம் மனிதன் தோன்றியதுமுதல் இருந்து வந்ததாகக் கூறப்படுகின்றது எனினும் சமயக் கொள்கைகள் பல பிரிவுகளை மேற்கொண்டு விளங்கினுலும் தற்பொழுது சமயம் என்ற ஒன்று உண்டா என்ற வினுவும் எழுந்துள்ளது. சமயத்தின் வரலாறு (History Religion) சமயம் எத்தகைய மாறுதல்களை மேற்கொண்டுள்ளது என்பதை எடுத்துக் காட்டுகின்றது. சமயம் அல்லது மதம் என்னும் சொல் இலத்தீன் சொல்லாகிய " Religio " என்னும் சொல்லிலிருந்து தோன்றியுள்ளது. இச் சொல்லுக்குப்

பொருள் சேர்க்கை, கணக்கிடுதல் எனப் பலவகையாகக் கூறப் படுகின்றது. மேலும் சமயம் மனிதன் கடவுளிடம் கொண்டுள்ள தொடர்பையும் எடுத்துக்காட்டுகின்றது. சமயச் சடங்குகள் மனிதனின் எண்ணங்களை ஒருவாறு நிறைவு செய்கின்றன.

சமயத்தின் அடிப்படைத் தத்துவங்கள் மனிதனின் மனப் பான்மையைப் பொருத்து முன்னேற்றமடைந்துள்ளது. எடுத்துக் காட்டாகச் சமயக் கொள்கைகள் புனைந்துரை (Myths) என்று கருதப்பட்டு வருகின்றது. புனைந்துரை என்பது மக்களால் ஒரு காலத்தில் ஏற்கப்பட்டு பழக்கத்தில் கொண்டுவரப்பட்ட ஒரு சமயக் கொள்கை. பொதுவாக எல்லாச் சமயங்களும் புனைந்துரை சடங்கு இவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ளன. சடங்குகள் மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையிலுள்ள ஒரு அப்பாற்பட்ட சக்தியை எடுத்துக் காட்டுகின்றன. பண்டைக்காலச் சமயத்திற்கும் தற்காலச் சமயத்திற்கும் ஒரே ஒரு வேறுபாடுதான் உள்ளது. அஃதாவது பண்டைக்கால மனிதன் சமயத்தை அலசி ஆராய வில்லை. தற்கால மனிதனே சமயத்தை நன்கு ஆராய்ந்து அறிந்துள்ளான். இத்தகைய வேறுபாடுகள் இருந்தபோதிலும் சமயத்தை ஓரளவிற்குப் புறக்கணிக்க முடியவில்லை.

சமயக் கொள்கைகள் நாட்டுக்கு நாடு, சமுதாயத்திற்குச் சமுதாயம், மக்களுக்கு மக்கள் வேறுபட்டுள்ளது. சமயத்துள் மேற்கொள்ளப்பட்ட அப்பாற்பட்ட சக்தியை ஒரு சிலர் ஆவி யென்றும் பேயென்றும் வேறு சிலர் கண்ணுக்குப் புலப்படாத உலகில் பரந்துள்ள ஒரு சக்தியென்றும் மற்றும் சிலர் மானிட உருவத்தைக் கொண்டுள்ளது என்றும் கணக்கிட முடியாத ஆற்றலை உடையது என்றும் கருதுகின்றார்கள். டர்கிம் (Durkhim) என்னும் அறிஞர் சமயம் பண்டைக்கால மக்களால் இரு பிரிவாக பிரிக்கப்பட்டுள்ளது என்றார். 1. புனிதத் தன்மை அடைந்துள்ள சமயம். 2. பண்டைக்கால வளர்ச்சியடையாத அறிவியல் என்பன.

மானிட இயல் வல்லுநர்கள் சமயத்தின் பரிணாமத்தை பண் பற்ற நிலையிலிருந்து பண்புள்ள நிலைவரை பின்பற்றி அறிந்துள் ளார்கள். தற்காலச் சமயக் கொள்கைகளோ சமயத்தின் செய லாற்றல்களைத்தான் அறிய முன்வந்துள்ளது. சமயத்தின் கொள்கைகளைப் பற்றி டெய்லர் என்பவர் பல கருத்துகளை வெளி யிட்டுள்ளார். சமயம் பல தொடக்க நிலைகளை மேற்கொண்டுள்ள போதிலும் இவை எல்லாவற்றிற்கும் அடிப்படையாக ஒரு நம்பிக்கைதான் இருந்து கொண்டு வந்தது. அஃதாவது ஆன்ம

நம்பிக்கை (Soul Anima) என்று கூறியுள்ளார். இதற்குக் காரணம் பண்டைக்கால மனிதன் தன் கனவில் இறந்துபோன மூதாதையர் களைப் பார்த்தும் பேசியும், தன் குரலைத் தானே கேட்டும் தன் பிரதி பிம்பத்தைக் கண்டும் நிலை தடுமாறினான். மேலும் அவன் ஆன்மா அவனை விட்டு எப்படிப் பிரிந்து போகிறது என்பதை விளக்க முடியாது அஞ்சினான். பொதுவாகப் பழங்குடி மனிதன் மனிதனுக்கு இரண்டு ஆன்மாக்கள் உள என்றும் ஒன்று அவன் உடலை விட்டு அடிக்கடி வெளியேறி வருவதாகவும் மற்றொன்று உடலை விட்டு ஒரேயடியாக இறந்தவுடன் போய்விடுவதாகவும் கருதினான். இதன் பொருட்டு அவன் இரண்டுவித மரணச் சடங்குகளை மேற்கொண்டான். 1. மனிதன் இறந்தவுடன் அச் சடலத்தை அப்புறப்படுத்தித் தீக்கிரையாக்குதல் அல்லது புதைத்தல். 2. சில நாட்களுக்குப் பின்பு இறந்த மனிதனின் ஆன்மாவை முற்றிலும் அவன் இருந்த இடத்திலிருந்து வெளிப் படுத்துதல் என்பதாகும். மனிதனின் மரணத்திற்குப்பின் செய்யப் படும் சடங்குகள் இன்றும் சமயக் கொள்கைகளை எடுத்துக் காட்டு கின்றன. முக்கியமாக மனிதனின் ஆன்ம நம்பிக்கையையும் மற்ற திடப் பொருள்களின் மீது கொண்டுள்ள நம்பிக்கையையும் வேறு படுத்திக் காட்டுகின்றது. ஆன்மா மனிதனின் கட்டுப்பாட்டிற்குள் இல்லாததால் அதை நிறைவு செய்யவேண்டுவது அவசிய மாயிற்று. இக் கொள்கை ஆன்மீகக் கொள்கை (Animism) என்று கூறப்படுகின்றது. இதிலிருந்து தொடக்கம் பெற்ற சமயம் பல கடவுட் கொள்கை (Polytheism), ஒரு கடவுட் கொள்கை (Monotheism) என்ற பல கட்டங்களைக் கடந்து இயற்கைச் சக்தி உலகின் போக்கிற்குக் காரணம் என்ற முடிவும் ஏற்றுக் கொள்ளப் பட்டு விளங்குகின்றது.

இயற்கைச் சக்தி வழிபாடு என்னும் கொள்கை மாக்ஸ்முல்லர், மேரட் (Maxmuller, Marrett) என்னும் அறிஞர்களால் வெளிப் படுத்தப்பட்டுள்ளது. மேரட் என்னும் அறிஞர் சிற்சில சடப் பொருள்கள் சமயம் மேற்கொண்டுள்ள சில தன்மைகளைப் பெற்றுள்ளது. எடுத்துக்காட்டாக மரம், செடி, மலை, ஆறு என்பன. ஜெர்மானியர்கள் இயற்கைப் பொருளாகிய காற்று, ஒளி, தண்ணீர், கதிரவன் முதலியவற்றைக் கடவுளாகக் கருதி போற்றி வழிபட்டு வந்தனர். எடுத்துக்காட்டாகக் கதிரவன் காலையில் தோன்றுகின்றான் மெலனோஸ்கி (Malinowski) இராட் கிளிப் ப்ரௌன் (Rad Cliff Brown) என்னும் அறிஞர் பண்டைக் கால சமயத்தின் முறைகளை விவரித்து மனிதன் சமயத்தால் எவ் வெவ் வகையில் நன்மை தீமைகளைப் புகுத்தி வந்தது என்பதை விளக்கியுள்ளனர். எடுத்துக்காட்டாக பழங்குடி மக்கள் உணவு

வேட்டைக்குச் செல்லும்போது கடவுள் வழிபாடுகளை முடித்த பின்னரே புறப்படுவர். இதனுல் மனிதன் சமயத்தை எவ்வகையில் பயன்படுத்தினுன் என்றும் சமயப் பற்று மனிதனுக்கு மன நிறைவு, உடல் நலம், ஆன்ம நலம் முதலியவற்றை அளித்து வந்தது என்றும் தெளிவாக உணர முடிகின்றது. மக்கள் குழு வாழ்க்கைக்கும் சமுதாய ஒற்றுமைக்கும் சமயம் பயன்பட்டு வந்தது. வேறு வகையாகக் கூறுவோமாயின் சமயம் மனித ஒற்றுமைக்கும் வாழ்க்கைக்கும் குழுவின் நீடிப்பிற்கும் ஒரு ஊன்றுகோலாக விளங்கி வந்துள்ளது. டர்க்கின் (Durkheim) என்னும் சமூக இயல் வல்லுநர் சமய எண்ணங்கள் (கொள்கைகள்) சமூகக் குழுக்களில்தான் தோன்றுகின்றன என்றும் அவ்வெண்ணங்களைச் சடங்குகள், விழாக்கள், சமுதாயக் கூட்டம் முதலியவற்றில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது என்று கூறியுள்ளார். பொதுவாகச் சமயம் மனிதனின் உயர்ந்த தன்மைகளை எடுத்துக்காட்டுகின்றது.

சமயம் இரண்டு பிரிவுகளை மேற்கொண்டுள்ளது. அவை : 1. கொள்கை (Doctrine). 2. சடங்குகள் (Rituals). கொள்கை சமயத்தின் மாரு நிலையைக் குறிக்கின்றது. சடங்கு செயல்படுத்தக் கூடிய கடமைகளைக் குறிக்கின்றது. கொள்கைகள் ஒன்று சேர்ந்து சமயத்தை உண்டாக்கியுள்ளன. மேலும், இக்கொள்கைகள் நடைமுறையில் சடங்குகளாக மாற்றப்பட்டுள்ளன. எல்லாக் கொள்கைகளும் செயல்முறைச் சடங்குகளும் சமயமாக முடியாது அவற்றில் சில வியக்கத்தக்க மாய வித்தை Magic என்று கருதக்கூடும்.

**(அ) சமயம், மாயவித்தை, விஞ்ஞானம் (Religion, Magic, Science)**

பண்டைக்கால மனிதன் சமயம் மாயவித்தை ஆகிய இரண்டையும் மேற்கொண்டு தன் இன்னல்களைத் தவிர்த்துக் கொண்டான். மாயவித்தையின் கருவிகளைக் கொண்டு சமய வழிபாடுகளைக் கடைப்பிடித்தான். இவ்விரண்டு கருவிகளும் மனிதனுக்கு நன்மை பயக்கவும் இன்னல்களைத் தவிர்க்கவும் பெருமளவிற்கு உதவி புரிந்தன. மாயவித்தை, சமயம் இவ் விரண்டிற்கும் வேறுபாடு இருந்தபோதிலும் சிற்சில வேளைகளில் இரண்டும் ஒன்று கூடி நன்மை விளைவித்தன. மாயவித்தையே சமயத்திற்கு முன்தோன்றிய தென்று கருதப்படுகின்றது.

மாய வித்தையின் உட்கருத்துகள் இரண்டு விதிகளை மேற்கொண்டுள்ளது என்று Frazer என்னும் அறிஞர் கூறியுள்ளார். அவை 1. ஒரு பொருள் அதே பொருளைத்தான் உண்டாக்கும் (Like produces Like). 2. ஒரு செயலின்

தொடக்கம், முடிவு ஆகிய இரண்டும் ஒன்றை ஒன்று சார்ந்துள்ளது. (Once in contact always in contact). இவ்விரண்டு விதிகளும் மாயவித்தையின் சட்டம் என்று கூறியுள்ளார். மாயவித்தை காரண-காரிய தொடர்பை அடிப்படையாகக் கொண்டுள்ளது. போலி மாயவித்தை (Mimetic Magic) ஒன்றைப் போலுள்ள மற்றொன்று (Law of similarity) என்னும் விதியை மேற்கொண்டுள்ளது. ஒன்றை ஒன்று தொடுதல் (Law of contact) என்னும் முறை பயன்படுத்தப்பட்டுள்ளது. (Contagious magic) தற்கால விஞ்ஞானத்தைப் போல் மாய வித்தையும் உற்று நோக்கல் (Observation), செயல்முறை (Experiment) முதலிய நிலைகளை மேற்கொண்டுள்ளது. எடுத்துக் காட்டாக நாகப்பூரிலுள்ள பழங்குடி மக்கள் மலையிலுள்ள பாறை, கற்கள் முதலியவற்றைக் கீழே உருட்டித் தள்ளி ஒலியை உண்டாக்கி இவ்வொலிக்கு மழையை உண்டாக்கும் சக்தி உள்ள தென்று நம்பி இவ்வொலிக்கும் இடி மழைக்கும் காரிய காரணத் (Cause and effect) தொடர்பு உண்டென்று கூறினர். பழங்குடி மக்கள் இறந்தவர்களின் உடைகளையும் அவர்கள் பயன்படுத்திய மற்ற பொருட்களையும் தாங்கள் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். ஏனெனில் அத்தகைய பொருட்களின் மூலம் தாங்களும் பாதிக்கப் படலாம் என்று நம்பியதால் இக் கொள்கையின் விதி ஒரு பெரிய பொருளின் பிரிவு அதைச் சார்ந்தது என்று கருதப்பட்டது. இத்தகைய காரணங்கள் உலகில் வாழ்வோர்க்கும் இறந்தோர்க்கும் இடையே ஒரு பெரிய இடைவெளி இருப்பதை எடுத்துக்காட்டு கின்றன.

சமயத்திற்கும் மாயவித்தைக்கும் இடையே சில வேறு பாடுகள் உள்ளன. அவற்றுள் அடிப்படை வேறுபாடு நாம் அவற்றை ஏற்று, புரிந்து கொள்வதாகும். சமயம் சமுதாயத்தை யும் மக்களையும் சார்ந்துள்ளது. மாயவித்தை மந்திரக்காரனின் வித்தையையும் அவனை நம்புகின்ற மக்களையும் சார்ந்துள்ளது. மந்திரவாதி, மதகுரு, இயற்கைத் தோற்றம் இவற்றிற்கு இடையில் இருந்து மாறுதல்களை விளக்க முயல்கின்றான். மக்கள் மந்திர வாதியைக் கண்டு அஞ்சுகின்றனர். மதகுருவுக்குப் பணிகின்றனர். மந்திரவாதி தீமையை விளைவிக்கின்றான். மதகுரு நன்மையைப் போதிக்கின்றான். ஒரு மந்திரவாதியின் கலைகள் கீழ் வருவன 1. கற்பனைக்குரிய தோற்றத்தை ஏற்படுத்துதல். 2. குறைந்த அளவில் ஒலி இருத்தல். 3. சாம்பிராணிப் புகையை உண்டு பண்ணுதல். 4. கறுப்பு உடை உடுத்துதல். 5. தெரியாத, புரியாத மொழிகளில் இசையோடு முணு முணுத்தல். 6. சடங்குகளை நுண்ணறிவின் மூலம் புகுத்துதல். 7. பாரம்பரியச்

சடங்குகளை மேற்கொள்ளுதல். 8. தகுந்த சொற்களை மாய வித்தைக்கு ஏற்ப மேற்கொள்ளுதல்.

அறிவியல், மந்திரம் இவை இரண்டும் நுணுக்கம் வாய்ந்த விதிகளை மேற்கொண்டுள்ளன. அஃதாவது மந்திரவாதியும் விஞ்ஞானியும் ஒரேவிதமான செயல்முறைகளைக் கையாள் கின்றனர். எனினும் விஞ்ஞானி இயற்கை உலகைப் புரிந்து கொள்ள முயல்கின்றான்; மந்திரவாதி இயற்கைக்கு அப்பாற்பட்ட சில தந்திரங்களைப் பயன்படுத்துகின்றான். இவ்விரண்டும் காரண காரியத் தொடர்பை மேற்கொண்டுள்ளபோதிலும் மாந்திரீகம் தவறான முடிவை எதிர் பார்க்கின்றது. ஆதலால் மாயவித்தையை " விஞ்ஞானத்தின் நன்மை பயவாத சகோதரி (Bastard Sister)" என்று Frazer கூறுகின்றார். மாயவித்தை பொம்மை ஆதலால் பயன் தரக் கூடியதல்ல. அது உண்மை பயன் தரவல்லதாயின் மாய மந்திரமாகாது. விஞ்ஞானமாகக் கருதப்பட வேண்டும். அறிவியல் உண்மையை அடிப்படையாகக் கொண்டு பல கண்டு பிடிப்புகளைத் தந்துள்ளது. அது உற்று நோக்கல், ஆய்வு, ஒப்பிடுதல் முதலியவற்றை மேற்கொண்டு விதிகளை உண்டாக்கி யுள்ளது. அறிவியலின் குறை குற்றங்கள் ஆராய்ச்சிகளின் மூலம் தவிர்க்கப் பட்டு உண்மையை வெளிப்படுத்தும் சக்தி வாய்ந்தது. மாயவித்தையோ உண்மை, ஒப்பிடுதல் இவற்றைத் தடுத்து ஒரு செயலை முடிக்க முற்படுகின்றது. ஒரு சடங்கைச் சரியாகச் செய்யாவிடின் முடிவைக் காணமுடியாது என்றபோதிலும் சமயம் மாயவித்தை இவ்விரண்டும் அறிவியலால் விளக்க முடியாத சில நிகழ்ச்சிகளை விளக்குகின்றது. எடுத்துக் காட்டாகப் பழங்குடி மக்கள் ஒரு கட்டுமரத்தைத் தயாரித்த காலத்தில் அவர்கட்கு அறிவியல் அறிவு இல்லாதிருந்த போதிலும் சமயமும் மாயவித்தையும் அவர்களை முன்னேறச் செய்தன. சமயம் மாயவித்தை இவ்விரண்டும் அறிவியலுக்கு அப்பாலுள்ள செயல் படும் முறைகள் என்று கருதப்படுகின்றன. விஞ்ஞானம் உலகை விதிகளால் புரிந்து கொள்ளுகின்றது. சமயம் ஒரு அப்பாற்பட்ட சக்தியைக் கொண்டு உண்மையைப் பெற முயல்கின்றது. மாயவித்தை ஒரு மாயையைக் கொண்டு உண்மையைப் பெற முயல்கின்றது. சமயத்தின் தன்மைகள் ஈண்டுக் குறிப்பிடத் தக்கவை. சமயச் சடங்குகள் எல்லாம் எல்லா மக்களாலும் ஏற்றுக் கொள்ளக் கூடியன. அவை மனதிற்கு அமைதியைக் கொடுக் கின்றன. மாயவித்தை மனிதனின் விருப்பு, வெறுப்புகளை நிறை வேற்றவும் அகற்றவும் (Fetishism) என்னும் கொள்கையைச் சார்ந்துள்ளது. Fetish என்பது ஒரு பொருள். எடுத்துக்

காட்டாக ஒரு பறவை இறகு, தாயத்து என்பன. அவற்றின் திறனே அதன் முடிவாகும்.

## (ஆ) இந்தியப் பழங்குடி மக்களின் சமயங்கள் (Tribal Religions in India)

இந்தியாவில் பழங்குடி மக்களின் சமயம் இயற்கைக் கொள்கை (Animism) என்று கூறப்பட்டு வருகிறது. இயற்கைக் கொள்கை சமுதாயத்தின் முதற்கட்டம் என்றும் அதில் மாயவித்தை முக்கிய இடம் பெற்றுள்ளதென்றும் கூறப்படுகிறது. இயற்கைக் கொள்கையாளர் மனிதனைச் சுற்றிப் பலதரப்பட்ட ஆவிகள் அவன் செயல் முறைகளைக் கண்காணித்து வருகின்றன என்று கூறுகின்றனர். அவற்றுள் சில தலைமைச் சிறப்பு வாய்ந்து வாழ்க்கையின் பல கோணங்களை உருவாக்கி வருவதாகக் கூறுகின்றனர். எடுத்துக் காட்டாக மனிதனின் உடலைக் காக்கும் சக்தி, நோயைத் தோற்று விக்கும் சக்தி மழை இடி முதலியவற்றை ஏற்படுத்தும் சக்திகள் முதலியன. இச்சக்திகளின் நன்மை தீமைகளைப் பெற சில செயல் முறைகளை வகுத்துக்கொண்டு வாழ்ந்து வந்தனர். குறவர் என்னும் பழங்குடி மக்கள் பயிர்த் தொழிலைப் பாதுகாக்கச் சில சடங்குகளை மேற்கொண்டுள்ளனர். பொதுவாக இயற்கைக்-கொள்கை பழங்குடி மக்களின் சமயக் கொள்கைகளில் நிலவிய கருத்துக்களை விளக்குகின்றது. இந்து சமயத்திற்கும் இயற்கைக் கொள்கைகளுக்கும் பல ஒற்றுமைகள் உள. வேதகாலச் சமயம் இவ்வொற்றுமைகளை மேற்கொண்டு முன்னேறியுள்ளது. எனினும் இயற்கைக் கொள்கை இந்து சமயமாகாது. பழங்குடி மக்கள் அவர்களின் நலனுக்கும் வழிபாட்டுக்கும் பல இயற்கைக் கடவுளை நம்பி வாழ்ந்து வந்தனர். அக்கொள்கைகள் தற்காலச் சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்படா. பொதுவாகப் பழங்குடி மக்களின் சமயங்கள் தற்காலச் சமயத்திற்கும் ஆதிகால சமயத்திற்கும் உள்ள இடைவெளியை எடுத்துக் காட்டுகின்றது. அதாவது அறிவின்மைக்கும் அறிவிற்கும் உள்ள வேறுபாட்டைக் குறிக்கின்றது.

## (இ) குலமரபுச் சின்ன அடிப்படையில் கொள்ளும் வாழ்க்கை முறை (Totemism)

இக்கொள்கை பலதரப்பட்ட எண்ணங்களால் பாதிக்கப் பட்டுள்ளது. பொதுவாக இக்கொள்கை பழங்குடி மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு வழக்கில் வந்துள்ளது. Totem என்பது ஒரு பொருள். அது ஒரு விலங்கு (அ) தாவரம் (அ இயற்கைப் பொருளைக் குறிக்கின்றது. ஆதிகால மனிதன் மேற் கூறிய பொருள்களுக்கும் அவன் வாழ்விற்கும் இடையே ஒரு தொடர்பு

உண்டெனக் கருதிவந்தான். அப்பொருள்களை அவன் வழிபடும் தெய்வமாகவும் கருதி அவற்றை வழிபாடு, பக்தி முதலியவற்றுக் குள்ளாக்கினன். அக்கால மனிதன் தான் உயிர்வாழ்வதற்கு Totem ஒரு இன்றியமையாத காரணம் என்றும் அவன் வாழ்க்கை அதிலிருந்து தொடங்குகிறதென்ற குறிக்கோளையும் நடைமுறைக்குக் கொண்டுவந்தான். பெரும்பாலும் விலங்குகள், பறவைகள், தாவரங்கள் மற்றும் உயிரினங்கள் குலமரபுச் சின்னங்களாக மேற்கொள்ளப்பட்டன.

குல இன வழிபாடு சமுதாயத்திற்குச் சமுதாயம் வேறுபடு கின்றது. இனமரபுக் கொள்கை கீழ்க்காணும் தன்மைகளை மேற் கொண்டுள்ளது. 1. ஒரு மானிடக் குழு அக்குழுவின் இனச் சின்னத்தைக் கொண்டுதான் புரிந்துகொள்ளக் கூடும். 2. குல மரபுச் சின்னம் ஒரு கட்டுக் கதையை மேற்கொண்டு அதன் மூலம் தொடர்பை எடுத்துக் காட்டுகின்றது. பெரும்பாலும் ஒரு சந்ததியின் மூதாதையர் ஒரு விலங்கு (அ) பறவையாக இருந்து அதன் மூலம் தோன்றியதாக மேற்கொள்ளப்பட்டது. 3. இனச் சின்னக் கொள்கை பல சமயச் சடங்குகளை வகுத்துக் கொண்டுள்ளது. 4. இனச் சின்னச் சடங்குகள் குறிக்கப்பட்ட இனத்தை அழிக்காமலும் உண்ணுமலும் அச்சின்னத்தைப் பெருக்குவதைக் காட்டுகின்றது. 5. இனச் சின்னக் குழுக்கள் பொதுவாகக் குழுக்கு அப்பாலுள்ள பெண்ணையோ ஆணையோ மணக்கும் விதியை மேற்கொண்டுள்ளது. இன மரபுக் கொள்கை யாளர் அவ்வினத்தின் சின்னத்தைத் தங்கள் உடலில் (பச்சைக் குத்துதல்) பொறித்துக் கொள்வார்கள்.

பழங்குடி மக்களின் பிரிவுகள் இனச் சின்னத்தை மேற் கொண்டுள்ளன. எடுத்துக்காட்டாக முதலைச் சின்னம், புலிச் சின்னம், பூசனிக்காய்ச் சின்னம் என்பன. கிளான்(Clan) என்னும் நிறுவனம் இனமரபுக் கொள்கையை முழுமையாக மேற் கொண்டுள்ளது. கோல்டன் வீசர் (Golden Weizer) என்னும் அறிஞர் பழங்குடி குழுவின் சமுதாய நிறுவனம் இனச் சின்னத்தை முற்றிலும் சார்ந்துள்ளது என்று கூறியுள்ளார். இனமரபுச் சின்னங்கள் ஒரு குழுவை உயர்த்தியோ தாழ்த்தியோ மக்களைப் பாதிக்கின்றன. இனமரபுக் கொள்கையாளர்கள் தாங்கள் கொண்டுள்ள சின்னங்களின் இயல்புகளை மேற்கொண்டுள்ளதாகக் கருதப்பட்டது. டர்க்கின் (Durkhein), பரேஸர் (Frazer), ரிவர்ஸ் (Rivers) என்போர் இனமரபுக் கொள்கை 1910ஆம் ஆண்டுக்கு மேல் பெருமளவு நன்கு விளக்கிக் கூறியுள்ளனர். இனமரபுக் கொள்கை ஒரு குழுவிற்குப் பெயரைக் கொடுப்பதற்காக

உண்டாக்கப்பட்டதென்றும் பொருள் உற்பத்தி பெருகுவதற்கும் வாணிகம் வளர்வதற்கும் கூட்டுறவுத் தொழிலுக்கும் பொருளாதார உள்ளுணர்வைக் கொண்டு ஏற்படுத்தப்பட்டதென்று கூறியுள்ளார்கள். பொதுவாக இனமரபுக் கொள்கை ஆஸ்திரேலிய மக்களிடம் அதிகமாகப் பரவியுள்ளது. அங்குள்ள பழங்குடி மக்கள் பலதரப்பட்ட மாறுதல்களை விளக்க இயலாமல் அருகிலுள்ள தாவரம், விலங்கு அல்லது உயிரற்ற சடப் பொருளை அதற்குக் காரணமாக விவாதித்து வந்தனர். நம் நாட்டில் தோடர் என்னும் பழங்குடி மக்கள் எருமையை அவர்களது இனச் சின்னமாகக் கொண்டு வழிபட்டு வருகின்றனர். அவர்தம் இனச் சின்னம் அவர்களது சமுதாய ஒற்றுமையையும் ஒருங்கிணைந்த மனப்பான்மையையும் எடுத்துக் காட்டுகின்றது. பழங்குடிமக்கள், மனிதன் இறந்த பிறகு ஒரு ஆன்மா, ஒரு விலங்கு அல்லது ஒரு தாவரத்தில் குடியேறுவதால் அவ்விலங்கு அல்லது தாவரம் பாதுகாக்கப்பட வேண்டும் என்றும் அது ஒரு சமயக் கோட்பாடாக மதிக்கப்பட வேண்டும் என்றும் நம்புவதாகக் கூறப்படுகிறது.

இன மரபுக் கொள்கை எல்லா இடங்களிலும் ஒரே அளவிலும் ஒரே தன்மையாகவும் காண முடியாது. இந்தியாவில் சமயச் சார்பான இனமரபுக் கொள்கை விடுபட்டுச் சமுதாயத் தொடர்பு மட்டும் இருக்கிறது என்று ரிஸ்லி (Risley) என்னும் அறிஞர் கூறுகிறார். இந்திய இனமரபுக் கொள்கை எக்காரணத்தினாலோ மனிதனுக்கும் விலங்குக்கும் உள்ள நட்பையும் தொடர்பையும் எடுத்துக் காட்டுகின்றது. எடுத்துக் காட்டாக ஒரு வேடன் ஒரு புறுவைக் கொன்று பின்னர் அவன் தன் கண்ணை இழந்தால் அதற்குக் காரணம் புறுவைக் கொன்றதுதான் என்பது மந்திரவாதியால் கூறப் படுமாயின் அவனும் அவனைச் சார்ந்த இனத்தவரும் புறுவை வழிபடத் தொடங்கி நாளடைவில் அவர்கட்கு அதுவே மதச் சின்னமாகவும் வழிபடுங்கடவுளாகவும் ஏற்றுக் கொள்ளப்படும். இனமரபுக் குழுக்கள் மூன்று காரணங்களைக் கொண்டு உருவாகியுள்ளது. 1. சேர்க்கை (Fusion), 2. பரவுதல் (Fission), 3. பொதுவாக்குதல் (Generalization). சேர்க்கை என்பது பல குடும்பங்கள் ஒன்றுசேர்ந்து ஒரு பொது இனச் சின்னத்தை மேற்கொள்ளுதல். ஒரு பெரிய நிறுவனம் பல சிறிய குழுக்களாகப் பிரிந்து ஒவ்வொன்றும் ஒரு இனச் சின்னத்தையும் ஏற்குமாயின் அது பரவுதல் என்று கூறப்படுகின்றது. எடுத்துக் காட்டாக ஒரு நிறுவனம் புலியை இனச் சின்னமாகக் கொண்டால் அதன் கீழுள்ள சிறிய குழுக்கள் புலிநகம், புலிப்பல், புலித்தோல் முதலியவற்றைச் சின்னமாக ஏற்றுக்கொள்ளும். தற்செயலாக ஒரு மனிதனுக்கோ அல்லது குழுவிற்கோ ஒரு விலங்கு அல்லது தாவர

வகைகள் ஒரு நன்மையைக் கொடுத்தால் அப்பொருளை அவர்களும் அவர்களுக்குப் பின்வரும் சந்ததிகளும் வழிபடத் தொடங்குவார்கள். இத்தகைய கொள்கையே பொதுவாக்குதல் என்று கூறப்படுகின்றது. இனமரபுக் கொள்கை இந்தியாவில் நாளடைவில் முக்கியத்துவம் பெற்று தற்போது ஒரு அவசியமான சமுதாய நிறுவனமாக விளங்குகின்றது. இக்கொள்கை மனிதனுக்கும் இயற்கைக்கும் இடையேயுள்ள தொடர்பையும் காரண காரியத்தையும் எடுத்துக் காட்டுகின்றது.

## விலக்கல் (Taboo)

விலக்கல் என்னும் சொல் ஆங்கிலத்தில் விலக்கப்படும். அஃதாவது மனிதன் செய்யத்தகாதவற்றைச் சொல்லின் மூலம் குறிக்கின்றது. பொதுவாக விலக்கல், சடங்குகள் அவற்றிற்குரிய நடத்தைகளை எடுத்துக் காட்டுகின்றது. பழங்குடிமக்கள் பல தரப்பட்ட விலக்கல்களைச் சொற்களின் மூலம் தலைமுறை தலைமுறையாக மேற்கொண்டனர். விலக்க வேண்டிய சடங்குகளை மனிதன் விலாக்காவிடில் தண்டனைக்குள்ளாவான் என்னும் கருத்து பழங்குடி மக்களின் உள்ளத்தில் ஆழப் பதிந்திருந்தது. விலக்கல் பழங்குடி மக்களின் எழுதப்படாத ஒழுக்க விதிகளாகக் கருதப்பட்டது. ஆதிகால மனிதன் ஒரு குற்றத்தைச் செய்தால் அதன் பலனை அவன் தானுகவே அடைவான். மேலும் அக்காலச் சமுதாயம் ஏற்படுத்திய விதிகளை மறுப்பானுகில் சமுதாயம் அவனைப் பழிக்குப் பழிவாங்கும் என்ற கருத்தை முற்றிலும் ஏற்று அவன் வாழ்ந்து வந்தான். ஒரு குற்றவாளி தனக்குத் தீங்கு அப்பாற்பட்ட சக்தியாலும் மாய மந்திர விதிகளாலும் ஏற்படுகின்றது என்ற கொள்கையை முற்றிலும் பின்பற்றி வாழ்ந்து வந்தான். விலக்கல் என்னும் சொல்லுக்குத் தனிச் சக்தி உண்டு என்று உண்ட் (Wuntt) என்னும் அறிஞர் கூறியுள்ளார். உளவியல் அறிஞராகிய ஃப்ராய்டு (Frued) என்னும் அறிஞர் விலக்கப்பட்டவை, விலக்குதல் இவை மனிதனுடைய உள்ளார்ந்த அச்சம், பயம் இவற்றை எடுத்துக் காட்டுகின்றது என்று கூறுகின்றுர். விலக்கல் அல்லது நீக்கல் ஒரு மனிதன் சமுதாயத்தில் எவ்வெவற்றைச் செய்யக் கூடும், செய்யக்கூடாது என்பதை வகைப்படுத்திக் காட்டுகின்றது. ஆதலால் விலக்கலை ஏற்பதோ தவிர்ப்பதோ தனிமனிதனைவிடச் சமுதாயத்தைத்தான் பாதிக்கின்றது. எனினும் விலக்கலை ஒப்புக் கொள்ளுதல் அப்புறப்படுத்துதல் முதலியவை தனிமனிதனுல்தான் செயல்படுத்த முடியும்.

மாய மந்திரமும் அதன் செயல்முறைகளும் இரண்டு தன்மைகளை மேற்கொண்டுள்ளன. 1. ஏற்கும் தன்மை.

2. அகற்றும் தன்மை. அகற்றும் தன்மைகள் விலக்கல் (Taboo) என்று கூறப்படுகின்றது. விலக்கல் உற்பத்தி (Productive) பாதுகாப்பு (Protective) தடுத்தல் (Prohibitive) என்ற மூன்று தன்மைகளை மேற்கொண்டுள்ளது. பயிர்த்தொழில் தொடர்பான செயல்களைத் தொடங்குவதற்கு முன் செய்ய வேண்டியவற்றையும் செய்ய வேண்டாதவைகளையும் உற்பத்தி குறிக்கின்றது. பெண்கள் குழந்தைகள் ஆகிய இவர்களைப் பாதுகாத்து அவர்கள் தேவைகளை நிறைவேற்றுவது பாதுகாப்பு என்று கருதப் படுகின்றது. மனிதன் சில பொருள்களைத் தீண்டாமல், பழகாமல் இருப்பது தடுத்தல் என்று கூறப்படுகின்றது. எ—க மதகுருவும் அவர் மாணவனும். காக்கப்படும், தவிர்க்கப்படும் விலக்கல்கள் சமுதாயத்தில் ஒருங்கே இயங்கியுள்ளன.

பலதரப்பட்ட விலக்கல்கள் டோட்டமிஸம் (Totemism) அல்லது பொருள்வழிபாட்டுக் கொள்கைச் சார்ந்துள்ளது. விலக்கல் தன்னைத்தானே வெளிப்படுத்தும் எண்ணங்களைக் கொண்டுள்ள உளநிலை என்று ஃப்ராய்டு (Frued) கூறியுள்ளார். மனிதனின் உள்ளத்தில் பெரும்பாலும் அவன் எதைச் செய்ய வேண்டும் ஏன் செய்ய வேண்டும் முடிவு யாது என்ற பலவிதக் கருத்துக்கள் ஊசலாடிக் கொண்டிருக்கும். இதன் விளைவுதான் விலக்குதல் (Oedipus Complex) என்பது ஒரு மனிதன் தன் தந்தையைக் கொலை செய்து தன் தாயை மணந்து அதன் காரண மாக தன்னைத் தானே நொந்து வருத்தப்படுவதும்; தன் இனக் கூட்டத்தைப் பாதுகாப்பதும் தன் குழுவிற்கு அப்பாலுள்ள ஒரு பெண்ணை மணப்பதும் என்ற கருத்துக்களை எடுத்துக்காட்டு கின்றது. அஃதாவது இனத்தைப் பாதுகாக்கச் சில விலக்கல் விதிகள் உண்டாக்கப்பட்டன. சமூகம் சார்ந்த மாறுதல்கள் சமூகத்தின் அடிப்படையில்தான் விலக்கப்படல் வேண்டும் என்றும் விலக்கல் சமுதாயத்தை ஒழுங்குபடுத்தவும், வாழவும் அடிப்படையாகக் கொண்டுள்ளது என்றும் Raclif Brown கூறியுள் ளார். விலக்கல் மனித வாழ்க்கைக்கும் மனிதனின் குறிக்கோளுக் கும் அடிப்படைத் தத்துவமாக ஆதிகால முதல் வந்துள்ளது. சமுதாய, சமய, சடங்குகள் விலக்கலின் செய்முறைகளையும் குறை யீடுகளையும் எடுத்துக்காட்டி இதுவரை நிலைநாட்டியுள்ளது.

# 8. மக்கள் தொகை

## (POPULATION)

### 1. இந்தியா (இனப் பிரிவுகள்)
### (Classification of Races in India)

நிலப் பரப்பில் முதலிடம் பெறும் ஆசியாக் கண்டத்தில் இந்தியா ஒரு பரந்த உள்ளடங்கிய நாடு. இந் நாட்டில் நாகரிகம் உச்ச நிலையை அடைந்துள்ளதையும் மேலும் நாகரிகமற்ற பழங் குடியினரையும் ஒருங்கே காணுகின்றோம். பலதரப்பட்ட மனித இனப் பிரிவுகளை இந்தியாவிலுள்ள பழமையான பழங்குடி மக்களின் மூலம் அறிய இயலுகின்றது. 20 ஆம் நூற்றாண்டில் கலப்படமற்ற இனம் உலகில் இல்லை யென்றும் குறிப்பாக இந்திய நாட்டில் இல்லை யென்றும் கூறப்படுகின்றது. தற்போது இந்திய மக்கள் உலகின் மற்ற பகுதிகளிலிருந்து இந்தியாவில் குடியேறியதால் இந்தியக் குடிமக்களின் நாகரிகம் கலப்புற்றதாகக் கருதப்படுகின்றது. ஆதலால் கலப்படமற்ற இன வகைகள் (Original Races) காணப்படுவதில்லை. ஹக்ஸ்லே (T. H. Huxly) என்னும் அறிஞர் இனம் பரந்த முறையில் மனித வர்க்கத்தை மற்ற உயிரினங்களிலிருந்து பிரிக்க உதவுகின்றது எனக் கூறி யுள்ளார். மேலும், மனித இனத்தை அவர்களின் தன்மையைக் கொண்டு வகைப்படுத்த முடியாது என்று எடுத்துக் காட்டியுள் ளார். இனம், மனிதனின் இயற்கைத் தன்மை, மொழி, பண்பாடு முதலியவற்றை எடுத்துக் காட்டி ஒவ்வொரு மனிதக் குழுவும் மற்ற குழுவிலிருந்து எவ்வெவ்வகையில் வேறுபடுகின்றது என்பதைக் குறிக்கின்றது. ஒவ்வொரு இனத்தின் எல்லையையும் முற்றிலும் சுட்டிக்காட்ட இயலாது. ஏனெனில், இனவகுப்பு மக்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு இடம் பெயர்ந்தாலும் அவர் தம் இயற்கை, செயற்கைத் தன்மைகளை எளிதில் மாற்ற இயலாது.

ரெஸ்லி (R. H. Risley) என்னும் அறிஞர் இந்திய மக்களைப் பல வகையாகப் பகுத்துள்ளார். திராவிட மக்கள், இந்திய-ஆரியர், ஆரிய-திராவிடர்கள், மங்கோலியர்கள், மங்கோலிய-திராவிடர்கள், சித்தூர் திராவிடர்கள், துருக்கி இரானியர்கள் என ஹேடன் (A. C. Haddon) என்பவர் ரெஸ்லி (Risley) வகைப்படுத்தியுள்ள இன வர்க்கங்களை மறுத்துத் தான் ஏற்றுக் கொண்டுள்ள பிரிவுகளைக் குறிப்பிடுகின்றார். அவர்தம் குறிப்பு அறிவியல் முறையிலும் இன்று ஏற்றுக் கொள்ளக்கூடிய வகையிலும், நிலவியல் அடிப்படையிலும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. அவை 1. இமாலயப் பிரிவினர், 2. சிந்து-கங்கைச் சமவெளியினர், 3. தக்காணப் பீடபூமிப் பகுதியினர் ஆகும்.

வரலாற்றாய்வாளர்கள் ஆரியர்கள் இந்தியாவினுள் புதிதாகப் புகவில்லை என்றும் அவர்களும் இந்திய மக்களே என்றும் கூறுகின்றனர். இதற்கெடுத்துக் காட்டாக அவர்தம் நாகரிகம், பண்பாடு ஆகியவை இந்தியாவிலுள்ள வேதம், புராணம், சமயச் சார்பான நூல்கள் ஆகிய இவற்றின் மூலம் உலகில் மிகப் பழமையானது என்பது வெளிப்படுத்தப்படுகின்றது. இதற்கு மாறாகக் குகா என்னும் அறிஞர் இந்திய மக்களை ஆறு பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். அவை நீக்ரோக்கள், ஆஸ்திரேலியரை ஒத்தவர், மங்கோலியர், நடுநிலக் கடல் சார்ந்த (Mediterranean) மக்கள், வடமேற்கு ஐரோப்பாவைச் சேர்ந்த நார்டிக் இனத்தவர், அல்பைன் டெனரிக்கு (Alpine Deniric) இனத்தவர்கள் என்பவை. கிறிஸ்துவிற்கு முன்னரே வேளாண்மை, ஆடுமாடு மேய்த்தல் ஆகிய தொழிலை மேற்கொண்டிருந்த ஆரியர் வடமலைச் சாரல் வழியாக இந்தியாவினுள் நுழைந்து தங்கள் நாகரிகத்தையும் பண்பாட்டையும் இந்தியா முழுவதும் பரப்பியதாக நம்பப்படுகின்றது. பொதுவாக ஆரிய மொழி பேசும் மக்கள் இந்தியாவில் குடியேறி திராவிட மக்களுடன் போரிட்டுத் திராவிடர்களைத் தென்னிந்தியக் கோடிக்குத் துரத்திவிட்டு சிந்து நதிச் சமவெளி, பஞ்சாப், காஷ்மீர், உத்திரப் பிரதேசம் ஆகிய வசதியுடைய பகுதிகளில் அவர்தம் வாழ்க்கையைத் தொடங்கினர். இப்பகுதிகளுக்கு ஆரியர் அவர்தம் குடும்பங்களுடன் வந்ததால் அதிக அளவில் மக்கள் கலப்பு அவரிடையே இல்லை என்றும் இங்குள்ள மக்கள் நல்ல உயரம், நிறம், நீளமான தலை, நீண்ட கைகள், பரந்த தோள்கள், கூர்மையான மூக்கு ஆகிய இவற்றை உடையவர் என்றும் கூறப்படுகின்றது. மேலும் இந்திய மக்களை நான்கு பிரிவுகளாகப் (அரசர், அந்தணர், வணிகர், வேளாளர்) பிரித்ததற்குக் காரணம் இவர்கள் ஆரிய மக்களின் பரம்பரையினர் என்று நம்பப்படுவதேயாகும்.

மங்கோலிய இனம் பல இடங்களில் பரவி உள்ளமையால் இவ்வினம் ஆசிய-அமெரிக்க இனம் என்று கூறப்படுகின்றது. இவ்வினமக்களை அஸ்ஸாம்,நேபாளம், பூடான், உத்தரப்பிரதேசம், பஞ்சாப், காஷ்மீர் ஆகிய இடங்களில் காணலாம். மேலும், ஆரிய மக்கள்தம் குடியேற்றத்திற்கு முன்பே திராவிட இனம் இந்தியா வில் இருந்ததாகக் கூறப்படுகின்றது. ஆரியர்கள் திராவிடர்களை விட பண்பாட்டில் சிறப்புற்று விளங்கியமையால் திராவிடர்களைத் தென்னிந்தியக் கோடிக்கும் வட இந்திய மலைப் பகுதிகட்கும் விரட்டியதாகக் கூறப்படுகின்றது. எனினும், ஆரிய மக்களும் திராவிட மக்களும் ஒன்றுசேர்ந்ததன் விளைவு ஆரிய-திராவிட இனம் தோன்றியதாகும். மங்கோலியர் இனம் திராவிட இனத் துடன் கலந்து மங்கோலிய-திராவிட இனம் தோற்றுவிக்கப் பட்டது. சாக்காசு (Sakhas) என்னும் மக்கள் சித்தியன் (Scythian) இனத்தைச் சேர்ந்தவர். அவர்கள் இந்தியாவிற்குள் நுழைந்து திராவிட இனத்துடன் கலந்து மராத்தியர் இனத்தை உண்டாக்கியுள்ளனர் என்று கூறப்படுகின்றது.

இந்தியாவிலுள்ள நீக்ரோ மக்களைப் பற்றிப் பல கருத்துக்கள் உள்ளன. வரலாறு தோன்றியதற்கு முன்பு ஒருவகையான காட்டுமிராண்டிகள் மட்டும் இந்தியாவில் இருந்ததாகக் கூறப்படு கின்றது. சான்ருக காடன் (Kadar), புலையன் (Pulaiyans), வெட்டாஸ் (Veddays) ஆகியோர் ஆவர். இப்பழங்குடி மக்கள் காய், கனிகளை உண்டு காட்டில் அலைந்து திரிந்து வாழ்ந்து வந்தனர். ஹட்டன் (Hutton) என்பவர் இந்தியாவில் முதன் முதலாகக் குடியேறிய மக்கள் நீக்ரோக்கள் என்றும் அவர்க்குப்பின் ஆஸ்திரேலியப் பழங்குடி மக்கள் என்றும் அவரைப் பின்தொடர்ந்து நடுநிலக் கடல் சார்ந்த மக்கள் என்றும் இவர்கள் கங்கைநதிச் சமவெளியில் குடியேறி வாழ்ந்து வந்ததாகவும் கூறியுள்ளார். பொதுவாக இந்திய மக்களின் இனக் கலப்பு நடுநிலக் கடல் சார்ந்த மக்களால் பாதிக்கப்பட்டுள்ளனர் என்று தொல் பொருள் ஆராய்ச்சியினர் கூறுகின்றனர். பொதுவாக இந்தியாவிற்குள் பலதரப்பட்ட மக்கள் குடியேறி இந்தியாவின் நாகரிகம் பண்பாடு இவற்றை மாற்றியும் முன்னேற்றம் அடையவும் செய்துள்ளனர். இதற்கொரு சான்று சிந்து நதி நாகரிகம், பண்பாடு முதலியவை. தற்போது இந்தியாவில் பலதரப்பட்ட இன வகைகள் குடியேறி அவர்தம் பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றைப் புகுத்தியிருப்பதால் நம் நாட்டில் பல சமயங்கள், மொழிகள், பழக்க வழக்கங்கள் இவற்றைப் பின்பற்றுகின்ற மக்களைக் காண்கின்றோம். சான்ருக மைசூர், கேரளம், வட மாநிலத்து மக்கள் ஆவர்.

## 2. மக்கட் தொகையும் சமுதாயமும் (Population and Society)

உலகிலுள்ள மக்கட் தொகை, எல்லா இடங்களிலும் ஒரே அளவாக இருப்பதில்லை. ஏனெனில், உலகின் மொத்த நிலப்பரப்பு 5.5. கோடி சதுர மைல். இம் முழு நிலப்பரப்பின் கால் பகுதியில், மக்கள் தொகையில் பெரும் பகுதியினர் வாழ்கின்றனர். எஞ்சிய நிலப்பரப்பு, கடுங் குளிரால் பாதிக்கப்படுவதாலும் வேளாண்மைக் குத் தகுதியற்றதாதலாலும் இவ்வின்னல்களுக்கிடையே மற்ற மக்கட் தொகுதியினராகிய சிறு பகுதியினரே வாழ்கின்றனர். உலகில் வாழும் மக்கட் கூட்டத்தை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1. கிழக்கு, தெற்கு ஆசியாக் கண்டத்தில் அடங்கிய இந்தியா, சீனு, ஜப்பான் ஆகிய நாடுகளில் உலகின் முழு மக்கட் தொகையில் அரைப் பகுதியினர் வாழ்கின்றனர். 2. உலகின் முழு நிலப் பரப்பின் 6% நிலப்பகுதியாகிய மேற்கு, மத்திய ஐரோப்பாக் கண்டத்தில் உலக மக்கட் தொகையின் கால் பகுதியினர் வாழ் கின்றனர். 3. வடகிழக்கு அமெரிக்கா எஞ்சிய மக்கட்தொகைக்கு இடமளிக்கின்றது.

இம் மண்ணுலகில் மக்கட் தொகை சமமாகப் பிரிக்க இயலா மைக்குக் காரணம் இயற்கை, நிலப்பரப்பு, நீர் வசதி, போக்கு வரத்து, பண்பாடு முதலியவை மக்கள் வசதிக்கேற்ப அமையாமை யேயாகும். எனினும், மக்கட் தொகைப் பெருக்கம், இனச் சிக்கல் மேலோங்குதல் முதலியவை மனிதன் ஓரிடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்கு ஏதாவதொரு காரணம் பற்றி இடம் பெயர்வதால் ஏற்படுவதாகும். இன வல்லுநர்கள் (Race Experts) இனப்பிரிவு பிறப்பு, தன்மை, பண்பாட்டின் வேறுபாடு, நாகரிகம் இவற்றை மேற்கொண்டு முற்பட்ட இனம் பிற்பட்ட இனம் என்ற மனப் பான்மைக்கு இடமளிக்கின்றது என்று கூறியுள்ளனர்.

சமுதாய நிலைப் புள்ளி விவர ஆய்வு, தற்காலச் சமூக இயல் களில் அண்மைக்கால இயலாகக் கருதப்படுகின்றது. இந்த இயல் 18ஆம் நூற்ருண்டில் முக்கியத்துவம் பெற்று மற்ற சமூக இயல்களை மேலோங்கச் செய்து ஊக்கம் அளித்துள்ளது. சமுதாய நிலைப் புள்ளி விவர ஆய்வு, சமூக இயலுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு மக்களின் தொகையைக் கணக்கெடுப்பதிலும் மக்களின் மாற்றத்தைப் புரிந்துகொள்வதிலும் மக்கள் தொகையைப் பெருக்கு வதிலும் குறைப்பதிலும் மற்றும் அதைச் சார்ந்த பல சிக்கல்களை ஆய்வதிலும் ஈடுபட்டுள்ளது. பெரும்பாலும் மக்கள்தொகைச் சிக்கல்கள் சமூக இயல் சிக்கல்களாகவே உள்ளன. சமூக இயல்

வல்லுநர்களும் மக்கட்தொகை நிபுணர்களும் மக்கட் தொகையை வகைப்படுத்துவதிலும் தரத்தைப் புரிந்துகொள்வதிலும் ஊக்கம் காட்டுகின்றனர். மக்கட் தொகையை சமுதாயத்தின் அடிப் படையில் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1. மக்கட் தொகையை வகைப்படுத்துவது. 2. மக்கட் தொகையின் எண்ணிக்கை. டர்க்கின் (Durkhein) என்னும் சமூக அறிஞர், "மக்களின் நெருக்கம் சமூகத்திலுள்ள நட்பைக் குறிக்கின்றது" என்று கூறி யுள்ளார். மேலும் "மக்கட் பெருக்கம் ஊர், கிராமங்கள், போக்கு வரத்து வசதிகள் ஆகியவற்றைப் பொருத்துள்ளது" என்றும் மற்றும் "மக்களின் தரம், அவர்தம் பண்பாடு, பொருளாதாரம் ஆகியவற்றை மேற்கொண்டுள்ளது" என்றும் கூறுகின்றார். ஒரு நாட்டின் மக்கள் தொகையின் எண்ணிக்கை பெருகினால் அந் நாட்டில் பல சமுதாய மாறுதல்கள் ஏற்படக்கூடும். 'சமுதாயத் தொழிற் பிரிவு' என்னும் நூலில் டர்க்கின் என்பவர் மக்கள் தொகைப் பெருக்கம் சமூகத்தை மாற்றி இயந்திர ஒருமைப்பாட் டைத் தோற்றுவிக்கிறது என்று கூறியுள்ளார். ஆனால், சமூக இயலும் மற்ற சமுதாய இயல்களும் மக்கள் எண்ணிக்கை சமுதாயத்தின் சிற்சில பகுதிகளில் மட்டுமே சிக்கலாக ஏற்பட் டுள்ளது என்றும் இச் சிக்கல்களைத் தற்காலச் சமூகம் பொருட் படுத்துவதில்லை என்றும் ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றம் அந் நாட்டின் மக்கட் தொகையைச் சார்ந்துள்ளது என்றும் திறனாய்வு செய்து கூறியுள்ளனர்.

உலகில் மக்கள் சிற்சில பகுதிகளில் மிகுதியான அளவிலும் சிற்சில பகுதிகளில் குறைவான அளவிலும் பரவியுள்ளனர். "நாடென்ப நாடா வளத்தன" என்ற வள்ளுவர் கூற்றுக்கு ஏற்ப தட்ப வெப்ப நிலை, இயற்கை வளம், பரந்த நிலப்பரப்பு, தண்ணீர் வசதி, வளமான நிலம் முதலியவையே மனிதன் ஓரிடத்தில் குடியேறக் காரணமாயுள்ளன. எடுத்துக் காட்டாக நம் நாட்டில் சிந்து நதிக்கரையிலும் கங்கைநதிப் புறத்திலும் மக்கட் தொகை பெருகி இருப்பதைக் காணுகின்றோம்.

உலகின் பல்வேறு நாடுகளையும் மாநிலங்களையும் உற்று நோக்குவோமாயின் அயர்லாந்து, செர்மனி, பிரான்சு, சுவீடன், ஸ்காட்லாந்து போன்ற நாடுகளில் மக்கட் தொகை மிகவும் குறை வாக உள்ளது. மேலும், இந்தியா, சீனா போன்ற நாடுகளில் மக்கள் தொகை பன் மடங்கு பெருகியுள்ளது. மற்றும் ஜப்பான், அமெரிக்கா போன்ற நாடுகளில் மக்கட் தொகை சராசரியாக (மிதமாக) உள்ளது. மக்கள் தொகை உலகில் ஒரே அளவில் இல்லாதது ஒரு சிக்கலாக உள்ளது.

பண்டைக் காலத்தில் மக்கள் தொகை குறைவதற்குப் பல வழிகள் இருந்தன. அவற்றுள் சிலவற்றைக் காண்போமாயின் அவை, வயது வந்த பெண்கள் மகப்பேற்றின்போது இறத்தல், குழந்தைகளை முறையாகப் பேணுமையால் இறத்தல், நோய்வாய்ப் பட்டு இறத்தல், இயற்கை அன்னையின் சீற்றத்தால் இறத்தல், வயதானவர்களைக் காட்டில் இடுதல், தாழியில் புதைத்தல் போன்ற பழக்க வழக்கங்கள் ஆகும். தற்காலப் புள்ளி விவரங்கள் பிரான்சு, ஸ்வீடன், அயர்லாந்து போன்ற நாடுகளில் சிறுவர் சிறுமியர் மிகக் குறைவு என்றும் வயோதிகரே அதிக எண்ணிக்கையினர் என்றும் புள்ளி விவரங்கள் கூறுகின்றன. இந்தியா சீனு போன்ற நாடுகளில் மக்கள் தொகை பெருமளவிற்குப் பெருகி உலகில் ஒரு விழிப் புணர்ச்சியைத் தோற்றுவித்திருக்கின்றது. எனினும், சீன நாட்டிற்கு மக்கள் தொகைப் பெருக்கம் ஒரு சிக்கலல்ல; அந்நாடு முன்னேற்றமடைந்துள்ளது; பொருளாதாரத்தில் மேன்மை வாய்ந்-துள்ளது; ஆதலால், அங்கு மக்கள் பசியால் இறப்பதில்லை. ஆனால் இந்தியாவின் மக்கட் தொகைப் பெருக்கம் ஒரு தீவிரப் பிரச்சனையாக உருவாகியுள்ளது. உண்மையாகக் கூறுவோமாயின் நாம் இதை ஒரு சிக்கலாகக் கருதவேண்டிய அவசியமில்லை. ஏனெனில், நம் நாட்டில் ஏராளமாக இயற்கை வளம் இருப்பினும் செயற்கை வளம் வேண்டிய அளவிற்குப் பெருக்கப்படவில்லை. மால்தஸ் (Thomas R. Malthus) என்னும் அறிஞர் இங்கிலாந்தில் 19ஆம் நூற்றுண்டில் மக்கள் தொகை பெருகிக் கொண்டே சென்றது குறித்து வருத்தப்பட்டார். அவர்தம் ‘மக்கட் தொகை’ என்னும் கட்டுரையில் மக்கட் தொகை வடிவியல் சார்ந்த (Geometrical) விகிதத்தில் பெருகுவதாகவும் உணவு உற்பத்தி கணிப்பியல் (Arithmetic) வீதத்தில் அதிகரிப்பதாகவும் முறைப் படுத்தி மக்கட் தொகைக்கும் உணவுப் பொருட்களுக்கும் சார்பு உள்ளதாகவும் கூறியுள்ளார். மக்கட் தொகைப் பெருக்கத்தினுல் சமூகத்தின் தரம் குறைந்தும் சமூகத்தின் நிலை அதிகரித்தால் மக்கட் தொகை குறைந்தும் ஒன்றையொன்று பாதிக்கப்படுகிறது என்ற குறிக்கோளை வலியுறுத்தினுர். பொதுவாக மால்தஸ் அவர் களின் கொள்கை இந்தியாவிற்குப் பொருந்தக் கூடியது.

மக்கட் தொகையின் அடிப்படையில் இரண்டு கொள்கைகள் மேற்கொள்ளப் படுகின்றன. 1, மால்தஸின் மக்கட் தொகைக் கொள்கை (Malthusian theory of Population). 2. மிகவும் விரும்பத் தக்க மக்கள் தொகைக் கொள்கை. (Optimum theory of population).

மால்தசின் மக்கட் தொகைக் கொள்கை நம் நாட்டிற்கு ஓரளவு ஏற்றுக் கொள்ளக் கூடிய தென்ருலும் அது பல

குறைகளைக் கொண்டுள்ளது. மால்தசு மக்கட் தொகை பெருகுவதைக் குறித்து வருந்தினாரேயன்றி உணவு உற்பத்தியை மேன்மேலும் பெருக்கலாம் என்பதைப் புறக்கணித்துவிட்டார். மக்கள் தம் நாட்டை விட்டு அயல்நாடுகளில் குடியேறக் கூடும் என்ற கொள்கையை மேற்கொள்ளவில்லை. மக்கள், கல்வியறிவில் மேம்பட்டால் மக்கட் தொகை குறைந்துவிடக் கூடும் என்ற கருத்தை முற்றிலும் துறந்தார். ஆதலால் அவர் கருத்து இக் காலத்தில் ஏற்றுக் கொள்ள இயலாததென்று புறக்கணிக்கப் பட்டது. இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகிய இன்று இந்தியா ஒரு முன்னேற்ற மடைந்துவரும் நாடாக இயங்குகின்றது. நம் நாட்டின் வளம் பெருகப் பெருக, மக்கள் கல்வி வளர வளர, மக்கள் தொகை நம் கட்டுக்கு உட்படக் கூடும். மேலும், தற்போது பல்வேறு வழிகளில் மக்கட் தொகையை உள்ளடக்குவதற்கு இந்தியக் குடியரசு பல திட்டங்களை வகுத்துள்ளது. சான்றாக, ஒரு குடும்பத்தில் இரண்டு அல்லது மூன்று குழந்தைகட்கு மேல் இருக்கக் கூடாது என்ற விதி நடைமுறைக்கு கொண்டுவரப்பட்டுள்ளது. குடும்பக் கட்டுப்பாட்டு முறைகள், நம்நாட்டு மக்களுக்கு ஓரளவு அறிவையும் சிக்கனத்தையும் கொடுத்துள்ளது. தற்போது, பலதரப்பட்ட கருத்தடை முறைகளின் மூலம் மக்கள் தொகை பெருகுவதைத் தடுக்க முயற்சி செய்து வருகின்றனர். மேலும், பெண்கல்வி, முன்னேற்றம், காலங்கடந்த மணம், பொருளாதார உயர்வு முதலியவை மக்கட் தொகையை ஓரளவிற்குக் கட்டுப்படுத்தியுள்ளன.

பெரிதும் விரும்பத்தக்க சூழ்நிலைக் கொள்கை (Optimum theory), பொருளாதாரம் மேம்பட்டால் மக்கள் தொகை குறைந்துவிடும் என்ற கூற்றை வற்புறுத்துகின்றது. இக் கொள்கை, முற்போக்கு நாடுகளாகிய அமெரிக்கா, சப்பான் போன்ற நாடுகளில் செயல் படுத்தப் படுகிறது. மனிதன் தன் இயற்கை, செயற்கை, தொழில் மற்றும் பல பணிகளில் ஈடுபடுவதால் மக்கள் தொகை இயற்கையாகவே குறைந்து விடுகின்றது என்று கூறப்படுகின்றது. மேலும், சிற்சில நாட்டு மக்களிடை தான் கருவளம் இயற்கையாகவே அமைந்துள்ளது என்றும் பெரிதும் விரும்பத்தக்க சூழ்நிலைக் கொள்கை மேன்மேலும் பெருகினால் அதை மேற்கொண்டுள்ள நாடுகள் ஒரு வேளை மக்கட் தொகை இல்லாமல் இருக்கக்கூடிய நிலை ஏற்படலாம் என்றும் நம்பப்படுகின்றது. மேற்கூறிய காரணங்களால், பெரிதும் விரும்பத்தக்க சூழ்நிலைக் கொள்கை (Optimum theory) முற்றிலும் ஏற்க இயலாது.

இந்தியாவைப் பொருத்தமட்டில் மால்தசின் கொள்கை பொருத்தமாக உள்ளது. இந்திய அரசாங்கம் பல திட்டங்களின் மூலம் (Indian Constitution) மக்கள் தொகையை ஓரளவிற்குக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர முயல்கின்றன. அவை ஐந்தாண்டுத் திட்டம் (Five Year Plans), சமுதாய மறுமலர்ச்சித் திட்டம் (Community Development), தேசீய அபிவிருத்தித் திட்டங்கள் (National Extention Programme), நிலக் கொடை இயக்கம் (Bhudhan Movement), கல்வித் திட்டம், சமூக சீர்திருத்தம் என்பன. தற்போது நம் நாட்டுக் கிராமங்களின் மக்கட் தொகைப் பெருக்கம் ஒரு சிக்கலாக இல்லை. ஏனெனில், கிராம வாழ் மக்கள், குடிசைவாழ் மக்கள் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை ஏற்றும் அதைப் பயன்படுத்தியும் ஓரளவிற்கு முன்னேற்ற மடைந்துள்ளனர்.

## 3. மக்கள தொகையைக் கட்டுப்படுத்த மேற்கொள்ள வேண்டிய விதிகள் (Measures to check population)

நம் நாட்டில் மக்கள் தொகையைக் கட்டுப்படுத்தப் பல குடும்ப நலத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அவை பலதரப்பட்ட கருத்தடைத் திட்டங்கள். 1. காலம் கடந்து மணம் செய்து கொள்ளுதல் (Late marriage). 2. கருச் சிதைவு (Abortion). 3. பலதரப்பட்ட கருத்தடைக் கருவிகள் பயன்படுத்தப் படுதல் (Contraceptives). 4. கருவுருமல் இருக்க பல மாத்திரைகளை உட்கொள்ளுதல் (using tablets). இம் முறைகள் பெரும்பாலும் பிற்பட்டுக் கல்வியறிவற்ற இனத்தவரிடையே பயன் படுத்தப்படுகின்றன. மேலும், கிராமவாழ் மக்களுக்கும் ஓரளவிற்கு பயன்படுத்தப் படுகின்றன. நகர்ப்புற மக்களுக்கு மேற்கூறிய முறைகள் அதிக அளவில் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், கல்வியறிவு, பொருளாதார முன்னேற்றம் இவைகளில் அவர்கள் தங்களை ஈடுபடுத்திக் கொள்வதால் அவர்களிடையே மக்கட் தொகை அதிகரிப்பதில்லை. மேலும், மக்கட் தொகை பெருகாமலிருக்கப் பல சமுதாய நிறுவனங்கள் சான்ருக கிராம மருத்துவர்கள், கிராமப் பொதுநலப் பணியாளர்கள் இவர்கள் கிராம மக்கட்கு மக்கட் தொகையைக் குறைப்பதால் ஏற்படும் நன்மைகளை விளக்கியும் ஓரளவிற்கு மக்கட் தொகையைக் கட்டுப்படுத்தியும் வருகின்றனர். நம் நாட்டில் குடும்பக் கட்டுப்பாட்டு இயக்கம் முழு வெற்றி பெற வில்லை என்றும் கூறுகின்றனர். இதற்குக் காரணம் பல சமயக்

கோட்பாடுகளையும் பழக்க வழக்கங்களையும் மேற்கொண்டுள்ள தால் நீண்ட நாள் ஆகுமென்பதில் வியப்பில்லை. அரசும் குடும்ப நலத் திட்டத்தில் ஈடுபட்டு மக்கட் தொகையைக் கட்டுப் பாட்டிற்குக் கொண்டுவர முயற்சி செய்கின்றது.

மக்கள் தொகையைக் கட்டுப்பாட்டிற்குக் கொண்டுவராவிடில் பல தீமைகள் ஏற்படும். அவை 1. போதுமான உணவு மக்களுக்குக் கிடைப்பது அரிது. 2. மக்கள் பலவித நோய் களுக்கு உள்ளாவர். 3. குழந்தைகள், ஆண்கள், பெண்கள் சிறுவயதிலேயே இறக்க நேரிடும். 4. பலதரப்பட்ட தீய செயல்களை மக்கள் செய்ய நேரிடும். 5. நாட்டின் தரம் குறைந்து விடும். 6. நம் நாட்டு மக்களின் வலிமையும் உரமும் குறையக் கூடும். மேற்கூறிய காரணங்களை இந்தியாவிலுள்ள எல்லா குடிமக்களும் தத்தம் உள்ளத்தில் பதியவைத்துக் கடமையை ஆற்றினால் மக்கள் தொகைக் கட்டுப்பாடு அல்லது குறைவு நம் நாட்டில் தோன்றலாம்.

## 4. 20ஆம் நூற்றாண்டில் மக்கள் தொகையின் போக்கு (Population trend in 20th Century)

நம் நாட்டில் மக்கள் தொகைப் பெருக்கம் ஒரு சிக்கலாக உள்ளது. மற்ற நாடுகளில் அது ஒரு சிக்கலானதல்ல. ஏனெனில் பொருளாதாரம் வளம் பெற்றுள்ளது. மேலை நாட்டு மக்கள் நம் நாட்டு ஆன்மீக முன்னேற்றத்தையும் ஒழுங்கு முறைகளையும் பார்த்தும் கேட்டும் வியக்கின்றார்கள். எனினும் இந்தியக் குடி மக்கள் ஏழ்மைத் தன்மை என்னும் பிணியிலிருந்து விடுபட வில்லை.

> "உறுபசியும் ஓவாப் பிணியும் செறு பகையும்
> சேரா தியல்வது நாடு"

என்ற வள்ளுவர்தம் கனவை நினைவாக்க, இக்குடியரசு முழு மூச்சுடன் முயல்கின்றது. இக் கூற்றைச் செயல்படுத்த மேலை நாட்டுப் பொருளாதார அடிப்படைத் தத்துவங்களை மேற் கொள்ளுதல் வேண்டும். நம் நாட்டின் உற்பத்தியைப் பெருக்க ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் குடிசைத் தொழில், கைத் தொழில், சிறு தொழில், அடிப்படைத் தொழில் (Basic Industry), கன ரகத் தொழில் (Heavy Industry) முதலியவை தொடங்கப்பட்டு செயல்படுகின்றன. இவை முன்னேற்றமடைந்து நாட்டிற்கு

நன்மையளிக்க மேலும் பல ஆண்டுகள் ஆகும். ஏனெனில், ஒரு நாட்டின் சரித்திரத்தில் கால், அரை நூற்றுண்டுகள் என்பவை ஒரு சிறு பகுதியேயாகும். மேலே நாட்டிற்கேற்ப நாமும் விரைவில் முன்னேற வேண்டுமாயின் மக்கள் தரம், ஒத்துழைப்பு, மனந் தளரா ஊக்கம், விடா முயற்சி, பொறுப்பு முதலியவை முற்றிலும் தேவை. மேலும், அரசும் மக்களுக்கு ஆதரவு கொடுத்தும் அவர் தம் தேவைகளை நிறைவு செய்தும் நாட்டின் வறுமையைப் போக்கி யும் மேலை நாடுகளைப் போல் உயர்வடையச் செய்தல் வேண்டும். அன்றியும், மேலை நாகரிகம், விதிமுறை ஆகியவற்றை மேற் கொண்டு பொருளாதார வசதியை மேன்மேலும் பெருக்கிக் கொண்டு முன்னேற்றப் பாதையில் செல்லும் நம் நாட்டில் மக்கள் தொகைப் பெருக்கம் ஒரு சிக்கலான பிரச்சனையாகக் கருதப்பட வேண்டிய நிலை ஏற்படாது.

# 9. கல்வி

## (EDUCATION)

"கேடில் விழுச் செல்வம்" என்று வள்ளுவரும் "சிற்றுயிர்க்கு உற்ற துணை" என்று குமரகுருபர அடிகளும் போற்றிப் புகழ்கின்ற கல்வி மனிதனை முழுமை அடையச் செய்யும் ஒப்பற்ற சக்தியைப் பெற்றுள்ளது. உண்மையான கல்வி "கற்றனைத்தூறும் அறிவு" என்னும் கூற்றுக்கேற்ப அறிவை ஊட்டி உயர்ந்த பண்பாடுகளைப் புகட்டி ஒரு நாட்டின் எதிர்காலச் சிற்பிகளை உருவாக்குகின்றது. பிளேட்டோ என்னும் தத்துவ மேதை கல்வி, மனிதனின் உடல், உயிர், அறிவு இவற்றை மேம்படச் செய்கின்றது என்று கூறியுள்ளார். "சுவரை வைத்தே சித்திரம் எழுதுதல்" போல் தூய்மையான உடலில் தான் தெளிவான கல்வி இருக்கக் கூடும் என்பது ஆங்கிலப் பழமொழி (Healthy mind is in a Healthy body). "கல்வி அழகே அழகு" என்னும் பழமொழி ஆசிரியரின் தெளிவிற்கேற்ப அரிஸ்டாடில் என்னும் கிரேக்க மூதறிஞர், "கல்வி, மனிதனுடைய உள்ளுணர்ச்சியையும் அறிவுக் கூர்மையையும் விளக்கமுறச் செய்து தன் அழகு, நலம், நன்மை, வாய்மை முதலியவற்றைச் சிந்திக்கத் தூண்டுகின்றது" என்று கூறியுள்ளார். மக்களுக்கும் மாக்களுக்கும் உள்ள ஒரே வேறுபாடு மனிதன் பகுத்தறிவைப் பெற்றிருப்பதேயாகும். ஆயினும், மனிதன் அப்பகுத்தறிவைக் கல்வியின் மூலமே பெருக்கிக் கொள்ளுகின்றான்.

பண்டைக் காலச் சமுதாயத்திலும் இன்றைய நாகரிக சமுதாயத்திலும் "தந்தை எவ்வழி மைந்தன் அவ்வழி" என்பது போலக் கல்வி ஏற்றம் பெற்று வருகின்றது. எவ்வாறெனில், மனிதன் மற்ற உயிரினங்களைப் போல் பிறந்தது முதல் தன் முயற்சியாலேயே வளர்கின்ற தன்மையைப் பெருமையால் குழந்தைப் பருவம் முடியும் வரைப் பெற்றோரின் ஆதரவிலும் பொறுப்

பிலும் பல அனுபவங்களைப் பெறுகின்றான். பெரியோர் வழியைச் சிறியோர் பின்பற்றுதல் என்பது பொதுவாக ஏற்கப்படும் ஒரு கோட்பாடு. இக் கொள்கையைச் செயல்படுத்துவது குடும்பம். நாகரிகப் பண்பாட்டிலும் கூடக் குடும்பத்திலுள்ள உற்றார் உறவினர்கள் கல்வியை இன்றியமையாததாகக் கருதுகின்றனர். சான்றாக ஒரு சிறு குழந்தைக்குப் பழக்க வழக்கங்களைக் கற்பிப்பது முதியோர் குழுவாகும். பழங்காலத்தில் குருகுலக் கல்வி முறையே மேலோங்கி இருந்தது. இன்றையக் கல்வி முறை சில நூற்றாண்டு கட்கு முன்னரே பின்பற்றப்பட்டது. மற்ற நிறுவனங்களைப் போலக் கல்வி நிறுவனமும் ஒரு உள்ளடக்கம் கொண்ட நிறுவன மாகும். ஆதலால் கல்வியும் கல்வி நிறுவனங்களும் சமுதாயத் திற்கு அடிப்படையாக உள்ளன. ஏனெனில், புதுமையைத் தோற்றுவிக்கவும் மாற்றங்களை உண்டாக்கவும் கல்வி இன்றியமை யாதது. முற்போக்கான சமுதாயத்தில் கல்வியைத் தனித் துறை யாகவும் நிறுவனமாகவும் கருதுகின்றோம். பொதுமனிதனின் வாழ்க்கையில் முதற்குழுவாகிய குடும்பம் அவனுக்கு எல்லா வற்றையும் கற்பித்தபோதிலும் அவன் நாட்டின் உறுப்பினனாகவும் மனித வர்க்கத்தில் இடம் பெறவும் கல்வி துணை நிற்கின்றது.

முதற்குழுவாகிய குடும்பம் சமுதாயத்தின் வித்து. இயற்கை தன் சக்தியால் மனிதனுக்குப் பாதுகாத்துக் கொள்ளும் பொறுப் பிணையும் ஒருவருக்கொருவர் இருக்க வேண்டிய அன்பையும் எடுத்துக் காட்டுகின்றது. கல்வியற்ற ஒரு மனிதன் சமூகத்தில் இயங்க முடியாதவனாக ஆகின்றான். 1952 ஆம் ஆண்டு வெளி யிட்ட அறிக்கையில் பெருமதிப்பிற்குரிய டாக்டர். ஏ. எல். முதலி யாரவர்கள் "நம் நாட்டிலுள்ள மக்களைத் தனிப்பட்ட முறையில் குடியரசு மக்களாக உயர்த்த வேண்டும்; அதன் பொருட்டு அறிவுக் கூர்மை, சமுதாயக் கொள்கைகள், நன்னடத்தை ஆகிய வற்றைத் தாமாகவே மேற்கொள்ள இயலாததாலும் இவ்வரிய பண்புகளை வெளியார் அறிவுறுத்த இயலாததாலும் அவர்தம் அறிவுக் கூர்மை, கல்வி முதலியவற்றைக் கொண்டு முன்னேற்ற மடையச் செய்யவேண்டும். சான்றாக ஒருவன் தன் வாக்குரிமை யை ஒழுங்கான முறையில் செயல்படுத்த பலமுறை சிந்தித்து ஓட்டளிக்க வேண்டும். இல்லாவிடில் அவன் பல இன்னல் களுக்கு ஆளாவான்" என்று கூறியுள்ளார். கல்வியின் பயன் சமுதாயத்தில் மட்டுமல்லாமல் மனித வர்க்கத்திற்கும் ஏனைய சமூகத்திற்கும் இன்றியமையாதது. கல்வியறிவு மனிதன் தன் வேறுபாடுகளை மறக்கச் செய்து ஒன்றுபட்ட எண்ணங்களை மேலோங்கச் செய்கின்றது. இத்தகைய தன்மையைத் தான் மனிதனின் ஆளுமை (Personality) என்று கூறுகின்றோம்.

உலகில் மக்களுக்கு உழவர்கள், தொழிலாளர்கள், அதிகாரிகள், அரசியல் வாதிகள், அறிவியல் அறிஞர்கள் ஆகியோர் தேவைப் பட்டாலும் இவர்களிடத்து மனிதத் தன்மையே மிக இன்றியமை யாதது. டாக்டர் இராதா கிருட்டிணன் அவர்களது அறிக்கை யில், "கல்லூரிப் படிப்பின் முக்கியத்துவம் மனிதனுக்கு உலகின் தோற்றத்தையும் வாழ்க்கையின் தரத்தினையும் எடுத்துக் காட்ட வேண்டும். ஆதலால் கல்லூரிப் படிப்பு இக் கருத்துகளைத் தன் னகத்தே கொண்டுள்ளதாக இருத்தல் வேண்டும்" என்று கூறி யுள்ளார்.

## கல்வியின் வளர்ச்சி, மாற்றம்

பண்டைக் காலத்தில் கல்வி ஓரளவிற்குத் தேக்கமுற்ற (Stagnent) நிறுவனமாக விளங்கியது. அக்காலக் கல்வி மாணுக்கர்க்குச் சிற்சில பாடங்களை மட்டுமே குரு அல்லது ஆசிரியரின் மூலம் கற்பித்தது. இலக்கியம், வரலாறு, தத்துவம், சமயம், கணிதம், வான சாத்திரம், இராணுவ அறிவியல் மட்டுமே அறிவுறுத்தப்பட்டன. பழமையான தக்கசீலத்தில் உள்ள பல்கலைக் கழகம் அறிவியலுக்கும் வேதத்திற்குமே முக்கியத்துவம் கொடுத்து வந்ததாக நம்பப்படுகின்றது. இசை, உடற்பயிற்சி இவற்றோடு தொடர்புடைய பாடங்களும் ஓரளவிற்குக் கற்பிக்கப் பட்டன. கிரேக்க தத்துவ ஞானிகள், ஒரு மனிதனை இலக்கியம், நிலவியல், வரலாறு, சட்டம், அரசியல், அளவையியல் (Logic), மொழி முதலிய பலதரப்பட்ட கல்வியைக் கற்கச் செய்வதே கல்வி என்றும் அதன்மூலம் அவன் ஒரு நல்லொழுக்க முடைய குடிமகனாக விளங்க முடியும் என்றும் கூறியுள்ளனர்.

இடைக் காலத்தில், தேவாலயங்களும் பள்ளிக் கூடங்களும் பல்கலைக் கழகங்களும் கல்வியை மேம்படச் செய்தன. பொதுவாக இக்காலத்தில் இலக்கணம், சொற்பொழிவு, தர்க்கம், கணிதம், இசை, வான சாத்திரங்கள் முதலியவை முதலிடம் பெற்று விளங்கின. மறுமலர்ச்சிக் காலமாகிய 12ஆம் நூற்றாண்டில் சிறந்த எழுத்தாளர்கள் கல்வியின் கொள்கைகளை கிரேக்கம், இலத்தீன் மொழிகளின் மூலம் சிறப்படையச் செய்தனர். இக்கால முதல் கல்வி முறைகள் மூன்று தன்மைகளைப் பெற்ற புது வளர்ச்சி யைக் காண முடிகின்றது. 1. இலத்தீன் மொழி மறைதல். 2. நாட்டுமொழியின் மூலம் பாடங்களைக் கற்பித்தல். 3. அறிவியல் பரவுதல். மேற்கண்ட முறைகளில் கல்வியைப் பரப்ப முனைந்தனர். இலத்தீன் மொழி மக்களால் பயன்படுத்தப்படாததனால் அம்

மொழியின் மூலம் இளைஞர்கட்குக் கல்விகற்பிப்பது ஏற்றதா என்ற கேள்வி எழுந்தது. லாக் (Locke), மில் (J. S. Mill) என்னும் பயனெறி முறையைப் பின்பற்றுபவர்கள் பண்டைக் கிரேக்க ரோமக் கல்வி முறையை ஆதரித்தனர். நாளடைவில் கிரேக்க இலத்தீன் இலக்கியத்தின் மேன்மை குறைந்து கத்தே (Gouthe), மேத்யூ ஆர்னல்டு (Mathew Arnold), பெர்க்சன் (Bergson), ஹிலாரி பெல்லாக் (Hilairi Belloc) போன்றோர் அதனை முற்றிலும் மறுத்தனர். கெல்ஸி (Kelsey) என்னும் அறிஞர் கீழ்க் காணும் கல்வி முறையைப் பரப்புதல் வேண்டுமென்று வற்புறுத்தினார். 1. விஞ்ஞான முறை, அதன் முக்கிய விதிகளாகிய ஊன்றிப் பார்த்தல், ஒப்பிடுதல், பொதுக் குறிப்பாக்குதல் போன்றவை. 2. ஆங்கிலத்தை மேம்படச் செய்தல், எண்ணங்களைத் தெளிவுற வெளிப்படுத்துதல்; 3. அறிவை இலக்கியத்தின் அடிப்படையில் கொண்டு வருதல்; 4. அடிப்படை நாகரிக எண்ணங்களை மேற் கொள்ளுதல்; 5. கற்பனைகளைத் தோற்றுவித்து அவற்றைப் பேணுதல்; 6. ஒழுக்க முறைகளை விவரித்து அவற்றைப் பாது காத்தல்; 7. பொழுதுபோக்குதலுக்கு ஒரு வழிகாட்டியாக அமைத்தல் என்பன. மேலும், பண்டைக் காலக் கல்வி, தற்காலக் கல்வி முறைக்கு ஓர் ஊன்றுகோலாய் இருந்தது. இதனை முற்றிலும் மாற்றி மேற்கூறிய கல்விமுறை அமைக்கப்பட்டது.

தற்கால மனிதப் பண்பாட்டை மேற்கொண்டுள்ள சமுதாயத்தில் அறிவியல் கல்வியும் செய்முறை விதிகளும் ஒரு மனிதனை உருவாக்குகின்றன என்ற கொள்கை ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது. இக் கொள்கையை விளக்க நாம் செய்முறைக் கல்வி என்பது யாது என்று அறிதல் வேண்டும். செய்முறை அல்லது தொழில் முறைக் கல்வி (Vocational Training), ஆண், பெண், இளைஞர் ஆகியோருக்கு ஒரு தொழிலைத் திறம்படச் செய்யவும் அத் தொழில் பயன் தரக் கூடியதாகவும் இருத்தல் வேண்டும். சான்றாக நூல் நூற்றல், இரும்பைக் காய்ச்சுதல், மரம் அறுத்தல் போன்ற தொழில்களில் பயிற்சி பெற்றவர் தொழிற்சாலைகட்கு முற்றிலும் ஏற்றவராவர். இத்தகைய பயிற்சிகள் தற்காலச் சமுதாயத்தில் திறம்படக் கற்பிக்கப்படுமாயின் கல்வியின் முழுப் பயனும் நிறைவுறும். மாறாக இக் கல்விமுறை பொதுக் கல்வியின்றி தனித்தரக் கல்வி என்று கருதப்பட்டு சிற்சிலரால் ஏற்கப்படுவ தில்லை. 1937ஆம் ஆண்டு, வார்தாவில் நடைபெற்ற கல்வி மகா நாட்டில் அண்ணல் காந்தியடிகளால் ஆராயப்பட்ட அடிப்படைக் கல்வித் திட்டம் (Basic Education) தன்னிறைவு, பயிலுங்காலத்து வருவாயைத் தேடுதல் என்னும் கொள்கைகளைக் கொண்டுள்ளதால் இக்கல்வித் திட்டத்தை T. S. அவினாசிலிங்கம் என்னும் கல்வி

ஆய்வாளர், தாம் கல்வி அமைச்சராய் இருந்த காலத்துத் தமிழ் நாட்டில் நடைமுறைக்குக் கொண்டுவந்தார். மேற்கூறிய வார்தா கொள்கை, ஒரே தொழிலைக் கற்பித்து வந்ததாலும் கீழ் வகுப்பில் தீவிரமாகப் பயின்ற தொழில், பின்னர் மேல் வகுப்பில் கடைப் பிடிக்கப்படாமையாலும் மேலும், மாணவர்தம் அறிவுக் கூர்மைக் கும் எடுத்துக்கொண்ட தொழிலுக்கும் முரணுக அமைய நேரிடுவ தாலும் ஆளுமை (Personality) அல்லது முழுமையாக்குதல் முற்றிலும் வெற்றி பெருததாலும் இக் கொள்கை ஏற்கப்படவில்லை. ஆதலால், அதற்குப் பின்னர் பள்ளிகளில் பொதுக் கல்வி ஒன்று அல்லது இரண்டு தொழிலை மேற்கொண்டு கல்வி கற்பிக்கத் தொடங்கினர். உருவரைப் படங்கள் வரைதல், தட்டெழுத்து, சமூகப்பணி போன்றவை ஒரு மாணவன் பள்ளிப் படிப்பு நிறைவுற் றுப் பல்கலைக் கழகக் கல்வியை ஏற்குமுன் கற்றுக் கொள்ள இயலும் என்று நிரூபிக்கப்பட்டுள்ளது. பொதுக் கல்வியின் பயன்கள் கீழ்க் காண்பன. 1. பயன்படக்கூடிய ஒரு தொழிலைக் கற்றுக் கொள்ளுதல். 2. தனக்கு அறிமுகமில்லாத இடம் மனிதர் முதலியவற்றைத் தெரிந்து கொள்ளுதல். 3. அறிவினுல் செம்மாப் புற்றுப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு மற்றவர்களின் செயல் முறை களை ஊன்றி ஆராய்தல். 4 கைத்தொழிலின் திறத்தை உணர்ந்து தாழ்த்தப்பட்ட மக்களை அன்புடன் நோக்குதல். 5 பள்ளிப் படிப்புக்கும் பல்கலைக் கழகக் கல்விக்கும் உள்ள இடைவெளியை முற்றிலும் பயன்படுத்துதல்.

கல்வி என்னும் நிறுவனத்தில் ஆசிரியர் பெருமளவுக்கு முக்கியத்துவம் பெறுகின்ருர். ஓரளவிற்கு கல்வி நிறுவனங்கள் முற்றிலும் பயிற்சி பெற்று, தம்மைத் தாமே தியாகம் செய்கின்ற ஆசிரியப் பெருமக்களால்தான் ஓங்கி வளரக் கூடும். ஆசிரியர்கள் மாணவர்களைப் பயிற்றுவித்து சமுதாயத்தில் தலைசிறந்த ஒரு குடிமகளுக — விளங்கச் செய்கின்றனர். கல்விக்கூடங்கள் கீழ்க் காணும் பண்புகளைப் பரவச் செய்கின்றது. 1. சிறுவர்களுக்கு நன்னடத்தை, அறிவுக் கூர்மை ஆகியவற்றைக் கற்பித்தல். 2. பரம்பரையாக வந்த பழக்க வழக்கங்களை மேன்மேலும் பரவச் செய்தல். 3. மாணுக்கனின் முழுத் தன்மை (Personality)யை விரிவாக்குதல் என்பன. மேற்கூறிய கடமைகளோடு தன் அறிவையும் வளர்த்துக் கொண்டு உயர்ந்த ஒழுக்கம் நன்னடத்தை ஆகியவற்றிற்கு வழிகாட்டியாக இருத்தல் வேண்டும். ஆதலால் சமுதாயத்தில் ஆசிரியர் ஒரு சிறப்பான தகுதியைப் பெற்றுள்ளார்.

# 10. இனம்

## (RACE)

### 1. இனத்தைச் சார்ந்த பிரிவுகள்

### (Ethnic & Racial Groups)

பல இனத்தைச் சார்ந்த பிரிவுகள் ஒன்றுகூடி சமூக அமைப்பைத் தோற்றுவிக்கின்றன. மேலும், பற்பல சமூகப் பிரிவுகள் ஒன்றோடொன்று இணைந்தும் நட்பை மேற்கொண்டும் மிகச் சிக்கலான சமூக நிறுவனத்தை உண்டாக்குகின்றன. இந் நிறுவனத்தைப் பற்றிய செய்திகளை ஆராய்வோம். சமூக இயலின் இலக்கியத்தில் சமுதாயம் பல தலைப்புகளில் பிரிக்கப்பட்டுள்ளது. அவை 1. இனம் (Race), 2. சிறுகுழுக்கள் (Small Groups), 3 இனத்தைச் சார்ந்த குழு (Racial Groups) என. இப்பிரிவுகளுடன் "சிக்கல்" என்னும் சொல்லைப் பயன்படுத்திச் சூழ்நிலைக்கேற்ப புரிந்து கொள்ளுதல் வேண்டும். இவ்வுறவுகளையும் சிக்கல்களையும் சமூகத்தின் அமைப்பு, தன்மை ஆகியவற்றின் மூலம் ஆய்ந்தறிதல் வேண்டும். பழங்குடிச் சமூகக் குழுக்கள், உறவு, நட்பு, இடம், ஆண் பெண் என்ற பிரிவு, தொழிற் பிரிவு முதலிய பலதரப்பட்ட அமைப்புகளின் மூலம் பிரிக்கப்பட்டன. இக்காலத்தின் சிக்கலான சமுதாயத்தில் மக்கள் பல தொழில்களை மேற்கொண்டும் பலதரப்பட்ட பழக்க வழக்கங்கள், பண்பாடு, மதக்கொள்கை முதலியவற்றை மேற்கொண்டும் வாழ்கின்றனர். எனவே, சமூக இனத்தைச் சார்ந்த வேறுபாடுகள் சமூகக் குழுக்களுக்கு அடிப்படையாக உள்ளன. பல சமூகங்கள் ஒன்று சேர்ந்து ஒரு பெரிய சமுதாயத்தை உருவாக்கியுள்ளன. இக்குழுவில் உள்ள மக்கள் எல்லோரும் ஒரே சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் என்ற கொள்கை, அவர்களிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கட்டுப்படுத்தி ஒரே இனத்தைச் சார்ந்தவர்கள் என்பதை வலியுறுத்துகின்றது.

இனம் என்னும் சமூகப் பிரிவு, சமூக இயல் வல்லுநர்களால் மட்டுமே பல இன்னல்களுக்கிடையில் ஆராயப்பட்டுள்ளது. பொதுவாக "இனம்" என்றால் ஒரு மனிதனின் இயற்கைத் தன்மை, குணம், உடலமைப்பு ஆகிய இவற்றையே குறிக்கின்றது. எனினும் இன எண்ணத்தை மேற்கொண்ட குழுவைப் பற்றியே சமூக இயல் வல்லுநர்கள் ஆராய்கின்றனர். இனக் குழுவின் பண்புகள், தன்மைகள் முதலியவை, அதன் பரம்பரை மரபு என்று கருதப்படுகின்றது. இனக் குழுவின் இயல்புகளை முதற்குழுவின் (Primary Groups) உறுப்பினர்களிடையே காண்கின்றோம். சான்றாக நம் நாட்டிலுள்ள சாதிப் பிரிவுகள், அமெரிக்க நாட்டிலுள்ள வெள்ளையர்-நீக்ரோ பிரிவுகள் ஆகியவற்றைக் கூறலாம். இனப்பிரிவு நிறுவனங்கள் "நாமும் மற்றவரும்" (We and they) என்ற வேறுபாட்டைச் சமூக வாழ்க்கையில் எடுத்துக்காட்டி உட்குழுக்களாக (In groups) செயல்படுகின்றன. எனவே, இக்குழு தாமாகவே ஒன்றுசேர்க்கப்பட்டுத் தோற்றுவிக்கப்பட்ட, எல்லை யற்ற முதற்குழுவாகும். இதற்கு மாறாக இரண்டாம் குழு (Secondary group) உறுப்பினர்களை ஒன்றுசேர்க்கும் ஒரு நிறுவனம். இவ்விரு குழுக்களும் பொறாமை, இனச் சேர்க்கை என்ற பல தன்மைகளை அடிப்படையாகக்கொண்டு குழுக்களில் உள்ள மக்களை ஏற்றும் வேறுபடுத்தியும் "நாமும் மற்றவரும்" (we and they) என்ற முத்திரையை ஏற்றுக் கொண்டு செயல்படு கின்றது. இயல்பாக இனக் குழுக்கள் மிகப் பெரியதாக இருப்ப தில்லை. ஒரு பெரிய சமுதாயத்தில் பல இனக் குழுக்கள் அவற்றின் தன்மைகளை எடுத்துக்காட்டி இயங்குகின்றன. இனக் குழுக்கள் நாட்டுக்கு நாடு, இடத்திற்கு இடம் காலத்திற்கு காலம் மாறுபடு கின்றன. பொதுவாக இனக் குழுக்கள் வகுப்புப் பிரிவு, சாதிப் பிரிவு இவை இரண்டையும் சார்ந்துள்ளன. சமூக முரண்பாடு (Social Conflict) இனக் குழுக்களின் தன்மைகளை வெளிப்படுத்து கின்றது. சான்றாக நம் நாட்டிலுள்ள இந்துக்களுக்கும் பிற மதத்தவர்களுக்கும் உள்ள வேறுபாடு, மற்றும் மேலைநாட்டு வெள்ளையர்க்கும் நீக்ரோவர்க்கும் பொறாமை ஆகியவற்றைக் கூறலாம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இனப் பொறாமை மிகுந்த அளவில் காணப்படுகின்றது. ஏனெனில் அந் நாட்டில் பலதரப் பட்ட மக்கள் குடியேறியுள்ளனர். அமெரிக்க-ஐக்கிய நாட்டு மக்கள், நீக்கிரோவர், மெக்ஸிகோ மக்கள், இலத்தீன்-அமெரிக்க மக்கள், அமெரிக்க-இந்திய மக்கள் ஆசிய மக்கள் குறிப்பாகச் சீனர்கள், ஜப்பானியர், பிலிப்பைன்சு மக்கள் ஆகியோர். இப் பிரிவுகளில் உள்ள மக்களிடையே பலதரப்பட்ட வேறுபாடுகள்,

பொருமை ஆகியவற்றைக் காணலாம். இனப் பிரிவுகள், சமயத்தைச் சார்ந்ததாயினும் பண்பாட்டைச் சார்ந்ததாயினும் அவை, சமூக வரலாற்றில் அவர்களிடையே உள்ள உறவையும் நட்பையும் எடுத்துக்காட்டுகின்றன இவ்வினப் பிரிவுகளிலுள்ள மாறுபாடான எண்ணங்களை மாற்ற பொது நிறுவனங்கள், கல்விக் கூடங்கள், மாதா கோவில்கள் முதலியன முன்வந்து பணியாற்றுகின்றன.

மக்கள் குடியேற்ற நாடுகளில் (Colonial Countries) நிற வேறுபாடுள்ள மக்கள் (Negros) வெள்ளையரின்கீழ் சமூகப் பொருளாதார அரசியல் கொள்கையின் வாயிலாகக் கட்டுப்படுத்தப் பட்டுள்ளனர். இனக் குழுவின் தன்மைகள் எண்ணிக்கை (Number), அளவு (quantity) இவற்றைப் பொருத்து பிரிக்கப் பட்டுள்ளது. மேலும் மக்களின் இயற்கை வேறுபாடுகள் அஃதாவது நிறம், உடலமைப்பு, அறிவுக் கூர்மை இவற்றைக் கொண்டும் மனித இனத்தின் பிரிவுகளை எடுத்துக் காட்டுகின்றது. மற்றும் மொழி, நாகரிகம், பண்பாடு, சமயம் இவை மக்களை வேறுபடுத்தக் காரணமாக இருக்கின்றன. ஆனல், நம் தமிழ் மூதாட்டி ஔவைப்பிராட்டியோ ஆண் பெண்ணென்னும் இரண்டைத் தவிர சாதியோ இன வேறுபாடோ வேறில்லை என்று கூறுகிருள். பொய்யில் புலவர் வள்ளுவரோ ' பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் '' என்று வரையறுக்கின்ருர். மக்களின் மேன்மை ஒழுங்கு முறை, பொருளைச் சேர்த்தல், சேர்த்த பொருளை மற வழியில் பெருக்குதல் போன்றவை இனப் பிரிவுகளை வேரூன்றச் செய்கின்றன. மேலும், மக்களரசு வேறுபாடுகள் நிறைந்த கருத்துகளை வெளியிடுவதால் அரசின் மதிப்புக் குறைந்து சமூக அமைப்பிற்கு கேடு விளைகின்றது. பொதுவாக நேர்மையான சமூகம் மக்களுக்குச் சமமான வாய்ப்பளித்தல் இனக் கொள்கைக்கு பொருந்தாதவை. இனக் குழுக்கள் பெருக சாதியை மேற்கொண்ட குழு, சமூகம் அவற்றிற்குக் கொடுக்கப்பட்ட வாய்ப்புகள் முழுமை பெற்ருல் அக் குழுக்களை ஒரு நிறைவு பெற்ற (closed) சமூகமாகக் கருதலாம். மேற்கூறிய குழுக்களும் அக் குழுக்களிலுள்ள மக்களுக்கு அல்லது உறுப்பினர்களுக்கு முன்னேற்றத்தை நல்குகின்றன.

## 2. சாதி இன வேறுபாடுகள் (Caste distinction)

சாதி என்பது அதனுள் அடங்கி இருக்கும் உறுப்பினர்களுக்குப் பிறந்தது முதல் இறக்கும் வரை உறுதி செய்யப்பட்ட விதிகளால்

பாதிக்கப்படும் ஒரு நிறுவனம். அந் நிறுவனத்துள் பொருள், ஏழ்மை, வெற்றி, தோல்வி, ஏற்றத்தாழ்வு என்ற வேறுபாடுகள் இருப்பதில்லை. ஒரு சாதியின் உறுப்பினர்கள் சாதி விதிகளை முற்றிலும் ஒதுக்குவராயின் அவர்கள் அச் சாதியிலிருந்து விலக்கப் படுவர். சாதி என்பது இந்தியாவில் ஒரு வேரூன்றிய நிறுவனமாக விளங்கியதோடு இன்றும் ஓரளவிற்கு விளங்குகின்றது. எவ்வா றெனில் தற்போது சாதி இனம் இரண்டும் உலக மக்களிடமிருந்து வேருடன் களைய முயல்கின்றனர். சாதி, இன வேறுபாடுகள் இந்தியாவிலும் இலத்தீன் அமெரிக்காவிலும் அதிக அளவு காணப் பட்டு வந்தன. பொருளாதாரம், நாகரிகம், பண்பாடு, கல்வி, மக்கள் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளும் தன்மை ஆகியவை வளர வளர இன, சாதி வேறுபாடு மாறுபடுவது உறுதி. மேலும், வருங்கால மக்கள் இப்படிப்பட்ட பிரிவுகளையும் வேறுபாடுகளையும் முற்றிலும் வெறுக்கின்றனர். ஆதலால் சாதி, இனப் பிரிவு கல்வி அளவில் (Academic standard) மதிக்கப்படுகிறதேயன்றி சமூக முன்னேற்றமடைந்துள்ள இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதி மக்களால் ஏற்க இயலாது. இதே கோட்பாட்டை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த புறநானூற்றுப் புலவன் நக்கீரன் “உண்பது நாழி; உடுப்பவை இரண்டே” என்னும் கூற்றால் வலியுறுத்திச் சென்றான்.

# 11. சட்டம்

## (LAW)

எவராயினும் அவர்தம் குற்றத்தை ஆராய்ந்து கண்ணேட்டம் (ஒருதலைப் பட்சம்) இன்றி நடுவு நிலைமையின்கண் நின்று செய்யத்தக்கதை ஆராய்ந்து செய்வதே நீதி முறையாகும்-சட்டம் என்னும் சொல் நீதி என்ற பெயரில் பழங்காலத்தில் ஐம்பெருங் குழு, எண் பேராயம் உள்ளிட்ட அரசவையில் அரசனால் ஆராயப் பட்டது. பாண்டியன் அரசவையில் கண்ணகி, வேந்தனின் முன் னின்று, தன் கணவன் கள்வனல்லன் என்பதை நிலைநாட்டிய போது நீதி மன்றத் தலைவனாய் அமர்ந்த பாண்டியன் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன், தான் குற்றவாளி என்பதை உணர்ந்த வுடன்,

> "யானோ அரசன்? யானே கள்வன்;
> மன்பதை காக்கும் தென்புலம் காவல்
> என்முதல் பிழைத்தது; கெடுக என்னாயுள்"
>
> (சிலம்பு-கொலைக்களக்காதை)

என்று கூறி நிலத்தில் வீழ்ந்து இறந்தது பழங்காலத்தில் சட்டம் சிறப்புற்று மக்களுக்கு நீதியளித்துக் காத்ததை எடுத்துக் காட்டுகின்றது. பொற்கைப் பாண்டியனின் வரலாறும் இதையே நிலை நாட்டுகின்றது.

பொதுவாகச் சட்டம் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. 1. இயற்கைச் சட்டம் (Natural or Physical Laws), 2. சமுதாயச் சட்டம் (State or Civil Laws), 3 ஒழுங்குமுறைச் சட்டம் (Moral Laws or Religious Laws). மேற்கூறியவற்றுள் இயற்கைச் சட்டங்கள் இயற்கை அன்னையால் உண்டாக்கப் பட்டவை. சான்றாக பரிணாமச் சட்டங்கள் (Evolutionary Laws) புவியீர்ப்புச் சட்டம் (Law of Gravity) என்பன. இவ்விதிகளுக்கு மாறாக மனிதன் இயற்கையை எதிர்த்து வாழ முயலுவனாயின்

அவன் உயிருடன் வாழ இயலாது. இவ்வியற்கைச் சட்டங்கள் இன்றியமையாதவை போலவே சமுதாயச் சட்டங்களும் இன்றி யமையாதவை. ஏனெனில் மனிதன் ஒரு சமூக விலங்காக வாழச் சமுதாயச் சட்டங்கள் பயன்படுகின்றன. சான்றாக நாட்டுப் பற்று (Patriotism) பிறர் பொருளைக் கவராமை. சமுதாயச் சட்டங்களை மனிதன் புறக்கணித்தால் அவன் அச் சட்டங்களாலேயே தண்டிக் கப்படுவான். சமுதாயச் சட்டங்கள் மக்களால் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டாலும் அவை நாட்டுக்கு நாடு, சமுதாயத்திற்குச் சமுதாயம், இடத்திற்கு இடம் வேறுபடும். சான்றாக பழங்குடி மக்களும், அரசர் பரம்பரையினரும் ஒருவர் பல பெண்களை மணந்து வாழ்க்கை நடத்தலாம் என்ற கொள்கை மாறுபட்டு தற்போது ஒரு ஆண் ஒரே பெண்ணை மணந்து வாழ்க்கை நடத்த வேண்டும் என்ற கொள்கை சமுதாயச் சட்டத்தின் மூலம் நடைமுறைக்குக் கொண்டுவரப் புட்டுள்ளது. இறுதியாக உலகிலுள்ள உயிர்கள் அனைத்தும் ஆண்டவனுடைய படைப்புகள் என்றும் எனவே ஒருவரை ஒருவர் துன்புறுத்தலும் ஒருவர் பொருளை ஒருவர் பறித் தலும் குற்றமென சமயங்கள் வலியுறுத்துகின்றன. மனுநீதிச் சோழன் காலத்து ஏற்பட்ட சட்டங்கள் இன்று வரை முன்னோடி யாக இருந்து வருகின்றன. அவை அவ்வப்போது தம் இயல்பிற் கேற்ப மக்களை மாற்றியும், மக்களின் போக்கிற்கேற்ப தம்மை மாற்றிக் கொண்டும் தற்காலத்திற்கேற்ப உருவாக்கப்பட்டுள்ளன.

தற்காலச் சமுதாயத்திற்கு சட்டம் ஒரு இன்றியமையாத அமைப்பாக உள்ளது. சட்டம் சமுதாயத்தை நிலை நாட்டுகின்றது. மக்களின் அடிப்படை உரிமைகளை உருவாக்கி அவற்றைப் பாது காக்கவும் பயன்படுத்தவும் சட்டம் வழிகாட்டுகின்றது. ஒரு அரசால் உருவாக்கப்பட்ட சட்டங்கள் பொதுவாக எல்லா மக்களுக்கும் உரித்தானவை. அரசியல் சட்டங்களை மக்கள் மீறினால் அவர்கள் தண்டிக்கப்படுவர். இதற்கு மாறாக மன்றங்கள் குழுமங்கள் ஆகியவற்றின் சட்டங்களைப் புறக்கணித்தால் உறுப் பினர்களின் உரிமையே பறிக்கப்படும். ஆதலால் அரசியல் சட்டங்கள் அந்நாட்டு மக்களுக்குப் பல்வேறு உரிமைகளைக் கொடுத்தும் அவற்றின் மூலம் கட்டுப்படுத்தியும் அவற்றை மீறினால் தண்டித்தும் செயல்படுகின்றன. "சட்டம் சமுதாயத்தின் காப் பாளன்" என்று கூறப்படுகின்றது. சட்டம் பல விதிகளைத் தோற்று வித்து சமயத்திற்கு ஏற்ப அவற்றை விளக்கி நீதி மன்றங்களின் மூலம் செயல்படுகின்றது. நம் நாட்டுச் சட்டம், இந்திய அரசியல் நிர்ணயச் சட்டம் (Indian Constitution) என்னும் பேரேட்டில் உருவாக்கப்பட்டுள்ளது. சட்டங்கள் பழக்க வழக்கங்களிலிருந்து தோன்றியுள்ளன என்பதற்குச் சான்றாக நம் நாட்டு அரசியல்

நிர்ணயச்சட்டம் மக்களின் மொழி, சமயம் பண்பாடு, பாரம்பரியம் இவற்றிற்கேற்ப அமைக்கப்பட்டுள்ளது. உலகிலுள்ள மற்ற நாட்டுச் சட்டங்களோடு நம் நாட்டுச் சட்டத்தை ஒப்பிடுவோமாயின் நம் நாட்டுச் சட்டம் பல பிரிவுகளை மேற்கொண்டு நம் நாட்டில் வாழும் பலதரப்பட்ட மக்களுக்கு ஏற்ப உருவாக்கப்பட்டுள்ளது.

## குற்றம்
## (Crime)

இம் மலர்தலை உலகிலுள்ள மக்கள் அனைவரும் சட்ட விதிகளுக்கு உட்பட்டு இயங்குகின்றனர். இயற்கை விதிகள், கதிரவன், மதி ஆகிய இவற்றைக் கட்டுப்படுத்துகின்றன. மக்கள் இயற்றிய சட்டதிட்டங்கள் அவர்தம் வாழ்க்கையைத் திறம்படச் செய்கின்றன. பண்டைக்காலச் சமுதாயத்தில் பழக்க வழக்கங்கள் மக்களை ஒழுங்குபடுத்தி சட்ட விதிகளுக்கு உள்ளாக்கின. அஞ்ஞான்று மனிதன் எவ்வெவற்றைச் செய்யலாம் எவற்றைச் செய்யக்கூடாது என்ற கட்டளை மக்களால் தாமாகவே ஏற்படுத்தப்பட்டுள்ளது. சமுதாயம் வளர்ச்சியடையத் தொடங்கியது முதல் நாகரிகம் சிறந்து சட்டம் என்னும் நோக்கம் (Concept of law) பரவலாயிற்று.

ஆஸ்ட்டின் (Austin) என்னும் சட்ட நிபுணர் சட்டம் விதிகளைக் கொண்டுள்ள வரம்பு; மேலும், அவ்விதிகள் அறிவுக்கூர்மை வாய்ந்த மக்கள் அவற்றைப் பயன்படுத்தத் தோற்றுவிக்கப் பட்டுள்ளன என்று கூறுகின்றார். மேரட் (Marret) என்னும் அறிஞர் சட்டம், மக்களைச் சமுதாயத்தில் வழிப்படுத்தத் தகுதியுடைய கட்டளை என்று எடுத்துக் காட்டியுள்ளார்.

பொதுவாகச் சட்டம் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1. நோமோதெடிக் (Nomothetic) விதிகள். 2. ஆதிக்கம் செலுத்தும் சட்டம் (Dominative Law). முற்கூறிய சட்டம், சமுதாயத்திலுள்ள உறுப்பினர்களின் பாரம்பரிய பழக்க வழக்கங்களை எடுத்து விளக்குகின்றது. இது குற்றவாளி, ஒழுங்கற்றவன், முரணனவன் இத்தகைய பிரிவினரை சமுதாயத்தால் ஏற்படுத்தப்பட்ட விதிகளுக்கு உட்படுத்துகின்றது. ஆதலால், பழக்க வழக்க விதிகள் (Customary Laws) சமுதாய மாறுதல்களை ஓரளவு தடுக்க முயல்கின்றன. எண்ணிக்கை குறைவானோர்க்குப் பணியாற்றும் சட்டங்கள் ஆதிக்கம் செலுத்தும் சட்டம் என்று கூறப்படுகின்றன.

பொதுவாகச் சட்டம் மக்களின் சாதாரணப் பழக்க வழக்கம் முதல் உயர்ந்த பண்பாடு வரை அவர்களை நிர்ணயம் செய்து உலக அமைதியை நிலை நாட்டுகின்றது.

ஒழுங்குபடுத்தப்படாத சட்டங்கள் நிலவுமாயின் அந்நாட்டிலோ அம்மக்களிடையோ பூசல், புரட்சி, குற்றம் முதலியவை பெருகும். ஒழுக்கமற்ற சட்டம், சமுதாய அடிப்படையில் கொண்டுவர வியலாத சட்டம் ஆகியவை மக்களுக்குப் பயன் விளைவிக்காததோடு அவை நிலைத்து நிற்கவும் இயலாது. சட்டம் ஒரு குறிக்கோளைக் கொண்டு நடுவு நிலைமையை உருவாக்குகின்றது. சட்டம் பொதுவாகப் பொது மக்களின் நலத்தையே மேற்கொண்டுள்ளது. நீதி மன்றத் தலைவர், வழக்கறிஞர், ஆசிரியப் பெருமக்கள், சிறையதிகாரிகள் மற்றும் பல துறையிலுள்ள மேலாளர்கள் ஆகியோர் உளவியல், சமூகவியல் மற்றும் பல சமூக அறிவியல்களின் அடிப்படைத் தத்துவங்களைத் தங்கள் சிந்தையில் ஏற்றுச் சட்டங்களைச் செயல்படுத்துகின்றனர். இந்நிலையில் தான் சட்டத்திற்கு முழு உரிமையும் மதிப்பும் ஏற்படுகின்றன. இவர்கட்கும் மேலாக அரசு, மக்கள் பண்பாடு, அறிவு, நடத்தை ஆகியவை மேம்படவும் நாடு வளர்ச்சியடையவும் முழு மூச்சுடன் சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வருகின்றது.

பிரான்சிஸ் லேபர் (Francis Leiber) என்னும் சட்ட நிபுணர் 1834ஆம் ஆண்டு பீனலஜி (Penology) என்னும் சொல்லை முதன் முறையாகப் பயன்படுத்தத் தொடங்கினர். இதற்குப் பொருள் 'தண்டனை ஆய்வு' என்பதாகும். தண்டனை ஆய்வு நூல், தண்டனைக்குரிய விதிமுறைகளை வகுத்து அவை எவ்வெவ்வகையில் பயன்படுத்தப்பட வேண்டும் என்று எடுத்துக் காட்டுகின்றது. பொதுவாகக் குற்றவாளிகளைத் தண்டிப்பதிலும் அவர்களை திருத்துவதிலும் ஈடுபட்டுள்ளது. மேலும், குற்றம், அதற்குக் காரணம், அதைத் தடுக்கும் வகை ஆகியவற்றைப் புரிந்து கொள்ள முற்படுகின்றது. குற்ற ஆய்வு நூல் மக்களிடையே உள்ள மனப் போராட்டம் (Mental Conflict), எழுச்சி (Emotions) முதலியவற்றை உளவியல், அறவியல், உயிரியல், வரலாறு, அரசியல் போன்றவை மூலம் மக்களின் ஆளுமைத் திறன் (Personality) எவ்வெவ்வகையில் பாதிக்கப்பட்டுள்ளதென்று எடுத்துக் காட்டுகின்றது. குற்ற நூல் (Criminology) குற்றத்தின் காரண காரியத் தொடர்பை ஆராய்ந்து குற்றவாளியின் ஆளுமைத் திறன் போன்றவைகளை மேற்கொண்டு குற்றவாளியைச் சிறந்த முறையில் திருத்தக்கூடும் என்பதை ஆராய்கிறது. பொதுவாகக் குற்றவியல் குற்றத்தின் சிக்கல்களையும் அவை மக்களிடையே புகுந்து

மக்களைத் துன்புறுத்தும் வகைகளையும் குறிப்பாக எடுத்துக் காட்டு கின்றது.

பண்டைக்காலச் சமுதாயம் (Primitive Society) குற்றத்தை மூன்று பிரிவுகளாகப் பிரித்தது. 1. சமுதாயத்தின் விலக்கல், பழக்க வழக்கங்களை ஏற்கானம்; சான்றாக புற மணத்தடை (Endogamy) பில்லி சூனியம் (Witch craft) என்பன. 2. குடும்பத்தினுள் குற்றம் புரிதல் (Crime against the family group); சான்றாக பிறன் மனை நயவாமை (Adultry), தந்தைக் கொலை (Patricide) முதலியன. 3. ஒரு பொதுக்குடி மரபுக்குழு (Clan) மற்றொரு பொதுக்குடி மரபுக் குழுவைத் துன்புறுத்துதல்; சான்றாக ; களவு, கொலை, பிறர்க்குக் காயம் ஏற்படுத்துதல், பொய்யுரைப்பழி (Slander) என்பன. பண்டைக் காலச் சமுதாயத்தினர் குற்றம் செய்த மனிதனைத் தண்டிக்க அவனை அக் கூட்டத்திலிருந்து அப்புறப் படுத்துதல் (Excile), மெய்யில் புண்ணேற் படுத்துதல் (Corporal Punishment) போன்றவற்றைப் பயன்படுத்தினர். 'கண்ணுக்குக் கண்', 'பல்லுக்குப்பல்' (An Eye for an Eye; A tooth for a tooth) என்ற விதியை மேற்கொண்டு குற்றம் செய்தோரைத் தண்டித்தனர்.

அரசு என்னும் நிறுவனம் தொடங்கியதுமுதல் குற்றவாளி களைத் தண்டிப்பது, பொது மக்களைக் காப்பாற்றுவது போன்றவை அரசின்கீழ் வந்தது. ஒருவன் செய்யும் குற்றம் தனிமனிதனை மட்டும் பாதிப்பதல்லாமல் சமுதாயத்தையும் பாதிக்கின்றது. ஆதலால், அவனைச் சமுதாயக் குற்றவாளி என்றும் கருதக் கூடும். கீழ்த்திசைச் சட்டம் (Oriental Law), சமயச் சார்பான விதிகள், ஒழுக்க விதிகள், மனிதச் சமுதாய விதிகள் போன்றவற்றை வெகு விரிவாக விளக்கியுள்ளது.

ஒழுங்கற்ற சட்டம் முரண்பாடு, குற்றம் இவற்றிற்கு இடமளிக்கின்றது. இலக்கியல் நிறைவு (Ideal Law) பெற்ற சட்டம் மக்களுக்குப் பாதுகாப்பளித்து அவர்களை மேம்படச் செய்கின்றது. பொதுவாகச் சட்டத்தை இருபிரிவாகப் பிரிக்க லாம். 1. குறிப்பிட்டு உறுதி செய்யப்பட்ட சட்டம் (Positive Law), 2. இலக்கியல் நிறைவு பெற்ற சட்டம் (Ideal Law). முற்கூறிய சட்டம் நாட்டில் நிலவும் அமைதியையும் சட்டத்தையும் எடுத்துக் காட்டுகின்றது. இரண்டாவது, சட்டத்தின் குறைகளை எடுத்துக் காட்டி சட்டம் மாற்றி அமைக்கப்படவேண்டிய முறையை எடுத்துக் காட்டுகின்றது. ஒழுங்கற்ற சமுதாயத்திற்குப் பயன்படாத ஒரு நாட்டின் சட்டம் வலிமையற்றதாகவே விளங்கும்.

சட்டம், மக்களுக்கு நடுவுநிலைமை (Justice) நன்மை பயக்கும் ஒரு கருவியாக உள்ளது (Law is a means to an end and it seeks to do Justice). நடுவுநிலைமை (Justice) என்னும் சொல் மக்களின் நடத்தை, செய்கை முதலியவற்றை விளக்குகின்றது.

குற்றம் என்பது மனிதச் சமுதாயத்திற்கு எதிர்மாறான ஒரு செய்கையாகும். மனிதன் உலகில் தோன்றியது முதல் அறிந்தோ, அறியாமலோ குற்றங்கள் செய்தும், குற்றம் செய்வோரைக் கண்டும் வருகின்றான். இன்று குற்றம் நாடு அல்லது மாநிலம் இயற்றிய சட்டதிட்டங்களை எதிர்ப்பதும் புறக்கணிப்பதும் ஆகும். சான்றாகப் பொய்யுரைத்தல், பொருள்களைத் திருடுதல், மற்றவர்களைத் துன்புறுத்துதல் போன்றவை. பொதுவாகக் குற்றம் இருவகையாகப் பிரிக்கப்படும். 1. பொருள்களைக் கவர்தல். 2. மக்களைத் துன்புறுத்துதல்.

நம் நாட்டுத் தந்தையாகிய காந்தியடிகள் குறிப்பாக மூன்று குற்றங்களாகிய தீமையைப் பார்த்தல், தீமையைக் கேட்டல், தீமையைக் கூறல் (See no evil; hear no evil ; say no evil) ஆகிய இவற்றை முற்றிலும் நீக்கி உயர் வாழ்வு பெற வேண்டுமென்று அறிவுறுத்தியுள்ளார். ஆனால், நம் தமிழறிஞரோ " நினைத்தலும் செய்தலோடு ஒக்கும் " என்று குற்றத்தை வேரிலேயே களைந்தெறிய வேண்டுமென்கிறார்.

குற்றம் என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள் உள்ளன. சட்டத்தைப் புறக்கணிப்பவன் குற்றவாளி. குற்றம் செய்யும் பழக்கம் மனிதனிடையே பண்டைக்காலம் முதலே இருந்து வருகின்றது. மனிதன் தன் தேவையை நிறைவு செய்ய இயலாவிடின் குற்றத்தின் மூலமாயினும் தன் இச்சைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றிக் கொள்ள முனைகின்றான். சான்றாக கொடிய பசியால் இன்னலுறும் ஒருவன் உணவைத் திருடி உண்பது வியப்பானதன்று; ஆனால் அவன் செய்த செயல் சமுதாயத்தினரால் ஒரு குற்றமாகக் கருதப்படுகின்றது. தற்கால மனித சமுதாயம் பல்வேறு துறைகளிலும் வளர்ச்சியடைந்துள்ளது. சமுதாய வளர்ச்சி பெருகப் பெருக குற்றங்களும் ஓரளவிற்குப் பெருகிக் கொண்டே வருகின்றன. ஏனெனில், மனிதனின் தேவைகளை ஓரளவிற்குத்தான் நிறைவு செய்துகொள்ள முடிகின்றது. அவன் நிறைவு செய்து கொள்ள முடியாத இச்சைகளையும் விருப்பங்களையும் குற்றம் செய்தேனும் பெற முனையக் கூடும். குற்றம் செய்பவனைச் சமூக வல்லுநர்கள் " சமுதாயத் துரோகி " என்று ஒதுக்குகின்றனர். ஏனெனில்,

அவர்களால் சமுதாயம் பலவகையில் பாதிக்கப் படுகின்றது. குற்றம் செய்த ஒருவனைச் சட்டம் குற்றவாளியாகக் கருதி குற்றத்திற்கேற்பத் தண்டனை விதிக்கின்றது. சட்டத்தின் ஒரு இன்றியமையாத பகுதி குற்றப் பிரிவுச் சட்டம் (Criminal Law). அச்சட்டத்தில் பலதரப்பட்ட குற்றங்களுக்கான தண்டனைகள் விளக்கப்பட்டுள்ளன. சுருங்கக் கூறின் குற்றம் பல காரணிகளைக் கொண்டு குற்றம் செய்தவனை விளக்குகின்றது. குறிப்பாக, மனிதனின் தேவைகள் நிறைவேற்ற இயலாததால் அவன் குற்றம் செய்யத் தூண்டப்படுகின்றான். அவனுடைய தேவைகள் பல தரப்பட்டவை. அவை, 1. இயற்கையாகத் தோன்றிய இச்சைகள், பசி, உடலுறவு என்பன (Biological Instincts). 2. உள்ளத்தில் தோன்றும் இச்சைகளாகிய பொறாமை, போட்டி, எதிர்ப்பு என்பன (Psychological Instincts). 3. செல்வம், பொருள் போன்ற வற்றைப் பெறும் இச்சை (Material wealth).

சிறை நிர்வாகம் (Prison Administration) என்னும் சொல் (Francis Leber) பிரான்சிஸ்லெபர் என்பவரால் 1834ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது. சிறை நிர்வாகம் குற்ற ஆய்வின் (Penology) ஒரு பகுதியாகும். அது பெரும்பாலும் குற்றத்திற்கேற்ற தண்டனையை முடிவு செய்கின்றது. சிறை நிர்வாகம் அதன் அடிப்படைச் சட்டங்களை அரசியலுக்கு எடுத்துக் காட்டுகின்றது. சிறை நிர்வாகத்தின் தகுதி குற்றவாளியைத் தண்டிப்பதிலிருந்து வெளிப்படுகின்றது. குற்ற ஆய்வு, குற்றவாளியின் உளநிலை, பழக்கம், ஒழுங்குமுறை ஆகியவற்றை ஆய்ந்து அறிகின்றது. மேலும், குற்றத்தின் காரணங்களையும் வெளிப்படுத்துகின்றது. பொதுவாகக் குற்ற ஆய்வுநூல் சமூகவியலின் சட்டங்கள், மனோதத்துவத்தின் விதிகள், ஒழுக்க நெறியின் நியமங்கள், மரபுநிலை, சுகாதார விதி, வரலாற்றின் வாயிலாக அறியப்பட்ட நிகழ்ச்சிகள், அரசியல் சூழ்நிலை ஆகியவற்றின் மூலம் குற்றவாளி யின் ஆளுமையை புரிந்து கொள்ளுகின்றது. சுருக்கமாகக் குற்ற ஆய்வு நூல், குற்றத்தின் காரண காரியத்தை எடுத்து விளக்குவ தாகும். குற்ற ஆய்வு நூலின் ஒரு சிறப்புற்ற பகுதி சிறை நிர்வாகம். சிறை நிர்வாகம், குற்றம், அதைச் சார்ந்த இயல்புகள் முதலிய வற்றைக் கொண்டுள்ளது. குற்றத்தைப் பற்றிப் பல அறிஞர்கள் பலவாறாக விளக்கியுள்ளனர். சலின் (Sellin) என்னும் அறிஞர் குற்றம் மனிதனுடைய நடத்தையை எடுத்துக்காட்டுகின்றது என்று கூறுகின்றார். அவர், சமூக இயல், பொருளாதாரம், உளவியல், சமுதாய வாழ்க்கை ஆகியவை தனி மனிதனின் வாழ்க்கை நிலையைக் குறிப்பிடுகின்றன வென்று கூறியுள்ளார். பார்மிலி (Parmelee) என்னும் அறிஞர் குற்றம், குற்றவாளி இவற்றைச் சமூக

அறிவியல்களின் மூலம் ஆராய்கின்றது என்று கூறுகின்றார். பொதுவாக ஏனைய அறிவியல்களும் குற்றத்தைக் கட்டுப்படுத்தவும் அப்புறப்படுத்தவும் முயல்கின்றன. பொதுவாகச் சமூக அறிவியல்கள் இல்லாவிடின் குற்ற ஆய்வு தோன்றியிருக்க இயலாது. சமூக அறிவியல்களின் முக்கியக் கொள்கை சமுதாயத்திலுள்ள மக்கள் அனைவரும் உரிமை, சுதந்திரம் இவற்றைப் பெற்று களிப்புடன் வாழ்வதாகும். மனிதனுடைய ஒவ்வொரு சிக்கலும் அவனுடைய வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்துள்ளது. குற்றத்தை அறிய, விளக்க, அவனுடைய இறந்தகால, நிகழ்கால, எதிர்கால வாழ்க்கை முறைகளைப் புரிந்து கொள்ளவேண்டும்.

இவ் விருபதாம் நூற்றாண்டில் குற்றத்தை அகற்ற கல்வி ஒரு சிறந்த சாதனமாகக் கருதப்படுகின்றது. ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு மாநிலமும் கல்வித்துறையில் முன்னேற்ற மடைந்து மக்களுக்குச் சிறந்த கல்வியைப் புகட்டுவது மிக மிக அவசியம். ஒரு நாட்டின் பொருளாதாரம் பெருகாவிடினும் குற்றம் பெருக இடமளித்தலாகாது.

குற்றம், குற்றவாளிகள் ஒரு சமுதாயத்தில் இருப்பினும் பெருகினும் அவை அச்சமுதாயத்தின் வலிமையற்ற நிலையையே எடுத்துக் காட்டுகின்றது. குற்றவாளியைத் திருத்த கல்வி, நல்ல பழக்கவழக்கங்கள் நாட்டிற்கு மிகவும் அவசியம். காட்டுமிராண்டித் தன்மையிலுள்ள குற்றவாளிகளை மனிதத் தன்மையுள்ள மக்களாகத் திருத்துவது சமுதாயத்தின் கடமை. அறிவற்றவனுக்கு அறிவு புகட்டுவதும் அறிவு குறைந்தவனுக்கு அறிவைப் பெருக்கி அவனை நல்வாழ்விற்குத் திருப்புவதும் சமுதாயத்தின் மற்றொரு கடமையாகும். சமுதாயம் குற்றவாளியைச் சமுதாய எதிரியாகக் கருதாமல் மனிதத் தன்மையுடைய ஒரு குடிமகனைக் கருதுதல் வேண்டும். மேற்கூறிய குறிப்புகள் சமுதாயத்தால் பின்பற்றப் படுமாயின் குற்றவாளிகளும் நற்குடிமக்களாக மாறக் கூடும். இன்றைய சமுதாயம் குற்றம், குற்றத்திற்குரிய காரணகாரிய விதிகள், குற்றத்தைத் தவிர்த்தல், குழந்தைக் குற்றவாளிகள், குற்றவாளிகளைச் சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளல், மனிதனின் ஆளுமையை உண்டாக்குதல் போன்ற பல முனைகளில் ஈடுபட்டுள்ளது. பொதுவாக உலகிலும் குறிப்பாக நம் நாட்டிலும் குழந்தை வளர்ப்பு முக்கியத்துவம் பெற்றுள்ளது. ஏனெனில், இன்றைய குழந்தைகள் எதிர்கால மக்கள்

மேம்பட்ட சட்டங்களை உடைய ஒரு நல்ல அரசு மக்களின் நல்வாழ்வைக் குறித்தே செயலாற்ற வேண்டும். இயற்கைச்

சட்டத்திற்கு எதிராக மனிதன் போராட முடியாது. செயற்கைச் சட்டங்கள் பண்டைக்காலப் பழக்க வழக்கங்கள், மூட நம்பிக்கை முதலியவற்றை ஒதுக்கித் தற்போதைய நாகரிகத்திற்கேற்ப சட்டத்தை உருவாக்க வேண்டும்.

ஆஸ்ட்டின் (Austin) என்னும் அறிஞர் சட்டம் அறிவுள்ள மனிதனுக்கு ஒரு வழிகாட்டி என்று கூறியுள்ளார். சமுதாயச் சட்டம் ஒரு சமுதாயக் கட்டுப்பாடு. அது, அரசியல் நிர்வாகத்தின் மூலம் சமுதாயத்தில் இயங்குகின்றது. இக்கருத்தை மேரட் (Marret) என்னும் அறிஞர் எடுத்துக் காட்டியுள்ளார். சட்டம் நீதி, நடு நிலைமை, மனசாட்சி, விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை போன்ற வற்றைப் பெரும்பாலும் தழுவி மக்களுக்கு நல்வாழ்வை அளிக் கின்றது. சட்டம் குழந்தை வளர்ப்பு என்னும் விதிகளிலிருந்து சட்டபூர்வமான பலதரப்பட்ட விதிகளை மேற்கொண்டு காலத்திற் கேற்ப அமைதி, முன்னேற்றம் இவற்றிற்குத் தொண்டு புரிகின்றது.

# 12. பண்பாடும் நாகரிகமும்

## (CULTURE AND CIVILIZATION)

பண்பாடு என்னும் சொல்லுக்கு பல பொருள்கள் உண்டு. பொதுவாகப் பண்பாடு என்றால் சமூக மேம்பாடும் மதிக் கூர்மையும் ஆகும். மேத்யூ ஆர்னல்டு (Mathew Arnold) என்னும் பெயர் பெற்ற நூலாராய்ச்சியாளர் பண்பாடு இனிமைத் தன்மையையும் அறிவையும் குறிக்கின்றது என்று கூறியுள்ளார். சொரோக்கின் (Sorokin), மக்காய்வர் (Maciver) என்னும் சமூக வல்லுநர்கள் பண்பாடானது நன்னடத்தை உளத்தூய்மை அறிவுக் கூர்மை முதலியவற்றைக் குறிக்கின்றது என்று கூறியுள்ளனர். டேவிட் பிட்னே (David Bidney) தத்துவ மானிட ஆராய்ச்சியாளர் பண்பாடு மனிதத் தன்மையைச் சூழ்நிலைக்குத் தக்கவாறு அமைத்துக் கொள்ளுவதும் அதை வளர்ப்பதுமாகும் என்று கூறியுள்ளார். வடமொழியில் (சமஸ்கிருதம்) சடங்குகளைத் தழுவி வருதல் என்ற பொருளைப் பண்பாடு கொண்டுள்ளது. ஓர் இந்து தான் பிறந்தது முதல் தான் செய்ய வேண்டிய சடங்குகளை மேற்கொண்டு ஒழுகுவதே பண்பாட்டின் குறிக்கோளாகும். எடுத்துக்காட்டாகக் குடும்ப வாழ்க்கை, பண்பாடு மனிதத் தன்மையின் மேன்மையை எடுத்துக் காட்டுகின்றது. மனிதன் ஒரு சமூக விலங்காதலால் அவன் செய்ய வேண்டிய கருமங்களைச் செய்து பண்பாட்டின் சின்னமாகின்றான். இ. பி. டெய்லர் (E.B. Tylor) என்னும் மானிட இயல் வல்லுநர் முதன் முதலாகப் பண்பாடு என்னும் சொல்லுக்கு விளக்கம் கூறிப் பரவலாக அச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். பண்பாடு, நீதி, நன்னடத்தை (Morals), கலை (art) ஆகியவற்றைக் குறிக்கின்றது என்று கூறியுள்ளார். மனிதன் சமூக உறுப்பினன் என்பது அவனால் பெறக்கூடிய தகுதிகளாலும் வலிமைகளாலும் புலப்படுகின்றது. மேலும் பண்பாடு சமூகத்தில் தொன்று தொட்டு வந்துள்ள ஒரு கொள்கை என்றும் அது தனி மனிதன் பெறக்கூடிய பரிசு என்றும் கூறியுள்ளார். மெலனோஸ்கி (Malinowski) என்பவர் பண்பாடு தொன்றுதொட்டு வரும் பழக்கத்தை இரு வகையில்

மேற்கொண்டுள்ளது. அவை சடப்பொருள் பண்பாடு (Material culture) என்றும் உயிர்ப் பொருள் பண்பாடு (Non Material Culture) என்றும் வேறுபடுத்தியுள்ளார். பொதுவாகப் பண்பாடு மனிதனுடைய முழுத் தோற்றத்தையும் வாழ்வியலையும் மேற் கொண்டு சடப் பொருள்கள் எவ்வண்ணம் உண்டாக்கப் பட்டுள்ளன என்பதை எடுத்துக்காட்டுகின்றது.

ஒருபுறம் சமூகப் பண்பாட்டை விரிவுறக் காண்கின்றோம். மற்றொரு புறத்தில் சடப்பொருளின் பண்பாட்டைப் புரிந்து கொள்ளுகின்றோம். இக் கருத்தைப் பிட்னி (Bidney) என்னும் அறிஞர் பண்பாடு வேளாண்மையின் விளைவு (Products of cultivation—Agro facts), தொழிலின் விளைவு (Products of Industry—Arti facts), சமூகக்குழுவின்முடிவு (Social Organization —Soci facts) மேலும் மொழி, சமயம், கலை (Menti facts) இவற்றை மேற்கொண்டுள்ளது என்று கூறியுள்ளார்.

மேற்கூறிய கொள்கைகள் பண்பாடு ஒரு அடிப்படைத் தத்துவத்தை மேற்கொண்டு நிலையாக இருந்து வந்ததை எடுத்துக் காட்டுகின்றது. ஆதலால் மனிதன் பண்பாட்டை ஓரளவிற்குப் பெயர்க்க இயலாது. மேற்கூறப்பட்ட கொள்கையைத் தவிர வேறு பல கொள்கைகளும் அறிஞர்களால் ஏற்கப்பட்டுள்ளன. மேரட் (Marett) என்னும் அறிஞர் பண்பாடு, மனிதன் மற்றவர்கட்கு எடுத்துப் புகட்டும் அறிவுரை என்று கூறியுள்ளார். ரெட்பீல்டு (Redfield) என்பவர் பண்பாடு பாரம்பரியமாக ஏற்பட்டுள்ள சமூக நிறுவனக் கொள்கை என இயம்பியுள்ளார். ரூத் பெனடிக்ட் (Ruth Benedict) என்னும் அறிஞர் பண்பாடு மனிதன் சமூகக் குழுவில் நிலைத்து இருப்பதற்கும் குழுவின் கொள்கைகளை மேற் கொண்டு இயங்குவதற்கும் துணைபுரிகின்றது. அவர் பண்பாட்டின் வகைகளைப் பற்றிக் கூறியுள்ளாரேயன்றி அவற்றின் உட்பொருள் களை ஆழ்ந்து ஆராயவில்லை. மெலனேஸ்கி, ராக்லிப் (Radcliff Brown) என்ற இருவரும் பண்பாடு மனிதத் தன்மையைக் குறிப்பது மட்டுமன்றி தனிமனிமனுக்குத் தேவையான உளப் பூக்கங்கள் (Instincts) உயிரியல் பூக்கங்கள் (Biological Instincts) ஆகியவற்றைக் கொடுத்தும் அவைகளுக்கு உரிமையுள்ளவனாகவும் ஆக்குகின்றது. மேலும் பண்பாடு பாரம்பரிய வழக்கங்களைப் பரவச் செய்து நிலைநாட்டுகின்றது.

மனிதன் மனித வாழ்க்கையைப் படித்துப் புரிந்து கொள்வது ஒன்று. அவன் வாழ்க்கையில் நடந்து கொள்வது மற்றொன்று. முதற் கூற்று அவனுடைய உண்மை வாழ்க்கையாகும். மற்றையது

அவனைப் பற்றித் தெரிந்து கொள்வதாகும். முதற் கூற்றைப் "பண்பாடு என்றும் பிந்தியதை பண்பாடு கட்டுதல்" என்றும் கூறுகின்றனர். பண்பாடு மனிதனின் உண்மையான நடத்தையை முற்றிலும் குறிப்பதில்லை. அது செய்கையைக் குறிக்கும் ஒரு கோட்பாடு. பொதுவாக மனிதனின் உண்மையான நடத்தை அவன் பண்பாட்டை முற்றிலும் எடுத்துக்காட்ட இயலாது.

பண்பாடு பல வகைகளிலும் விரிந்துள்ளபோதிலும் ஒரு ஒற்றுமையுள்ள முடிவு கொண்டு செயல்பட முடியாத நிலையிலுள்ளது. ஒவ்வொரு கொள்கையும் ஒரு ஆராய்ச்சிக் குழுவின் முடிவாகும். மேற்கூறிய எல்லா கொள்கைகளும் ஒரே நிலையில் தான் உள்ளது. ஒன்று மற்றொன்றை விஞ்சுவதாகத் தோன்றவில்லை.

## 1. பண்பாட்டின் கொள்கைகள் (Theories of Culture)

பண்டைக்கால முதல் பண்பாடு மானிட இயல் வல்லுநர்கள் அதன் தொடக்கம், வளர்ச்சி பல இடங்களில் பரவியுள்ளதைப் பற்றி அறிய முற்பட்டார்கள். பண்டைக்காலப் பண்பாட்டை விவரிப்பதற்கு (அ) எடுத்துக் காட்டுவதற்கு இரண்டு கொள்கைகள் மேற்கொள்ளப்பட்டன. 1. பரிணமக் கொள்கை (Evolutionary theory), 2. பண்பு பரப்பப்பட்ட கொள்கை (Diffusionalism). சார்லஸ் டார்வின், ஹேபர்ட் ஸ்பென்சர் என்னும் விஞ்ஞானிகள் உலகிலுள்ள மாறுதல்கள் அனைத்தும் பரிணமக் கொள்கையை மேற்கொண்டுள்ளது என்று கூறியுள்ளார்கள். பரிணமக் கொள்கையின் அடிப்படையில் டெய்லர், மார்க்கர் என்போர் மனிதச் சமுதாயத்தின் வளர்ச்சியையும் பண்பாட்டின் வளர்ச்சியையும் விளக்கியுள்ளார்கள். இயற்கையும், ஒப்புமையும் இவர்தம் கருத்தை எடுத்துக் காட்டிய போதிலும் மனிதனின் உள்ளமைப்பைப் பற்றி ஒரே ஒரு கருத்துத்தான் தோன்றியுள்ளது. அஃதாவது மனிதன் எங்கிருந்தாலும் உள்ளமைப்பில் வேறுபாடின்றி இருந்துள்ளான். இதை மனித உள்ள ஒற்றுமை (Psychic unity of mankind) என்று கூறப்படுகின்றது. எ-க ஒரு சிக்கலை பல மக்களுக்குக் கொடுப்போமாயின் அவர்கள் அனைவரும் ஒரே வகையில் முடிவை எண்ணிக் கண்டுபிடிக்க முயல்வர். எனினும் சூழ்நிலை (அ) சுற்றுப் புறம் ஒரே நிலையில் இல்லாமையால் பலவிதப் பண்பாடுகள் தோன்றியுள்ளன. எனவே பண்பாடுகள் பரிணமக் கொள்கையின் மூலம் சிறிய எளிய பண்பாட்டிலிருந்து பல பெரிய,

பரந்த பண்பாடுகள் எழுந்துள்ளன. இந் நோக்கம் உலகிலுள்ள பலதரப்பட்ட வெளிவந்துள்ள மனிதனின் உள ஒற்றுமையை வெளிக் காட்டுகின்றது (Culture Parallels).

ஒவ்வொரு பண்பாட்டு ஒற்றுமையும் தனித்தனியே அதன் சூழ்நிலைக் கேற்ப அமைந்துள்ளது. இரண்டு மூன்று பண்பாட்டு நிறுவனங்கள் ஒரே தன்மையில் இருந்தால் அதைச் சேர்க்கைப் பரிணமம் (Convergent Evolution) என்று கூறப்படுகின்றது. எ-க. பயிர்த் தொழில் உலகில் பல நாடுகளில் நடைபெற்று வருகின்றது. மேலும் இன்மைக்குறி (பூஜ்யம்-Zero) என்னும் எண் இந்தியரிடத்தும் பாபிலோனியரிடத்தும் மாயஸ் (Mayas) என்பவரிடத்தும் தனித்தனியே கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இதே போல் எழுத்து, காவியம் மற்றும் பல கண்டுபிடிப்புகள் பல இடங்களில் ஒரே சமயத்தில் தோன்றியுள்ளன. பரிணமக் கொள்கையாளர்களுள் முக்கியத்துவம் பெற்றுள்ளவர்கள் சார்லஸ் டார்வின் (Charles Darwin), ஹேபர்ட் ஸ்பென்ஸர் (H. Spencer), எல்மார்கன் (L. Morgan), டெய்லர் (E. B. Tylor), ஹேடன் (H. C. Haddon), லெவிபேர்ல் (Levy Bhurl) போன்றோர். இக் கொள்கையாளர்களால் மனித சமுதாயம் படிப்படியாக உயர்ந்து உன்னத நிலையை அடைந்துள்ளது.

மார்கன் என்னும் அறிஞர் பண்பாட்டை மூன்று பிரிவுகளாக எடுத்துக் காட்டியுள்ளார். 1. நாகரிகமற்ற (Savage) சமுதாயம். இச்சமுதாயம் மிகப் பழங்காலத்தைக் குறிப்பதுமன்றி மானிட வாழ்க்கை விலங்கின் வாழ்க்கைக்குச் சமமாக இருந்தது என்பதைக் குறிக்கின்றது. 2. மனிதன் தீயைப் பயன்படுத்தி ஓரளவிற்கு முன்னேற்றமடைந்துள்ளான் என்பதை எடுத்துக் காட்டுகின்றது. 3. மனிதன் வில், அம்பு முதலியவற்றைப் பயன்படுத்தித் தன் தேவைகளை நிறைவு செய்து கொண்டான் என்று வரலாறு கூறுகின்றது. மனிதனின் நாகரிகமற்ற வாழ்க்கை அவன் மண்கலம் செய்யும் அறிவு பெற்றவுடன் மறையலாயிற்று. ஆடு மாடுகளைப் பழக்குதல் செடிகொடிகளைப் பயிரிடுதல் முதலியவை இடைக்கால நாகரிக வாழ்க்கையைக் குறிப்பிடுகின்றன. மனிதன் இரும்பை உருக்கிப் பொருள்களைச் செய்யத் தொடங்கியது முதல் நாகரிகமற்ற வாழ்க்கை முடிவு பெற்றது எனக் கூறப்படுகின்றது. மார்க்கன் நாகரிகம் மேலை நாடுகளுக்கு ஒரு இன்றியமையாத நிபந்தனை என்று கூறியுள்ளார். எ-க குழுக்கள் மணம் (Promiscuity) என்பதிலிருந்து ஒரு பெண் பல ஆண்களை மணக்கலாம் என்றும் ஒரு ஆண் பல பெண்களை மணம் செய்து கொள்ளலாம் என்ற கருத்தும் ஒருவன் ஒருத்தியை மணந்து அவளுடனேயே

வாழ்க்கை நடத்த வேண்டும் என்ற கட்டாயச் சட்டம் ஏற்படுத்தப் பட்டதிலிருந்து பண்பாடு முன்னேற்ற மடைந்துள்ளது என்பதை நன்கு புலப்படுத்துகின்றது. மேலும் குடும்பம் என்பது தாய் வழிக் குடும்பம் தந்தைவழிக் குடும்பம் தாய்தந்தை வழிக் குடும்பம் அல்லது ஏகக் குடும்பம் போன்ற பல மாறுதல்களைப் பண் பாட்டின் வளர்ச்சியின் மூலம் அறிந்து கொள்ளுகின்றோம்.

தொடக்கப் பரிணாமக் கொள்கையாளர்கள் பண்பாட்டின் முன்னேற்றத்திற்கும் அதன் கொள்கைகளுக்கும் இடமளித்தனர். அக்கொள்கைகளை முற்றிலும் பயன்படுத்தியதால் அவை நாளடைவில் பயனற்றதாகப் போயிற்று. அவர்கள் பண்பாட்டுக் கோர்வை உள்ளதா என்று கருதியும் சரித்திரத்தின் வாயிலாக வந்துள்ளதா என்று கருதினார்களே தவிரச் சூழ்நிலையை முற்றிலும் விலக்கி விட்டனர். மேலும் அவர்கள் சாதி இனக் கொள்கையை முற்றிலும் சமுதாயத்தில் கடைப்பிடித்து பத்தொன்பதாம் நூற் றாண்டில் ஐரோப்பாவில் அது ஓரளவிற்குப் பயனளித்தது. அவர் தம் பண்டைக் காலப் பண்பாடு சாதி இனக் கொள்கையினால் புறக்கணிக்கப்பட்டது. இவர்க்குப் பின் வந்த எழுத்தாளர்கள் பரிணாமக் கொள்கையை மாற்றியமைத்து விட்டனர்.

சமுதாய நிறுவனங்கள் ஒரே நேர்கோட்டில் செல்வதில்லை. அவை கோழிமுட்டை அல்லது Oval Parabolic cur வில் முன்னேற்ற மடைகின்றது. ஒரு நிறுவனம் ஒரு வடிவத்தைக் கொண்டு தொடங்கி அதற்கு மாறாகப் பெருகி மீண்டும் அது தன் புழைய வடிவத்திற்குக் கொண்டுவரப்பட்டு மேன்மையடை கின்றது. எ-க. பண்டைக் காலச் சொத்து. அதன் பிறகு தனிச் சொத்து என்னும் நிறுவனம் தோன்றியது. கம்யூனிஸ்டுக் கொள்கை பொதுச் சொத்து என்னும் நோக்கத்தை அரசாங்கம் உடைமையாக்கியுள்ளது.

பண்பு பரவுதல் (diffusionalism) பரிணாமக் கொள்கையாளர் பண்பாடு தனிமையில்தான் முன்னேற்றமடைந்துள்ளார். மேலும் பலதரப்பட்ட பண்பாடுகள் ஒரே சமயத்தில் பல இடங்களில் தோன்றியுள்ளது என்றும் கருதப் படுகின்றது. பண்பின் நேர்முக வளர்ச்சி நாகரிகமற்ற சமுதாயத்திலிருந்து நாகரிகம் என்ற புதுச் சமுதாயத்தை அமைத்துள்ளது. உயிரியல்கள் (Mendals Law) விதியைக் குறித்து டார்வின், ஸ்பென்ஸர் முதலியோரின் பரிணாமக் கொள்கைகளிலிருந்து மாறுபட்டுள்ளது. இரண்டு மானிடக் குழுக்கள் அருகில் இருக்கக் கூடும். எனினும் அவர்களிடத்துப் போக்குவரத்து, சொல், பழக்க வழக்கம், கடவுட் கொள்கை, பண்ட மாற்று முதலியவை அக்குழுக்களைச் செயல்புரியச் செய்கின்றன.

பண்பாட்டின் உட்தொடர்பு செயற்கைத் தொடர்பை மேற் கொண்டுள்ளது. பண்பு மாற்றம், பண்பு வளர்ச்சி இவை பல இடங்களில் ஒரே சமயத்தில் தோன்றியதாக ஸ்மித் (Sehmidt), ஆங்கர்மென் (Ankerman), கிரேப்னர் (Graebner) என்பவர்கள் 1910 ஆம் ஆண்டில் விளக்கியுள்ளனர். பண்புகள் பற்பல இடங் களில் தோன்றி நாளடைவில் உலகிலுள்ள எல்லாப் பாகங்களிலும் பரவியதாகக் கூறியுள்ளனர். பண்பு இவ்வண்ணம் பரவியுள்ளமை பண்புச் சுழல் (Culture Circle) எனப்படுகிறது. இக்கொள் கையை மேற்கொண்டுள்ளவர்கள் சடப் பொருள் பண்பாட்டை மட்டுமே குறிக்கின்றனரே யன்றி சமூக நிறுவனக் கொள்கைகளைக் குறிப்பிடுவதில்லை. சடப் பொருள் பண்பாட்டுக் கொள்கை சரித்திரப் பண்பாட்டுக் கொள்கை எனக் கருதப்படுகின்றது.

பிரான்ஸ் போஸ் (Franz Bose) என்பவர் பண்புப் பரவுதலைப் பல பிரிவுகளாகப் பிரித்துப் படித்துள்ளார். முதலில் சுற்றுப்புற நிலைமையை விளக்க வேண்டும். விளக்க வேண்டிய பொருள் பல பொருள்களிலிருந்து தனிப் படுத்த வேண்டும். பண்பாட்டின் தன்மை சடப் பொருள் அற்றதாக இருந்தால் அது பரவுதல் மிகவும் கடினம். ஏனெனில் மலைகள், கடல், பாலை இவை பண் பாடு நெடுந்தொலைவு பரவுவதற்குத் தடையாக இருக்கின்றன. பண்பாட்டின் பரப்பைச் செய்முறை, கைத்திறமை முதலிய வற்றைக் கொண்டு விளக்க இயலும். இங்கிலாந்திலுள்ள பரிணாமக் கொள்கையாளர்கள் நாகரிகம் ஒரு செடியைப் போன்றது. எவ்வாறெனில் ஒருதரப்பட்ட செடிகள் பல இடங்களில் தனித் தனியாக வளர்க்கப்பட இயலும். எலியட்ஸ்மித் (Elliot Smith), ஜென்னி (Jenny) என்போர் பண்பு வெகுவிரைவில் உலகில் பரவுவதுமன்றி மிக எளிதில் மறைந்தும் விடுகின்றது என்று கூறி யுள்ளனர். எ-க. எகிப்தின் பண்பாட்டைக் கூறலாம். ஹட்டன் (Hutton) என்பவர் பண்பு பல இடங்களில் தனித்தனியே பரவி யுள்ளதை எரியுண்டாக்கும் ஆசியாவிலும், பிரான்சிலும் ஒரே சமயத்தில் தோன்றியதாகக் கூறியுள்ளார்.

பண்பாட்டின் வளர்ச்சி, ஒப்புதல் ஆகியவை பரிணாமக் கொள்கை, பண்புப் பரவுதல் போன்ற கொள்கைகளை மேற் கொண்டு வளர்ச்சி யடைந்துள்ளது. பண்பாடு பரவுதலில் மனித வாழ்க்கை முழுமையாக எடுத்துக் கொள்ளப்பட்டு மாறினால் அதைப் பண்பாடு முழுமைப் படுதல் என்று கூறுவர். இரண்டு மூன்று பண்பாட்டுத் தன்மைகள் ஒரு குழுவில் ஏற்றுக் கொள்ளப் பட்டால் அது மாறுபட்ட பண்பாடு என்று கூறப்படுகின்றது. ஒரு வகையான வாழ்க்கை மற்றொரு வாழ்க்கையின் அடிப்படையில் ஏற்கப்பட்டால் அதைக் கலப்படப் பண்பாடு என்று கூறலாம்.

# 2. நாகரிகம் — தோற்றம்
# (Civilization)

நாகரிகத்தை மேற்கொண்ட சமூகம் பழங்குடி நடுத்தர சமூகங்களைவிட மேலோங்கியுள்ளது. அத்தகைய சமுதாயம் சடப்பொருள் (Meterial) முன்னேற்றத்தையும் நுட்பத் தொழில் வளர்ச்சியை (Technological) யும் எடுத்துக் காட்டுகின்றது. செய்முறை (Applied Science) விஞ்ஞானம் முன்னேற்றமடைந்த சமூகங்களில் முக்கியத்துவம் பெற்றுள்ளது. ஆதலால் நாகரிகத்தை மேற்கொண்டுள்ள சமூகம் எவ்வகையிலும் குறை இன்றி முன்னேற்றத்தைக் கொண்டுள்ளது. இத்தகைய சமூகம் பண்பாட்டிற்கும் இடம் கொடுக்கின்றது. சடப் பொருளைப் பயன்படுத்தி அதன் பயனைப் பெற்று மனிதன் வாழ்வதே நாகரிகம் என்று கூறப்படுகின்றது. நாகரிகம் மனிதக்குழு மேன்மை யடைந்துள்ளதை எடுத்துக் காட்டுகின்றது. தற்காலத்தில் நாகரிகம் பரந்த அளவில் முன்னேற்றம் அடைந்துள்ளது. ஆனால் ஆன்மநிலை (Spirituality) முன்னேற்ற மடைய வில்லை. நாகரிகம் என்பது நன்னடத்தை பொருள் வளம் ஆன்ம முன்னேற்றம் முதலியவற்றை ஒருங்கே கொண்டு இருப்பதாகக் கருதப்படுகின்றது. நாகரிகம் நான்கு பிரிவுகளைக் (தன்மைகளை) கொண்டுள்ளது. 1. தனி மனிதனின் முக்கியத்துவம். 2. சமூகம், அரசியல் இவற்றின் முக்கியத்துவம். 3. ஆன்ம சமய நிறுவனங்களின் முன்னேற்றம். 4. முழு மனிதத் தன்மையின் முன்னேற்றம். பொதுவாக ஆன்ம முன்னேற்றத்தை சமூக முன்னேற்ற மென்றும் பொருள் முன்னேற்றத்தை நாகரிகம் என்றும் கூறுகின்றனர். மக்காயவர் (Maciver) என்பவர் மனிதன் பற்பல கருவிகளைப் பயன்படுத்தி வாழ்க்கையில் உயர்ந்துள்ளான் என்று கூறியுள்ளார். ஒரு சமூகத்தின் நாகரிக முற்போக்கை அச் சமூகத்தின் தனித் திறனைக் கொண்டுதான் உணர முடிகிறது. நாகரிகத்தை மேற்கொண்டுள்ள சமூகங்கள் பொருளாதாரத்தில் அமைந்துள்ளன. அஃதாவது நாகரிகமுற்று மக்கள் பொருளாதாரக் கஷ்டங்களையும் காண்பதில்லை. சாதாரணமாக மேன்மையடைந்த வாழ்க்கையைக் காண்கின்றோம். முன்னேற்ற மடைந்த சங்கங்கள் பண்பாட்டின் அறிகுறியாக விளங்குகின்றன.

நாகரிகம் பண்பாடு இவை இரண்டும் இந்திய சமுதாயத்திற்கு இன்றியமையாதது. எவ்வாறு எனில் சரித்திர காலத்திலிருந்து பண்பாடு ஒற்றுமையை மேற்கொண்டு விளங்கியுள்ளது. ஏனெனில் சமயத் தத்துவம் இந்திய சமுதாய நிறுவனங்கட்கு அடிப்படையாக இருந்துள்ளது. இந்திய சமுதாயப் பண்பாடு பெரும்பாலும் தத்துவப் பண்பாட்டை மேற்கொண்டுள்ளது.

எ-க- சாதி, சாதி நிறுவனம் சமய நிறுவனத்தின் அடிப்படையில் உருவாக்கியுள்ளார். மேலும் சமூக வாழ்க்கையில் கல்விமணம் சமுதாயக் கொள்கைகள் அழுத்தமாக வேரூன்றியுள்ளதைக் காண்கின்றோம். ஒருவன் தான் செய்ய வேண்டிய கடமைகளைக் கருமம் என்று கூறுகின்றனர். இக்கொள்கை இந்தியப் பண்பாட்டை தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது. எனினும் இந்தியப் பண்பாடு மேலை நாட்டு, நாகரிகம் பண்பாடு முதலியவற்றுக்கு இடையே சிக்கியுள்ளது. மேலை நாட்டு விஞ்ஞானம், நுட்பத் தொழில், வாணிகம் முதலியவை நம் நாட்டில் உள் புகுத்தப்பட்டுள்ளது. பொருள் வளப் பண்பாடு மாற்றக்கூடிய (அ) பரவக்கூடிய சக்தியை மேற்கொண்டுள்ளது. மேலும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாகவும் இருக்கின்றது. இந்தியா ஓரளவிற்கு மேலை நாட்டுப் பண்பாட்டை ஏற்றபோதிலும் தத்துவம், கலை, சமயம் முதலியவற்றைத் தவிர்க்க முடிவதில்லை. இந்தியாவில் சம உரிமைக் கொள்கை (Socialism) பொதுவுடைமைக் கொள்கை (Communism) புகுத்தப்பட்டுள்ளன. நம் நாட்டின் அரசியல் நுட்பம் மேலை நாட்டு நுட்பங்களை மேற் கொண்டுள்ளது. சிற்சில துறைகளில் பொருளாதாரத் துறை சமுதாய முன்னேற்றம் இவை நம் நாட்டின் மாற்றத்தைக் குறிப்பிடுகின்றன. எனினும் இந்தியாவிற்கு ஒரு தனிப் பண்பாடு இருந்தது என்பதை எவராலும் மறுக்க முடியாது. சமூக முன்னேற்றத்தை ஆய்ந்து ஆராய்ந்து படிப்பதுதான் சமூக இயலின் பாடம். அத்தகைய படிப்பை மேற்கொண்ட இந்தியாவில் வாய்ப்புக்கள் உள்ளன. எ-க. கல்வி மாற்றம், தொழில் மாற்றம் என்பன. இத் துறைகளில் ஆராய்ச்சி செய்தால் பண்பாடு என்பது பண்டைக்கால முதல் தற்காலம் வரை எப்படி மாறியுள்ளது என்பதை எடுத்துக் காட்டுகின்றது.

## 3. சமூக மாற்றம்
## (Social Change)

சமூக மாற்றம் என்பது நுட்பமுறை மாற்றம் என்று சமுதாயத்தில் கூறப்படுகிறது. எ-க வானொலி, ஊர்திகள், போக்கு வரத்துச் சாதனங்கள் முதலியவை மனிதனின் வாழ்க்கையைப் பல துறைகளில் மாற்றியுள்ளன. மேலும் சமூக மாற்றங்களை அளக்கவும் எடுத்துக்காட்டவும் இயலுவதாயிற்று. ஆதலால் அறிவியலறிஞு கள் சமூக மாற்றத்தைச் சமூக இயலின் மூலம் அறிய முற்பட் டுள்ளனர். தற்காலச் சமூகம் இயந்திர காலம் (Machine Age). புதுமைக் கண்டு பிடிப்பு உற்பத்திப் பெருக்கம் மேம்பட்ட காலம் என்று கூறப்படுகின்றது. தற்கால நகரங்கள் மனிதர்தம் தேவை

களைப் பொருத்தும் அவனது அறிவுக் கூர்மையை வெளிப் படுத்தியும் இயங்குகின்றன. இயந்திரக் காலமாகிய தற்காலம் முதலாளித்துவத்தைப் பெருக்குவதில்லை. பண்டைக்கால எண்ணங் கள் பழக்க வழக்கங்கள் மனிதரிடையே இருந்தபோதிலும் அவை ஓரளவிற்குத்தான் ஏற்கப்படுகின்றன. எ-க பெண்கள் தொழிற் கூடங்கட்குச் சென்று தொழிற் புரிதல், குடும்பம் என்னும் நிறுவனம் மாற்றியமைக்கப்பட்ட நிலை ஆகியவை சமூக மாற்றத்தை எடுத்துக் காட்டுகின்றன. பற்பல திருத்தங்கள் தற்காலத்திற்கு இன்றி யமையாதது. மனிதனின் ஏழ்மைத் தரம் நீங்கி இந் நூற்றுண்டில் மேன்மையடைந்துள்ளான். பண்டைக்கால எண்ணங்கள் மறைந்து மக்களிடையே உயர்வைக் காண்கின்றோம். பற்பல சங்கங்கள் தோன்றி பொருள், வளம், சக்தி இவை முற்போக் கடைந்து நவநாகரிகம் (Fashion) வெளிப்பட்டு குடியரசு நோக்கங் களைப் பரவச் செய்துள்ளன. ஒவ்வொரு நுட்பத் தொழில் முன்னேற்றமும் வாழ்க்கைத் தரத்தை மாற்றி அமைக்க உதவு கின்றது. எ-க வேளாண்மை, ஆடுமாடு வளர்த்தல், அவற்றைப் பெருக்குதல், உரத்தைப் பயன்படுத்துதல் ஆகியவை விவசாயம் தன்மையிலும் அளவிலும் முன்னேற்றமடைந்துள்ளதை எடுத்துக் காட்டுகின்றன. வேளாண்மை, ஆலைத் தொழில் முதலியவை மக்களைச் சிற்றூர்களிலிருந்து நகரத்திற்கும் நகரத்திலிருந்து சிற்றூர் களுக்கு குடியேறவும் காரணமாயிருக்கின்றன. இவ்வகையான மாறுதல்கள் பல சிக்கல்களை நீக்குகின்றன. போக்குவரத்து முன்னேற்றம், விண் விமானம், திரைப்படக் காட்சி, தொலைக் காட்சி (Television) முதலியவை சமுதாயத்தின் மாறுதல்களை பற்பல வகையில் எடுத்துக் காட்டுகின்றன. வானொலி மனித னுக்கு ஓய்வு நேரம், அறிவு, பயன் முதலியவற்றைக் கொடுக் கின்றது. வானொலி செய்திகளைப் பரப்புவதற்கும் பயன்படுத்தப் படுகின்றது. மாற்றங்கள் ஏற்பட்டுள்ள சமூகத்தில் ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை, ஒன்றை ஒன்று ஆதிக்கம் செலுத்துதல் முதலியவற்றை அறிவதற் குத் துணைபுரிகிறது.

தற்காலப் பொருளாதாரம் பல குழுக்களை உண்டாக்கி ஒரு குழு மற்றொரு குழுவை முறியடிக்க முயல்கின்றது. இக் குழுக்கள் பல கொள்கைகளைப் பழக்கத்தில் கொண்டுவந்து சமூக மாறுதல் களை வெளிப்படுத்துகின்றன. மனிதனுடைய மாற்றத்தைத் தெரிந்துகொள்ள இரண்டு கோட்பாடுகள் உள்ளன. 1. சுற்றுப் புறம் அல்லது சூழ்நிலை, பொருள் மாற்றம், இவைகளைக் கொண்டு மனிதன் எப்படி மாறியுள்ளான் என்பது ஒன்று. 2. மனிதனின் நடத்தை, ஊக்கம், தட்ப வெப்ப நிலை இவற்

றைப் பொருத்துள்ளது. பத்தொன்பதாம் நூற்ருண்டின் தொழிற் புரட்சி சமூகத்தைப் பல வகைகளில் பாதித்துள்ளது. இவ்வியக்கம் சடப் பொருள் கொள்கையை மேற்கொண்டு மார்க்ஸ் (Marx) என்பவரால் 'பொருள் உற்பத்தியே மனிதனுக்கு அவசியம்' என்ற குறிக்கோள் விளக்கப்படுகிறது. மார்க்ஸ் (Marx) என்பவர் சமுதாயத்தின் உண்மையான அடிப்படை பொருளாதாரம் என்று கூறியுள்ளார். பண்பாடு, அறிவுக் கூர்மை, ஆன்ம வாழ்க்கை, சமூக நிறுவனங்கள், இவற்றின் அமைப்பு பொருளாதார நிலையைப் பொருத்துள்ளது. சமூகப் புரட்சி மேலோங்கிய பொருளாதார வகுப்பைச் சிதைத்து தாழ்த்தப்பட்ட பொருளாதார வகுப்பை உயர்த்த முயல்கிறது. எ-க பண்டைக்கால அடிமைத் தனம் ஒழிதல், ஜமீன்தார் (அ) முதலாளித்துவம் சிதைதல் முதலியன. ஹெகல் (Hegal) என்னும் அறிஞர் சமூக மாறுதல்கள் பல தன்மைகளைக் கொண்டு சமுதாயத்தில் புகுத்தப்பட்டுள்ளன என்று கூறியுள்ளார். அறிவுக் கூர்மை, ஆன்மீக வாழ்க்கை ஆகியவை சமூகத்தின் இன்றியமையாத தேவைகளை நிறைவு செய்கின்றன. சமூகப் பண்பாடு மனிதனின் முழுமையை எடுத்துக்காட்டுகின்றது. இவ்வண்ணம் மனித வகுப்பு முறியடிக்கப்பட்டதையும் மாற்றியமைக்கப்பட்டதையும் நாம் வரலாற்றில் காண்கின்ரேம்.

## 4. சமூக முன்னேற்றம்

## (Social Progress)

சமூக முன்னேற்றம் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1. நேர் பாதை (Unilinear). 2. கடிகாரத்தின் ஊசல் போல் (Pendulam). 3. பரிணுமம் (Evolutionary). முதற் கொள்கை சமூக மாறுதல்கள் எப்போதும் நேர்பாதையில் சுற்றுப்புறம், விதி, கடவுள் கட்டுப்பாடு இவற்றை மேற்கொண்டு ஒரு முடிவை அடைகின்றது என்று கருதப் படுகின்றது. இக் கொள்கை சமயச் சார்புடையது. சமூகக் கொள்கைகளை மேற்கொள்ளாததனுல் இக் கொள்கை ஐயத்தை ஏற்படுத்துகின்றது. இரண்டாவது கொள்கை கடிகாரத்தின் ஊசல் இயங்குவது போல சமூகம் மாறி மாறி இயங்குகின்றது. பண்டைக்காலப் பழக்க வழக்கங்கள் திரும்பத் திரும்ப மனிதனை மாற்றியமைப்பதைக் காண்கின்ரேம். இதற்கு ஒப்பாக இரவும் பகலும் காலங்கள் மாறி வருவதும் செடி, கொடி உற்பத்தி பலன் அழிவு முதலியவற்றை எடுத்துக் காட்டுவது போல் மனித சமுதாயமும் மாறி இருப்பதைக் காண்கின்ரேம். பரிணுமம் சமூகத்தின் பலதரப்பட்ட மாறுதல்களை

உயிரினத்தின் வளர்ச்சியைப் போல் முன்னேற்றமடையச் செய்துள்ளது.

சமூகம் முன்னேற்ற மடைந்துள்ளதை ஹாபுகவுஸ் (Hob House) என்னும் அறிஞர் நான்கு நியதிகளைக் கொண்டு விளக்கியுள்ளார். ஒப்புமை அளவு (Scale), திறன் (Efficiency), உரிமை (Freedom), ஒன்றை ஒன்று சார்தல் (Mutuality). இந்நியதிகள் இருந்தபோதிலும் சமூகம் முன்னேறுவது ஒரு பெரிய சிக்கலாக இருந்துள்ளது. ஏனெனில் பண்டை காலத்தில் அடிமைத்தனம், சுதந்திரம் இவை சமுதாயத்தில் புகுத்தப் படவில்லை. நாளடைவில் இவை மனிதனுல் தன் நன்மைக்காகப் பயன்படுத்தப்பட்டன. பொதுவாகச் சமுதாயம் இன்பம், துன்பம், தேவைகள் முதலியவற்றை மேற்கொண்டு முன்னேற்ற மடைந்துள்ளது. பிளேட்டோ, அரிஸ்டாடில் என்னும் தத்துவ ஞானிகளின் ஆன்மக் கொள்கை நன்னடத்தை இவைகளன்றி நலம் ஒரே நிலையில் வளராது என்று ஆணித்தரமாகக் கூறியுள்ளார்கள். எந்த ஒரு சமூகத்தில் கலை, விஞ்ஞானம், நட்பு, உண்மை, நேர்மை, அறிவுக் கூர்மை, அன்பு போன்றவை இருக்கின்றனவோ அச் சமுதாயமே முன்னேற்ற மடையக் கூடும். மனிதன் தன் தனி நோக்கங்களை மட்டுமே வெளியிட்டால் அவை மனித முன்னேற்றத்திற்கு ஒத்து வாரா. எல்லாக் காலங்களிலும் ஏற்கக் கூடிய மனிதனின் பொதுவான அடிப்படைத் தத்துவங்களை ஏற்ருல்தான் சமுதாய முன்னேற்ற மடையக் கூடும். அஃதாவது ஒவ்வொரு தனி மனிதனும் அவனுடைய எண்ணம், செயல் மற்ற நன்மைகளும் எல்லா மக்களுக்கும் நன்மை பயக்க வேண்டும் என்பதை எண்ணினுல் சமுதாயம் முன்னேற்றமடைவதில் ஐயம் இல்லை.

## 5. நாகரிகத்தின் பயனுன நயம்—மேன்மைக் குறைவு

### பண்பாட்டுத்தேக்கம் (Cultural lag )

நாகரிகத்தின் பயன் சிற்சில சமூகக் குழுக்களில் முழுமையாகக் காணப்படுவதில்லை. ஆதலால் சமூக இயல் அறிந்து கொள்ள முன் வந்துள்ளது. நாகரிகத்தின் மேன்மைக் குறைவு (Culture lag) என்னும் சொல் பல சமூக நிலைமைகளுக்கும் உரியதாயுள்ளது. அச் சொல் புதுப்பொருள் கண்டு பிடிப்பு, புதை பொருள் ஆராய்ச்சி இவைகளை மேற்கொண்டுள்ள காலத்தில் அதிகமாய் பயன்படுகிறது. பண்பாடு, நுட்பத் தொழில் வளர்ச்சி இவற்றின் வேற்றுமைகளை அறிந்து கொண்டால் நாகரிகத்தின்

பயனுன நயம், மேன்மை குறைவுறுதலைக் காணலாம். ஆக்பர் (Augburn) என்னும் சமூக அறிஞர் இச் சொல்லை மிகவும் தெளிவாகவும் விரிவாகவும் விளக்கியுள்ளார். சடப் பொருள் மாறுதல் மனிதனுக்கு பல கோணங்களில் சிக்கலை விளைவிக்கின்றது. மனிதன் மாற்றத்தை ஓரளவிற்கு ஏற்றுக் கொண்ட போதிலும் முழுமையாக ஏற்றுக் கொள்ள முடியாதவனுயுள்ளான். எ-க புதிய கண்டுபிடிப்பு, தொழிற்சாலை வளர்ச்சி இவை பெருமளவிற்கு உயர்ந்திருந்த போதிலும் அவற்றின் நன்மையை மனிதனுல் பயன்படுத்த முடியவில்லை. "லாக் (lag)" என்னும் சொல்லுக்குப் பின்தங்குதல் என்று பொருள். இரண்டு சமூகங்கள் ஒன்றுபட்டு வளரும்போது, ஒன்று பின்தங்கினுல் அதைக் (Culture lag) நாகரிகத்தின் பயனுன நயம்-மேன்மைக் குறைவு என்று கூறுவர். இரண்டு தொழிற்சாலைகள் ஒரே சமயத்தில் தொடங்கப் பெற்று புதுமை இயந்திரங்களை ஏற்று வளர்ச்சி பெற மற்றையது இவற்றை ஏற்காமல் இருந்தால் முற்கூறிய தொழிற்சாலை மேலோங்கி நிற்க மற்றையது முன்னேற்றம் குறைந்து அழியவும் கூடும்.

சமூகங்களில் பின்தங்குதல் என்பது அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கும் அவற்றின் உபயோகத்திற்கும் உள்ள மாறுபாடாகும். மனித சமுதாயம் ஒருவகைப் பண்பாட்டை ஏற்று முன்னேற முயல்கின்றது. ஆனுல், அறிவியலின் விளைவு பல வியத்தகு கண்டுபிடிப்புகளை (அற்புதங்களை) தோற்றுவித்து மனிதனை வியக்கச் செய்கிறது. தற்காலச் சமூக நிறுவனங்கள் தனிப்பட்ட சிறப்புகளை எடுத்து விளக்கி அவை ஒன்ருேடொன்று இயங்கி அவை எவ்வண்ணம் மேன்மையடைய வேண்டும் என்பதை எடுத்துக் காட்டுகின்றது. நுட்பத் தொழில் வளர்ச்சி எல்லாத் தொழிற் சங்கங்களாலும் ஏற்றுக் கொள்ளப்படாவிடில் முன்தங்குதல் என்னும் நிலைமை ஏற்படுகின்றது. எ-க காடுகளை அழித்தல் வெகுவிரைவில் செயல்படுத்த முடியும். ஆனுல் காடுகளை வளர்த்தல் அவ்வண்ணம் செயல்படுத்த இயலாது.

பல புதிய கருவிகள் பல துறைகளிலும் தோன்றிய போதிலும் சமூகம் ஓரளவிற்கு பின்தங்கியுள்ளது. ஏனெனில் தொன்று தொட்டு வந்த பழக்க வழக்கங்கள் புதியன புகுதலைத் தடுக்கின்றன. எ-க இராணுவத் துறையில் அறிவியலின் மூலம் கண்டுபிடிக்கப்பட்ட பல நுட்பக் கருவிகளைப் பயன்படுத்த சில நாடுகள் தயங்குகின்றன. பொருளாதாரத்திலுள்ள அக்கரை முதலாளிகளை முற்றிலும் பழைய வழிகளிலிருந்து மாற்ற இயலவில்லை. எ-க ஒரு இயந்திரம் செய்யக் கூடிய வேலையை ஒரு தனி மனிதன் செய்யத் தொடங்கினுல் அக்குழு முன்னேற

முடியாது. நுட்பத் திறன் பண்பாடு, தலைவர்கள், குழுக்கள் இவற்றின் கொள்கைகளை மேற்கொண்டு சமுதாயம் உருவாகி யுள்ளது. ஒருவகைப் பண்பாடுள்ள சமுதாயத்தில் அதற்கு மாறு பட்ட பண்பாட்டைப் புகுத்துவது மிகக் கடினமான தொன்றாகும். அதைச் செய்யத் தொடங்கினால் இரு பண்பாட்டுக்கும் இடையே பிளவு ஏற்படும்.

பண்பாடு சமூக மாற்றத்திற்கு ஆற்றல் வாய்ந்த (Dynamic) கருவியாக உள்ளது. பொதுவாக மக்கட் கொள்கைக்கும் நிறுவனங்கட்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஆதலால் பண் பாடு மாற்றம் சமூக மாற்றத்தை ஏற்படுத்தக் கூடும். எ-க பண்டைக்கால சமயக் கொள்கைகள், எல்லாச் செயல்களும் கடவுளால் நடைபெற்றது என்ற நம்பிக்கை மாறி தற்பொழுது கடவுளே இல்லை என்ற கொள்கையும் சிலரால் மேற்கொள்ளப் பட்டுள்ளது. மற்றும் முதலாளித்துவம் மறைந்து தொழிலாளித் துவம் ஓங்கி வளர்ந்து வருகிறது.

பண்பாடு மாற்றம் மூன்று கொள்கைகளைப் பரப்பியுள்ளது. 1. சுற்றிச் சுழன்று மாறிவரும் கொள்கை (Cyclical theory). ஆர்னால்டு டாயன்பி (Arnold Toyenby) என்பவரால் நாகரிகம் தொடங்கியதுமுதல் காலத்திற்கேற்றவாறு மாறி மாறி வந்துள்ளதை எடுத்துக் காட்டியுள்ளார். எ-க மக்களின் உடை, உணவு முதலிய வற்றின் மாற்றத்தில் காண முடிகிறது. 2. பண்பாடு என்பது அதன் நடைமுறையை எடுத்துக் காட்டுகின்றது. அஃதாவது மனிதனின் உட்(ள்)தன்மையையும் புறத் தோற்றத்தையும் விளக்கிக் காட்டுகின்றது. இதை கலை வளர்ச்சியின் மூலம் அறிந்து கொள்ளுகின்றோம். எ-க பண்டைக்காலச் சடங்கு முறைகள் விடுபட்டு, அம்முறைகளின் அவசியம் குறைக்கப்பட்டு பண்பாடு, நாகரிகம் முதலியவை மாற்றமடைந்துள்ளன. 3. பண் பாடு எம்முறையில் செல்கிறது என்பதைப் புரிந்து கொண்டால் சமூக மாற்றம் எளிதாகி விடும். ஆனால், பண்பாட்டின் தன்மைகள் எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய நிலையில் இல்லை. எ-க தேசீய ஒருமைப்பாட்டு இயக்கம், பொதுவுடைமை இயக்கம் இவை ஒரு குறித்த காலத்தைக் குறிப்பிட்டு அதன் மாறுதல்களை எடுத்துக் காட்டுகின்றது. பொதுவாகக் காலத்தின் மாற்றத்தை எடுத்துக் காட்ட முடியுமே தவிர அது எவ்வண்ணம் மாறியது என்பதை விளக்குவது அரிய தொன்றாகும். பொதுவாகப் பண்பாடு பின் தங்குதல் என்பது சமுதாயத்தில் உள்ள பல இன்னல்களாலும் சூழ்நிலையாலும் ஏற்பட்டுள்ளது.

# மேற்கோள் நூற்பட்டியல்

(Bibliography)


1. Human Society — *Kingsley Davis*
2. Society — *R. M. Maciver and Charles H. Page*
3. Sociology — *T. B. Bottomore*
4. Sociology — *Morris Ginsberg*
5. Social structure — *G. P. George Peter Murdock*
6. Fundamentals of Sociology — *P. Gisbert*
7. The study of Sociology — *Herbert Spencer*
8. Sociology — *Ogburn and Nimcoff*
9. Sociology — *R. T. Lapiere*
10. Society, Culture and Personality — *P. Sorokin*
11. Social Anthropology — *Ralph Piddington*
12. Social Anthropology — *Mojumdar Madan*
13. Races and Culture of India — *D. N. Majumdar*
14. Anthroprography — *P. S. Negi*
15. Social organisation — *R. H. Lowie*
16. Caste in India — *J. H. Hutton*
17. The Peoples of India — *R. H. Risley*
18. World Population — *A. M. Car-Saunders*
19. Empty hand and Hungry people — *M. N. Srinivas*
20. A critic of Political Economy — *Karl Marx*
21. India's Roots of Democracy—*Karl. C. Taylor and others.*
22. Principles of Sociology — *R. N. Sarma*
23. UNTOUCHABILITY — *M. K. Gandhi*
24. சமூக இயலின் அடிப்படைக் கோட்பாடுகள் — தமிழாக்கம் ஜெ. நாராயணன்.
25. What is Sociology ? —*Alex Inkeless*
26. Marriage and family —*Kapadia*
27. Social Psychology—*Kimbali Young*

## கலைச்சொற்கள்

(ஆங்கிலம் — தமிழ்)

### A

Ability — திறன்
Acquired status — இயற்கையாக அமைந்த தகுதி
Acculturation — பண்படுதல்
Accommodation — இடங்கொடுத்தல், விட்டுக் கொடுத்தல்
Adoption — மகவேற்பு
Adolescence — குமரப் பருவம்
Adultry — கூடா ஒழுக்கம், பிறன்மனை நயத்தல்
Agent — செயலி, முகவர்
Agression — எதிர்ப் போராட்டம்
Anarchy — ஒழுங்கீனம்
Analyse — பிரித்தல்
Aptitude — ஆர்வம்
Arithmetic — கணிப்பியல், எண்ணளவை
Arts — கலைகள்
Ascribed status — செயற்கையால் நல்கப்பட்ட தகுதி
Assimilation — தனதாகக் கொள்ளுதல்
Association — சங்கம், மன்றம்
Astronomy — விண்ணியல்
Atom — அணு
Attitude — மனப்பான்மை, உருவமைதி
Audience — கேட்போர் கூட்டம், ரசிகர்
Authoritative — அதிகாரம் பெற்ற, தகுதியுடைய
Autonomous — தன்னாட்சி உரிமையுடைய

## B

Backward class — பிற்பட்ட வகுப்பு
Bacteria — கிருமி
Biological — உயிரியலைப் பற்றிய
Bond — பிணைப்பு, ஒப்பந்தம்
Brain — மூளை
Brazier — கன்னான்

## C

Capitalist — முதலாளி
Caste — சாதி, இனம்
Casual — தற்செயலாக
Catastrophe — எதிர்பாராத நிகழ்ச்சி
Ceremony — சடங்கு
Cells — உயிரணுக்கள்
Censorship — தணிக்கை செய்தல்
Clan — பொதுக்குழு
Class — தொகுப்பு
Classic — பண்டைக் கிரேக்க, உரோம இலக்கியச் சான்று
Classify — வகைப்படுத்து
Classification of Races — இனப் பிரிவுகள்
Collective — கூட்டமாக
Colonial — குடியேற்ற நாட்டைச் சார்ந்த
Communism — சமுதாயப் பொதுவுடைமைக் கொள்கை
Community — சமுதாயம், பொதுநல உரிமைக் குழுமம்
Community Development — சமுதாய வளர்ச்சி
Complex — கூட்டுச் சிக்கல்
Competition — போட்டி
Conflict — முரண்பாடு
Consciousness — உள்ளுணர்வு நிலை புலனுணர்வு
Consumption — துய்த்தல்
Control — வரம்பு
Convention — மரபு வழக்கம் பரம்பரை வழக்கம்

Contagious Magic — தொத்துமயம்
Corporal — மெய்யில் புண்ணேற் படுத்துதல்
Corporation — பலரடங்கிய இணைக்கழகம்
Craze — ஆர்வநெறி, மனமாருட்டம்
Criterion — ஒப்பளவு முதல்
Culture — பண்பாடு
Culture change — பண்பாட்டு மாற்றம்
Cultural Heritage — பண்பாட்டு வரண்முறை
Cultural Anthropology — பண்பாட்டு மானிட இயல்
Cultural lag — பண்பாட்டுத் தேக்கம்
Customary laws — பழக்க வழக்க விதிகள்

D

Democracy — மக்களாட்சி, குடியாட்சி
Descent — பரம்பரை
Development — வளர்ச்சி
Dictatorship — சர்வாதிகார ஆட்சி
Diffusion — பரவல்
Distribution — பகிர்வு
Disintegration — கரைந்து அழிந்து போதல்
Divorce — மண விளக்கு
Dominate — ஆதிக்கம் செலுத்துவது
Draftsman — உருவப் படங்கள் வரைபவர்
Dribes — ஏவல்கள்
Durable — நிலைத்து நிற்கக்கூடிய, உறுதி யான
Duties — கடமைகள்
Dynamic — விசை இயக் காற்றல்
Dynamical — சுழற்சி

E

Economics — பொருளாதாரம்
Economic activity — பொருளாதார நடவடிக்கை
Economic system — பொருளாதார அமைப்பு
Educational system — கல்வியமைப்பு
Effect — விளைவு, பயன்
Ego — நான் என்னும் முனைப்பு,

| | | |
|---|---|---|
| Elements | — | மூலக் கூறுகள் |
| Elite | — | மேலவர் |
| Emergence | — | எழுச்சி |
| Emotions | — | மெய்ப்பாடுகள் |
| Endogamy | — | புறமணத் தடைமுறை, அகமணம் |
| Environment | — | சூழல், சுற்றுப்புறம் |
| Ethinical group | — | இனக்குழு |
| Ethics | — | அறவியல் |
| Ethnology | — | இனவியல் |
| Ethnocentrism | — | இனமயக் கொள்கை |
| Evolutionist | — | பரிணாம வாதி |
| Evolutionary | — | பரிணாமக் கோட்பாடு |
| Exhilaration | — | கிளர்ச்சியுற்ற நிலை, மகிழ்வு, பூரிப்பு |
| Exogamy | — | அகமணத் தடைமுறை, புறமணம் |
| Experience | — | அனுபவம் |
| Experiment | — | ஆய்வு |
| Extended family | — | பிரிவுபட்ட குடும்பம் |

F

| | | |
|---|---|---|
| Factor | — | காரணி |
| Fad | — | ஆர்வக் கொள்கை, வெறி, பித்து |
| Family | — | குடும்பம் |
| Family of orientation | — | பிறந்த குடும்பம் |
| Family Planning | — | குடும்பநலத் திட்டம் |
| Family of Procriation | — | புகுந்த குடும்பம் |
| Fanatic | — | வெறியர் |
| Fashion | — | கால வண்ணம், புதிய நடைபாணி |
| Fascinate | — | கவர்ச்சியுட்படுத்து, ஈர்த்துப் பற்று |
| Fatigue | — | களைப்பு |
| Fertility | — | கருவளம், செழுமை |
| Fetish | — | புனிதப் பொருள் |
| Forgetting | — | மறத்தல் |
| Forethought | — | முன்னறிவு |

Fore sight — முன்னேக்கு
Folk ways — பொது மக்கள் வழக்கு
Fundamental rights — அடிப்படை உரிமைகள்
Formal — புறவடிவம் சார்ந்த, ஒழுங்குபட்ட
Frustration — மண முறிவு
Fossil — புதை பொருள்
Fusion — ஒன்று சேர்த்தல்

G

Gens — குலம்
Geographic Environment — புவியியல் சூழ்நிலை
Geometrical — வடிவியல் சார்ந்த
Gregarious — குழு ஊக்கம்
Group — குழு
Group in — உட்குழு
Group interest — குழு விருப்பார்வம்
Group out — வெளிக் குழு
Group primary — ஆதாரக் குழு
Group secondary — வழிநிலைக் குழு

H

Habit — பழக்கம்
Habitate — இருப்பிடம்
Heredity — மரபுநிலைப் பாரம்பரியம்
Hierarchy — தரவரிசை
Homocide — பிறர் கொலை
Hypothesis — கருதுகோள்

I

Idea — எண்ணம், கருத்து
Ideal — குறிக்கோள்
Ideal law — இலக்கியல் நிறைவு
Illusion — திரிபுக் காட்சி
Imagination — கற்பனை
Impulse — வேட்கை
Individual — தனித்து
Industrial Revolution — உற்பத்திப் புரட்சி
Infatuation — மையல் மோகம், மைம்மயக்கம்
Infanticide — குழந்தைகளைக் கொல்லுதல்

Instinct — இயல்பூக்கம்
Institution — நிறுவனம்
Institutional structure — நிறுவன அமைப்பு
Integration — ஒருமைப்பாடு
ஒன்றி இயங்கல்
Inteligence — நுண்ணறிவு
Intimation — உள்ளார்ந்த பழக்கம்
Interaction — ஊடாட்டம்
Interest — விருப்பார்வம்
Intermediate group — இடைநிலைக் குழு
Interview — சொல்லாடல்
Intrinsic — உள்ளியல்பான
Intuition — உய்த்துணர்வு

J

Judge — முறை முதல்வர், நீதிபதி
Judgment — முறை மன்றத் தீர்ப்பு
Jury men — முறைகாண் ஆய உறுப்பினர்

K

Kin — சுற்றம்

L

Labouring class — பாட்டாளி வகுப்பு
Lag — இடைவெளித்துண்டு
Larva — முட்டைப் புழு
Law of Nature — இயற்கை விதி
Learning — கற்றல்
Lebirate — மதனி மணம்
Libido — காம உணர்ச்சி
Life Insurance — உயிர் ஒப்பந்தம்
Like begets — இனம் இனத்தைப் பெருக்கும்
Like Interest — ஒத்த் தன்மை உடைய விருப்
பார்வங்கள்
Lock out — கதவடைப்பு

M

Magic — மாய மந்திரம்
Mal adjustment — பொருத்தமற்ற

Mammals — பாலூட்டி வளர்க்கும் இனம்
Marxism — மார்க்சீயக் கொள்கை
Materialism — சடக் கொள்கை
Matriarchal Family — தாய்வழிக் குடும்பம்
Matricide — தற்கொலை
Mechanisation — இயந்திரப் படுத்தல்
Medittaranean — நடுநிலக் கடல் சார்ந்த பகுதி
Memory — நினைவு
Mental conflict — மனப் போராட்டம்
Method — முறை
Monogamous family — ஒரு தார மணக் குடும்பம்
Monopoly — ஏக உரிமை
Mores — வழக்கடிப்பாடு
Morphology — விலங்கு, தாவர வடிவ அமைப்பியல்
Motive — ஊக்கி
Mutation — மாற்றம்
Myth — புனைந்துரைக் கதை
Mythological — தெய்வத் தன்மை வாய்ந்த

N

Natural Environment — இயற்கைச் சூழ்நிலை
Natural Selection — இயற்கைத் தேர்வு
Neighbourhood — சுற்றுப்புறம்
Normal — இயல்பான
Nobles — பிரபுக்கள்
Nurture — வளர்ப்பு

O

Observation — உற்று நோக்கல்
Ontology — மெய்ப்பொருள் மூல வாராய்ச்சி
Optimum — உயிர் வாழ்வு வளத்திற்குப் பெரிதும் உகந்த சூழ்நிலை
Order — அமைதி
Organism — உயிரி
Oriental law — கீழ்த்திசைச் சட்டம்
Original races — கலப்படமற்ற இன வகை

P

Panic — பீதி, அச்சம்
Pathology — நோய்க் குணநூல்
Patriarchal family — தந்தை வழிக் குடும்பம்
Patricide — தந்தைக் கொலை
Penology — தண்டனை ஆய்வு நூல்
Perception — புலன் காட்சி
Personality — ஆளுமை
Pioneers — முன்னோடிகள்
Planets — கோள்கள்
Pluralism — பன்மைக் கொள்கை
Political Science — அரசியல் கலை
Politics — அரசியல் துறை
Poliantry — பல கணவருடைமை
Polygamy — பல்லரிவை மணம்
Polytheism — பல கடவுட் கோட்பாடு
Population — மக்கட் தொகை
Positive — ஐயத்திற்கிடமற்ற
Posture — தோற்ற அமைப்பு
Preference — முன்னுரிமை, சலுகை
Prescription — விதியமைப்பு, நீள்வரன்முறை, வழக்காறு
Primary group — முதனிலைக் குழு
Primitive — பண்டைக்காலச் சமுதாயம்
Primitive law — பூர்வீகச் சட்டம்
Process — செய்ம்முறை
Production — உற்பத்தி
Prohibition — விலக்குதல், தடைசெய்தல்
Programme — திட்டங்கள்
Probtariate — தொழிலாளி வகுப்பு
Proximity — அண்மை, நெருங்கிய தன்மை
Psychology — உளவியல்
Puberty — பருவமடைதல்

R

Race — இனம்
Race prejudice — இன வெறுப்பு
Rank — மதிப்புத் தரம்
Rationality — பகுத்தறிவு

Reaction — எதிர் விளைவு
Regression — பின் தங்குதல்
Religion — சமயம்
Right — உரிமை
Riot — கிளர்ச்சி, கலகம்
Ritual — சடங்கு
Role — வாழ்க்கைப் பங்கு

S

Scarcity — கிடைப்பு அருமை
Security — பாதுகாப்பு
Self sufficiency — தன்னிறைவு
Self Respector movement — தன்மான இயக்கம்
Sentiment — உணர்ச்சிக் கனிவு, ஆர்வக் கருத்து
Sensation — நுகர்ச்சி அலை
Serfs — கீழடியாட்கள்
Sexual promisarity — கட்டுப்பாடற்ற பாலினப் புணர்ச்சி
Skill — திறன்
Slander — அவதூறு, பொய்யுரைப் பழி.
Sociability — சமூகவியையியல்பு
Social Anthropology — சமூக மானிடவியல்
Social code — சமூக முறைமை
Social change — சமூக மாற்றம்
Social contract theory — சமூக ஒப்பந்தக் கோட்பாடு
Social control — சமூகக் கட்டுப்பாடு
Social environment — சமூகச் சூழ்நிலை
Social evolution — சமூகப் பரிணமம்
Social group — சமூகக் குழு
Social Heritage — சமூக மரபுரிமை
Socialism — சமூகப் பொதுமைக் கொள்கை
Social life — சமூக வாழ்க்கை
Social philosophy — சமூக மெய்யறிவுத் தத்துவம்
Social progress — சமூக முன்னேற்றம்
Social psychology — சமூக உளவியல்
Social science — சமூக அறிவியல் நிலை
Social structure — சமூக அமைப்பு
ocial stratification — சமூகக் தரப் பிரிவு

| | | |
|---|---|---|
| Social tension | — | சமூகப் பிணக்குகள் |
| Sororate | — | மைத்துனி மணம் |
| Sovereignty | — | இறைமை |
| Species | — | வர்க்கம் |
| Spectator | — | பொதுக் காட்சியாளர் |
| State | — | அரசு |
| Stampede | — | மிரள் திரள் ஓட்டம் |
| Status | — | மக்கள் கூட்டம் மிரண்டோடுதல் |
| Status quo | — | இருக்கும் நிலைமை |
| Strike | — | வேலை நிறுத்தம் |
| Structure | — | அமைப்பு |
| Struggle for existence | — | வாழ்க்கைப் போராட்டம் |
| Superstition | — | மூட நம்பிக்கை |
| Sympathetic | — | ஒத்த மாயம் |
| Symbol | — | சின்னம் |
| Sympathy | — | ஒத்துணர்வு |
| System | — | முறையமைப்பு |

## T

| | | |
|---|---|---|
| Taboo | — | விலக்கல் |
| Technique | — | வழி நுட்பம் |
| Technology | — | தொழில் நுட்பத்துறை |
| Termite | — | கறையான் |
| Theories | — | கோட்பாடு |
| Thoughtfull | — | சிந்தனை வளம் |
| Totemism | — | குலவழிக் குறியுடைமை |
| Tort | — | பொல்லாங்குக் குற்றம் |
| Totalitarian | — | சர்வாதிக்கார அரசு |
| Traditions | — | மரபு வழக்கு |
| Tribe | — | பழங்குடி மக்கள் |

## U

| | | |
|---|---|---|
| Unchanging | — | மாறுதலற்று |
| Under population | — | குறைவான மக்கள் தொகை |
| Universe | — | அகிலம், பூமி |
| Untouchability | — | தீண்டாமை |
| Usages | — | வழக்காறுகள் |

Utilitarian — பயனெறி முறையைப் பின்பற்றுபவர்
Utility — பயன்பாடு

## V

Validity — ஏற்புடைமை
Variation — வேற்றுமைப்பாடு
Verification — சரிபார்த்தல்
Vision — காட்சி
Vitalistic — உயிரீர்ப்பு வன்மை

## W

War — போர், போராட்டம்
Wasp — குளவி
We feeling — நாம் உணர்ச்சி
Welfare state — ஆக்க நல அரசு
Wested — உரிமை நிலவரமாக அளிக்கப்பட்ட
Will — மன உறுதி
Witch craft — சல்லியம், பில்லி சூனியம்
World citizen — உலகக் குடிமகன்

---